சிவமயம்.

# திருக்காறுயிற் புராணம்.

இதில்,

பத்தியரூபமான தோத்திரச்சருக்கம்,

தேவிகோட்டை

வித்துவசிகாமணி

வெ. அ. தி. மா.

ம்பரச்செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்றது.

கத்தியரூபமான மற்றைச்சருக்கங்கள்,

தேவிகோட்டை - வித்துவான்

சொ வேலுச்சாமிக் கவிராயரவர்களால்

வடமொழியிலிருந்து

மொழிபெயர்த்தெழுதப்பெற்றன.

இது

தேவிகோட்டை.

முத்து. கரு. அரு.

கருப்பஞ்செட்டியாரவர்களது

முயற்சியால்,

சென்னை:

கணேச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

ருத்ரோத்காரி௵ மகரரவி - 1924.

உ

சிவமயம்.

# திருக்காறாயிற் றேவாரம்.



## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

பண் - இந்தளம்.



திருச்சிற்றம்பலம்.

நீரானே நீள்சடை மேலொர் நிரைகொன்றைத்
தாரானே தாமரை மேலயன் றான்றொழுஞ்
சீரானே சீர்திக ழுந்திருக் காறாயி
லூரானே யென்பவ ரூனமி லாதாரே. (க)

மதியானே வரியர வோடுடன் மத்தஞ்சேர்
விதியானே விதியுடை வேதியர் தாந்தொழு
நெதியானே நீர்வயல் சூழ்திருக் காறாயிற்
பதியானே யென்பவர் பாவமி லாதாரே. (உ)

விண்ணானே விண்ணவ ரேத்தி விரும்புஞ்சீர்
மண்ணானே மண்ணிடை வாழு முயிர்க்கெல்லாங்
கண்ணானே கடிபொழில் சூழ்திருக் காறாயி
லெண்ணானே யென்பவ ரேதமி லாதாரே. (ங)

தாயானே தந்தையு மாகிய தன்மைக
ளாயானே யாயநல் லன்பர்க் கணியானே
சேயானே சீர்திக ழுந்திருக் காறாயின்
மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே. (ச)

கலையானே கலைமலி செம்பொற் கயிலாய
மலையானே மலைபவர் மும்மதின் மாய்வித்த
சிலையானே சீர்திக ழுந்திருக் காறாயி
னிலையானே யென்பவர் மேல்வினை நில்லாவே. (ரு)

# திருக்காருயிற் றேவாரம்.

ஆற்றானே யாறணி செஞ்சடை யாடர
வேற்றானே யேழுல கும்மிமை யோர்களும்
போற்றானே பொழிறிக ழுந்திருக் காருயி
னீற்றானே யென்பவர் மேல்வினை நில்லாவே. (௬)

சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்க
ளேத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்
காத்தானே கார்வயல் சூழ்திருக் காருயி
லார்த்தானே யென்பவர் மேல்வினை யடராவே. (௭)

கடுத்தானே காலனைக் காலாற் கயிலாய
மெடுத்தானை யேதமா கம்முனி வர்க்கிடர்
கெடுத்தானே கேழ்கிள ருந்திருக் காருயி
லடுத்தானே யென்பவர் மேல்வினை யடராவே. (அ)

பிறையானே பேணிய பாடலொ டின்னிசை
மறையானே மாலொடு நான்முகன் காணாத
விறையானே யெழிறிக ழுந்திருக் காருயி
லுறைவானே யென்பவர் மேல்வினை யோடுமே. (௯)

செடியாரும் புன்சமண் சீவரத் தார்களும்
படியாரும் பாவிகள் பேச்சுப் பயனில்லை
கடியாரும் பூம்பொழில் சூழ்திருக் காருயிற்
குடியாருங் கொள்கையி னார்க்கில்லை குற்றமே. (௰)

ஏய்ந்தசீ ரெழிறிக ழுந்திருக் காருயி
லாய்ந்தசீ ரானடி யேத்தி யருள்பெற்ற
பாய்ந்தநீர்க் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
வாய்ந்தவா றேத்துவார் வானுல காள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



சுவாமி திருநாமம் - கண்ணாயிரநாதர்.
தேவி திருநாமம் - கைலாசநாயகி.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்து வண்ணைநகர்

வித்துவசிகாமணி

ஸ்ரீலஸ்ரீ

**சி. சுவாமிநாத பண்டிதரவர்கள்**

இயற்றியது.

நேரிசை வெண்பா.

பொற்பமர்கா ருயிற் புராணவச னச்சிரமாய்ச்
* சிற்பொருளா ருந்தோத் திரச்சருக்க — நிற்புறவே
செய்தான் புலமைச் சிதம்பரவே ளச்சருக்கத்
தெய்தியபா முப்பத் திரண்டு.

ஸ்ரீரங்கம் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

பிர்ம்மஸ்ரீ

**வித்துவான் - குரு. சுப்பிரமணிய ஐயரவர்கள்**

இயற்றியது.

நேரிசை வெண்பா.

பொன்னமர்கா ருயிற் புராணவர சின்சிரத்திற்
றென்னமரு நற்றோத் திரச்சருக்க — மென்னு முடி
செய்தணிந்தான் றேவைச் சிதம்பரவேள் கற்றோருள்
ளெய்தணியாய்ப் பாராட்ட வே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

* சித்துப்பொருள் - என்பது, சிற்பொருளென வந்தது; "சிற்பொருட்பர மானபொருட்கெதி, ருற்ப விக்கு முபாயம தென்னவே" என வில்லிபுத்தூரார் பாரதத்தில் வந்தாற்போல.

# அறிவிப்பு



☞ இப்புராணத்து முதலாவது தோத்திரச் சருக்கத்திலுள்ள செய்யுட்களுக்கு அரும்பதவுரையும், விஷய விவரணமும் அடிப்பாகத்தில் அவ்வச்செய்யு ளிலக்கத்தையிட்டு வரையப் பெற்றுள்ளன.

இங்ஙனம்:

வெ. ஆ தி. மா.

சிதம்பரச் செட்டியார்,

தேவிகோட்டை

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ காளாகரு வனமென்னும்

# * திருக்காறுயிற் புராணம்.

## முதலாவது - தோத்திரச் சருக்கம்.

### பிரமோத கணபதி துதி.

சீராய பிரணவந்தன் றிருவுருவென் பதுதெளிந்துள்
ளாராயு மன்பரெதி ராநந்த மயமாய்நின்
றேராயுள் கல்விசெல்வ மீத்துவந்து காறுயி
லூராரும் பிரமோத வும்பல்பதங் கைதொழுவாம். (க)

---

* திருக்காறுயில்-என்பதில்; திருவென்பது மங்கள வடைசொல்; காறுயில் என்பது - காளாகரு என்னும் வடமொழிக் கிணங்க மொழிபெயர்த்துள்ள காரகில் என்னும் தென்மொழியின் மரூஉமொழி; காளாகரு என்னும் வடமொழிச் சந்திப்பதங்களுள் காளம் என்பதற்குக் கருமை எனவும் அகரு என்பதற்கு அகில் எனவும் பொருள்; தமிழில் கார் என்னும் நிறப்பெயரும் அகில் என்னும் மரப்பெயரும் புணர்ந்து காரகில் என்றாகிப் பின்னர்க் காறுயிலென முற்கால வுலகவழக்கின் மருவிய தென்றறிக; அதனை இக்காலத்தார் "திருக்காரவாசல்" என வழங்குகின்றனர்.

க. ஏர்-மேழிச்செல்வம்; இதனை, "ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும், வாரி வளங்குன்றிக் கால்" என்னுந் திருக்குறளா னுணர்க; அழகெனினும் பொருந்தும். ஈத்து-ஈந்தென்னுஞ் சொல்லின் வலித்தல் விகாரம்; "ஈத்துவக்கு மின்பம்" எனவும் "மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்" எனவும் திருக்குறளில் வந்தாற்போல.

பரமோதக நாச பராயணருக்
கரமோதக பால வனத்தமர்பு
கரமோதக சம்பு கவித்தநுகர்
பிரமோதக ணேச பிரான்கழலே. (உ)

## கண்ணுயிர நாதர் துதி.

பாயிர மறைக்கு மெட்டாப் பரம்பரன் பசுவர்க் கத்தை
யேயிரு வினையுந் தீர்வு மெய்த்தருள் கொழித்துக் காக்க
மாயிரு ஞாலத் தோங்கும் வளத்தகா றுயின் மேவி
யாயிரங் கண்கொ ளீச னடிக்கம லங்கள் போற்றி. (௩)

## கைலாச நாயகி துதி.

செங்கமலை வாணியுறை காறுயி லாயிரங்கட்
சிவன்செம் பாதி
யங்கமதிற் றங்கியுயி ரத்தனையுஞ் சுகாநுபவ
மாரச் சந்தி
கங்குல்பக லெனுமூன்று காலத்தும் பொதுச்சிறப்பிற்
கடைக்க ணித்து
மங்களத்தைச் செய்தருளுங் கைலாச நாயகியை
வாழ்த்தி வாழ்வாம். (௪)

---

உ. பரம்-கவசம்; மேலான பொருள் எனினுமமையும்; மோது அக நாச பராயணருக்குக் கழலே பரமெனக் கூட்டுக. பராயணர் - குறிக்கொள் வோர்; விருப்புடையோ ரெனினுமமையும்; அரமோதம்-சிவாநந்தம். கபால வனம் - காறுயிற்கோர் பெயர். அமர்பு - செய்பு என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். சம்பு-நாவற்பழம். கவித்தம்-விளாம்பழம்.

௩. பாயிரம்-வரலாறு. எய்த்தல்-அறிதல்; இது "எய்யா மையே யறியா மையே" எனத் தொல்காப்பியச் சூத்திரத்துக் கூறிய எய்யாமை என்னும் எதிர்மறைச் சொற்கு மாறுய வுடன்பாட்டுச் சொல்லென வறிக.

மருமகளாம் வள்ளியைத்தன் மகற்கீயப் பெறும்போது
மானு ருக்கொ
டிருமகள்சம் பந்திநிக்குத் தானுமொரு மானாகிச்
சிவணன் மானப்
பெருமகிழ்வாற் றாயிழந்த கன்றுணப்பான் மானுருக்கொள்
பிறங்கல் வேந்த
னொருமகளைக் காருயிற் கைலாச நாயகியை
யுள்ளம் வைப்பாம். (௫)

## நடராஜர் துதி.

துடியினிற் படைப்ப ழிப்புச் சுசிகர சுசிக ரத்தி
னெடியவன் றொழில மைப்பி னின்றதா ளின்ம றைப்போ
ரடியெடுத் துளதின் முத்தி யைந்தொழி லைந்தங் கத்தாம்
படியுயர் தாண்ட வஞ்செய் யாண்டவன் பதங்கள் போற்றி. (௬)

## சிவகாமி துதி.

காத்தலொழித் தல்படைத்தல் கரப்பருள லைந்துதொழிற்
கூத்தியற்றும் படிமேருக் குன்றேந்துஞ் செய்யசடைத்
தீர்த்தனைச்செய் துயிர்யாவுந் தெரிசிப்பத் தன்விழியாற்
பார்த்தருளுஞ் சிவகாமி பாதமுடி மீதணிவாம். (எ)

௫. திருமகள் - இலக்குமி; இலக்குமி வள்ளியம்மையைப் புத்திரியாகப் பெற்றபோது மானுரு வெடுத்தமையை "திருவி ளையகி மாமனும் பழகிய சிறப்பாற், பொருவி லாதபொன் மானுமாய்ப் பூத்தன ளொருபெண்" என வரும் விநாயக புராணச் செய்யுளா னுணர்க. சம்பந்திநி - மருமகளுக்கும் மருமகனுக்கும் தாயர்கள். சிவணல் - அளவளாவல்; நட்பாடலெனினும் அமையும். கைலாச நாயகியம்மையார் இத்தலத்தில் தாயிழந்த கன்றிற்குப் பாலூட்டும் பொருட்டு மானுருவெடுத்த சரித்திரத்தை இப்புராணத்து மிருகார்ப்ப காவனச்சருக்கத்திற் காண்க.

௬. சுசி கர சுசி கரம் - சுத்தத்தைச் செய்கின்ற அக்கினியை யேந்திய கை, சுசி - சுத்தம்; கரம் - செய்வது; சுசி - அக்கினி; கரம் - கை; இவை வடமொழி; புணர்ச்சியும் அது.

## தியாகராஜர் துதி.

போகியின்பாற் பெற்றுமுசு குந்தநர பதியிந்தப்
பூத லத்தி
லேகிமுனம் பதிட்டைசெயு மெழுமூர்த்தி தம்முளொன்று
யிளையோன் வாம
பாகியொடுங் காருயிற் பதிமருவித் தொழுவார்க்குப்
பலன்க ணான்குந்
தேகியெனு முன்னருளுந் தியாகேசப் பெருமானைச்
சிந்தை செய்வாம். (அ)

## கந்தர் துதி.

ஊறுசெய் கொடுங்கோ லெங்கு மோச்சிய சூரன் முன்னும்
வீறுசா லசுர ரைக்கை வேல்விடுத் தழித்து வேதன்
றேறொணுக் குடிலார்த் தத்தைச் சிவபெரு மானுக் கோது
மாறுமா முகத்து வள்ள லடிக்கம லங்கள் போற்றி. (கூ)

## வயிரவர் துதி.

வெள்ள வேணி விமலன் பரமென
வுள்ள வாறறிந் தும்பர்க ளோடுய
வெள்ளும் வேத னிருஞ்சிரத் தொன்றினைக்
கிள்ளி பாதபங் கேருகம் போற்றுவாம். (க0)

அ. போகி - இந்திரன். பிரதிட்டை - பதிட்டை எனவந்தது; "பழகிய பரனை யானுப் பரிவினாற் பதிட்டை செய்து" எனத் திருவிளையாடற் புராணத்து வந்தாற்போல. இளையோன்-கந்தஸ்வாமி. வாமபாகி - இடப்பாகத்திலுள்ள பார்வதி. நான்குபலன் - தர்மார்த்த காம்ய மோக்ஷம். தேகி யெனல்- யாசிக்கின்றே னென்று கூறுதல்.

க0. கிள்ளி - பெயர்.

## வீரபத்திரர் துதி.

மேத நாதன் விமல சிவனெனும்
வேத நீதி விளங்கிய தக்கனந்
நாத னின்றி நடாத்திய வேள்வியை
மோதி பாத முடிக்கு முடித்துநாம். (கக)

மும்மல நீங்க வாங்கண் முத்தியிற் பதிக்கு ளான்மா
மெய்ம்மகிழ் வறிவா யத்து விதக்கலப் புறுமென் றர்த்தங்
கொண்மென மூன்றி ரண்டங் குலிதனித் தனிபி ரித்த
கைம்மலர் காட்டு மாசான் கான்மலர் கருதி வாழ்வாம். (கஉ)

கக. மேதநாதன் - யாககர்த்தா; யாககர்த்தாச் சிவபெருமானே என்பதை "விச்சுவமென் றெடுத்தியம்ப விளங்குவா னொருமுகுந்தன், விச்சுவத்திற் கதிகனென விளங்குவான் பரமசிவ, னெச்சனென யாவர்களு மியம்புவார் மாயவனே, யெச்சவதி பதிசிவனென் றெடுத்தியம்பு மெம்மறையும்" என வருமாற்ரு னுணர்க. மோதி-தகர்த்தவன்; இது - பெயர். "விளங்கிய" என்பதை, செய்யிய வென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சச் சொல்லாக்கி அது மோதி என்னும் பெயர் கொண்டுமுடிந்ததாக வைத்துப் பொருள் கோடலுமொன்று; அதனையே செய்தவென்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சச் சொல்லாக்கி அதுதக்க னென்னும் பெயர்கொண்டு முடிந்ததாக வைத்துப் பொருள் கோடலுமொன்று; இவற்றுள், வினை யெச்சப்பொருள்கோள், வீரபத்திரப் பெருமானது லோகோபகார விசேஷத்தையும், பெயரெச்சப் பொருள்கோள், இப்பெருமானது தக்ஷக்ருத புத்திபூர்வபாவ தண்டனா விசேஷத்தையு முணர்த்தின. தண்டனையும் கிருபாமயத்த தென்பதனை "வேகியானுற் போற்செய்த வினையினை வீட்டலோரார்"[1] எனவும் "வேடமெல்லா மருள்புரி தொழிலென்றோரார்"[2] எனவும் "அழிப்பிளைப்பாற்றல் * * * * பார்த்திடினருளே யெல்லாம்" எனவும் வருஞ் சிவஞான சித்தித் திரு விருத்தங்களானும் "பரமசிவோர்முகர் செய்த பாவம், புண்ணியமாகவும்; பரமசிவ பராமுகர்செய்த புண்ணியம், பாவமாகவும் ஆய்விடு மென்பதனை "அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறமதாகும், பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும், வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி, நரரினிற் பாலன் செய்த பாதகநன்மையாய்த்தே" எனவரும், அச்சித்தி விருத்தத்தானு முணர்க. முடித்தும் - தன்மைப் பன்

கஉ. கொண்ம் - கொள்ளும்; இது உயிர் மெய்யேகிய செய்யுமென் முற்று. அங்குலி - விரல்.

## திருக்காருயிற் புராணம்.

### திருநந்திதேவர் துதி.

சந்ததங் கைலை வெற்பிற் சந்நிதி விலக்குஞ் சூரல்
செந்தளிர்க் கையிற் றாங்கிச் சிவகணத் தலைமை பூண்டு
சந்திர மௌலி பாற்சித் தாந்தசாத் திரமு ணர்ந்த
நந்திதா ணளினப் போது நாமுடிக் கணிதல் செய்வாம். (கங)

### திருஞான சம்பந்தர் துதி.

செந்திருவாய்க் குமைமுலைப்பால் செவிக்குச் சின்னஞ்
சிவிகைகுடை திருமேனிக் கியோக மூலர்
மந்திரவா சனைநாசிக் கிடபா ரூட
வடிவுகண்ணிற் கெனச்சத்தப் பரிச ரூப
கந்தரச வின்புதவி ஞானா நந்த
கநீபூத வொளிக்கலப்புக் கல்யா ணத்திற்
றந்தசிவன் காதலிப்பத் தமிழ்வே தஞ்சொல்
சம்பந்த ரம்புயத்தா டலைமேற் கொள்வாம். (கச)

### அப்பர் துதி.

பூண்டிடு கண்டி நீறு புறத்துறப் பாகத் தம்மை
யாண்டவ னெழுத்தோ ரைந்து மகத்துறப் பாகக் கொண்டு
மூண்டெழுஞ் சமண ராய முரட்டுவெம் பகைக டந்த
தாண்டக வேந்தர் பாதந் தலைமிசைக் கொண்டு வாழ்வாம். (கரு)

கங. சூரல் - பிரம்பு.

கச. திருஞான சம்பந்தர்க்குத் திருமுலைப்பால் இடபாரூட தரிசனத்தைச் சீகாழியிலும், முத்துச் சின்னம் சிவிகை குடைகளைத் திருநெல்வாயிலரத்துறையிலும், தமிழ் மணங் கமழ்கின்ற தெனக் கூறும்படி திருமூலநாயனாரருளிச் செய்த திருமந்திரத் திருமுறைச் சுகந்தத்தைத் திருவாவடுதுறையிலும் சச்சிதாநந்த சோதி சொரூபக் கலப்பை நல்லூர்ப் பெருமணமென்னும் ஆச்சா புரத்திலும், சிவ பெருமான் அநுக்ரஹித்தனர். பஞ்சேந்திரியங்களும் அவைகளின் விஷயமாகிய பஞ்சதன் மாத்திரைகளும் செய்யுளமைதி நோக்கி முறைபிறழ வைக்கப்பட்டன. கநீபூதம் - பிரிக்கக்கூடாத பாரம்ய சேர்க்கை யுடையது; இது வடமொழி.

கரு. முரட்டு வெம்பகை - முரணையுடையதாகிய வெம்பகை.

## சுந்தரர் துதி.

மாது பாலரற்
றாது போக்கிய
போத சுந்தரர்
பாதம் போற்று வாம். (கசு)

## மாணிக்க வாசகர் துதி.

உய்கைதருஞ் சித்தாந்த ஞானசாத் திரப்பொருளை
யுபதே சித்த
மைகெழுகந் தரகுருவாஞ் சிவபெருமான் றன்னைக்கோ
மாயு வென்னும்
பொய்கழலாப் புரவிவிற்கும் வர்த்தகனுய்ப் போந்தமையும்
போதா தென்று
வைகைமண்முன் சுமப்பித்த மாணிக்க வாசகர்தாள்
வணங்கி வாழ்வாம். (கஎ)

## நாயன்மார் அறுபத்துமூவர்

தேவ தேவன் றிருவடித் தாமரைப்
பூவைப் பத்தி புரசர மாகவே
சேவை செய்து சிறக்கு மறுபத்து
மூவர் பாத முடிக்கணி யாக்குவாம். (கஅ)

---

கஎ. கோமாயு - நரி. கழலாமை - நீங்காமை.

கஅ. பத்தி புரசரமாகச் சேவித்தல் - பத்தியை முன்னிட்டு வணங்கல்; புரசரம் - முன்னுறுவித்தல்; இது வடமொழி.

## திரிகாலத் திருக்கூட்டத்தார் துதி.

கத்த னைச்சிவ னைக்கறைக் கண்டனைப்
பொத்து தேசனைப் பூத பவுடிய
வர்த்த மானம் வழிபடு மன்பர்தாட்
சித்தம் வைத்தவர் கண்ண திருவெலாம். (கக)

## சண்டேசர் துதி.

கண்டி யாரும் கலங்கா வகைகடு
மண்டி துய்த்துக் கழித்தநின் மாலிய
வுண்டி மாலை சுவீகரித் தோங்குசீர்ச்
சண்டி பாதந் தலைமிசைக் கோடுமால். (உ0)

## சேக்கிழா ரடிகள் துதி.

நெடியவன் பிரமன் காணு நின்மல னுலகெ லாமென்
றடியெடுத் துதவ வன்ப ரறுபத்து மூவர் காதை
படியுயப் பாடித் தந்த பாக்கியச் சேக்கி ழார்தாண்
முடிமிசைக் கொண்டார் மேவார் மும்மலக் குறும்பை மாதோ. (உக)

கக. பொத்து தேசன் - உலகமெங்கும் வியாபித்தலான் மூடிய பெருமையை யுடையான்; பொத்துதல் - மூடுதல்; தேசு - பெருமை; கீர்த்தியுமாம் "பொத்துதே சொளியதாகிப் போக்கொடு வரவில்லாதஞ் சத்தியே" என வரும் விநாயக புராணச் செய்யுளும் "சீர்த்ததிண் புவன முழுவது மேனைத் திசைகளோ டண்டங்க ளனைத்தும்-போர்த்ததம் பெருமை" எனவரும் திருவிசைப்பாச் செய்யுளும் இங்கே சிந்திக்கற்பாலன. பூதம் இறந்தகாலம். பவுடியம்-எதிர்காலம். வர்த்தமானம்-நிகழ்காலம்.. கண்ண-குறிப்பு வினை முற்று.

உ0. கடுமண்டி - விடத்தை வாரியுண்டவன்; மண்டி - பெயர். சண்டி-சண்டேச நாயனுர்; இதனை "ஆங்கணைந்த சண்டிக்கு மருளியன்று தன்முடிமே லலர்மாலை யளித்த ரோன்றும்" எனவரும் திருப்பூவணத் தேவாரத்தா னறிக.

### சந்தாந குரவர் நால்வர் துதி.

திருவெண்ணெய் நல்லூர்மெய் கண்ட தேவர்
திருத்துறையூ ரருணந்தி தேவர் சென்ம
மருவெண்ணெய் தற்றெழிற்பெண் ணாக டத்து
மறைஞாந சம்பந்தர் மன்று ளாடி
யுருவெண்ணெய் தில்லையுமா பதியார் நால்வ
ருயிர்பதிக்குண் மலக்குறும்பற் றறுமுத் திக்குச்
சருவெண்ணெய் தீயிரும்பைச் சாமி யங்கொள்
சந்தாந குரவர்பதந் தலைமேற் கொள்வாம். (உஉ)

### இலக்குமி துதி.

சார்பு ளார்பாற் பெருஞ்செல்வந் தங்கு மாறு கடைக்கணித்துக்
கார்பொ ருவுஞ்சீர் நீலநிறக் காவற் கடவுட் கோர்சிறப்புப்
பேர்பொன் னிறத்தோ னெனக்கற்றோர் பேசற் கேது வாயவன்றன்
மார்பி லிருக்குஞ் செய்யதிரு மாதைப் பணிந்து மனமகிழ்வாம். (உங)

### சரசுவதி துதி.

ஆரதி நுட்ப வித்தை யார்வலர்க் களித்தீ சாந
பூரதி நாத வேதப் புரவியைச் செலுத்தத் தக்க
சாரதி நாவொ டும்வெண் டாமரைத் தவிசில் வாழும்
பாரதி யுபய பாத பங்கயம் பணிதல் செய்வாம். (உச)

---

உஉ. இரண்டாமடியில்-சென்மம் மரு எள், எனப்பிரித்துச் ஜநனமயக்கத்தை இகழ்கின்ற எனப்பொருள் கூறுக; எள்ளுதல்-இகழ்தல்; அவ்வினைத்தொகை மறை ஞாநசம்பந்தரென்னும் பெயர்கொண்டது; மரு மயக்கம்-இதனை மருக்கொள்ளி என்னும் உலக வதநதியா லறிக; இனி, சென்மம் மருவு எள், எனப்பிரித்துச் ஜநனமடைதலை இகழ்கின்ற எனக்கோடலுமொன்று; இவ்வாறு கொள்வதில், மருவு-முதனிலைத் தொழிற் பெயர். மூன்றாமடியில்-மன்றுள் ஆடி உரு எண் எய் தில்லை உமாபதியார், எனப்பிரித்து-நடராஜப்பெருமானுடைய திருமேனியின் கண்ணே சித்தத்தை அந்தர்யாக பூஜாமார்க்கத்தாற் பிரயோகிக்கின்ற தில்லைவாழந்தணராகிய உமாபதியார் எனக்கூறுக; எண் - சித்தம். எய் என்னும் வினைத்தொகை உமாபதியாரென்னும் பெயர்கொண்டது. நான்காமடியில் - முத்திக்கு எள் சருவு நெய்யை தீசருவு இரும்பை சாமியம் கொள் எனப் பிரித்து - மோக்ஷ லக்ஷணத்திற்கு எள்ளுடன் மருவிய நெய்யையும் தீயுடன் மருவிய இரும்பையும் ஒப்புமையாகக் கொண்ட குரவரெனக் கூறுக; சருவுதல் - மருவுதல்; அது எள் தீ இரண்டொடுங் கூட்டப்பட்டது; சாமியம் - ஒப்புமை.

உச. ஆர் - நிறைவு. ஈசாநபூரதி - ஈசாநனென்னும் பேர்பெற்ற பூமித்தேரை யுடைய சிவன்; இது வடமொழி. சாரதி - ஈண்டுப் பிரமா. பாரதி-சரசுவதிதேவி. ஆர்வலர் - அன்புடையோர்.

## தமிழாசிரியர் துதி.

நகத்தடிவா ரப்புனலி னலைந்தவர்நோய் மாறவிற்றன்
மகத்துவமோ ரப்பொதியம் வாழ்ந்துசிவை வளர்த்தொளிர்சண்
முகத்தருவின் கலைப்பிழிவாய் மொழிக்கலனுற் செவித்தேக்கு
மகத்தியமா முனிக்கரசி னடிக்கமல முடிக்கணிவாம். (உரு)

## திருமுறைத் துதி.

அமிழ்தினு மினிய வாய்மே லாஞ்சிவ பரத்து வத்தை
யுமிழ்தரும் புயலா யற்பு தோத்தம முளவாய்ச் சைவங்
கமழ்தரு மலராய் ஞானக் களிப்பருள் வேத சாரத்
தமிழ்மறை முதலீ ராறு முறைகளைச் சானஞ் செய்வாம்.(உசு)

## சித்தாந்த சாத்திரத் துதி.

பொங்கற்பப் புறச்சமய விருணீத் தென்றும்
போக்குவர வற்றதிவா கரனைப் போலத்
திண்கற்ப காலபுரா தநமா யோங்குந்
திருவியலூ ருய்யவந்த தேவர் செய்த
வொண்கற்பிற் கினியதிரு வுந்தி யாதி
யுயர்தில்லை யுமாபதியா ருபக ரித்த
சங்கற்ப நிராகரண மந்த மாஞ்சித்
தாந்தநூ லீரேழைச் சானஞ் செய்வாம். (உஎ)

உரு. நகத்தடிவாரப்புனல் - குற்றால வருவிநீர். சிவை - பார்ப்பதி. சண்முகத்தரு - அறுமுகக கடவுளாகிய கற்பகவிருக்ஷம். கலைப்பிழி - சாத்திரமாகியதேன். வாய்மொழிக்கலன் - திருவாயினின்றெழுந்த உபதேசச் சொல்லாகிய ஆள்கலம். தேக்குதல் நிறைத்தல். முனிக்கரசாவார் அகத்தியரே யென்பதனை "முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்-பனிக்கடலு முண்ணப் படும்" எனவரும் நன்னெறிச்செய்யுளா னுணர்க.

உசு. சானம் - தியானம்; இப்பிரயோகத்தை "கருடசானத்திற நீர்வி டம்போற் ருன்" எனவரும் சிவஞானபோத வெண்பாவானும், "அச்சான சானசுருதி" எனவரும் சேதுபுராணச் செய்யுளானு முணர்க.

உஎ. ஓங்கும் - என்னும் பெயரெச்சம் நூலென்னும் பெயர்கொண்டு முடிந்தது. போக்கு வரவற்ற திவாகரனெனவே ஞானாதித்த னென்றதாயிற்று; அவற்குப் போக்குவரவின்மையை "ஹ்ருதாகாசே சிதாதித்யே ஸதா பாஸதி பாஸதி, நாஸ்த்தமேதி நசோதேதி" என மைத்திரே யோபநிஷத்து இரண்ட வது அத்தியாயத்துக் கூறுமாற்ரு னுணர்க. மூன்ருமடியில், கற்பு - கற்றல். திருவுந்தியார் ஆதியாகவும் சங்கற்பநிராகரணம் அந்தமாகவும் எண்ணப்படுவன, பதினன்கு சித்தாந்த நூல்க ளென்றறிக.

## திருக்காறாயிற் றலோபாசகர் துதி.

தேவர்குழா முனிவர்குழாந் தேவ சர்மா
சிவசர்மாக் கிநிசர்மா திரிகன் மஞ்செய்
மூவர்திரு மாதுபதஞ் சலிபு லிக்கான்
முநியநந்தன் சநகாதி முனிவர் விண்ணின்
காவலன்சீர் முசுகுந்தன் கபிந்தன் சோமன்
கபாலமுநி காண்டீபன் கருடன் கங்கை
யோவருகா லாக்கினிப்பே ருருந்தி ராதி
யுபாசகரைத் தபாதிறைஞ்சி யுள்ளம் வைப்பாம். (உஅ)

சாலுநளன பதுமமன்னு மரசா மாகந
தத்துவிசன் றுவிசவித்யா தரனில் லேம
மாலைசந்தி ராங்கதமன் னவனில் லாளே
மாங்கதைவீ ரேந்திரமன் மனோர மைப்பெண்
பாலைசந்தி ரவதனைகோ மதிகா மாட்சி
பதுமைசரஸ் வதிகவுரி பாயும் பார்வைச்
சேலமைசந் திரகாந்தி லலிதை யென்னச்
செப்பணங்கொன் பதின்மரையுஞ் சிந்தை செய்வாம் (உகூ)

## சத்தவிடங்க ஸ்தலத் துதி.

முத்த ருறையு மாரூர் பாய் மூர்கோ ளிலிகா றாயிலதி
பத்தர் பணிசெய் கடனாகைப் பதிநள் ளாறு வேதவனஞ்
சத்த விடங்க ரெழுந்தருளுந் தலமென் றேழுஞ் சஞ்சரித்துச்
சித்த மகிழ்வாற் றுதிசெய்து சேவிப் பாரைச் சேவிப்பாம் (௩0)

---

உஅ. திரிகன்மம் - முத்தொழில். தபாமை கெடாமை.

உகூ. சாலுதல் - (அரசர்க்குரிய வெல்லாக்குணங்களும்) அமைதல். துவிஜ பதமிரண்டும் ஜாதியை யுணர்த்த வந்தன. இல் ஏமமாலை - மேற்கூறிய வித்யாதரன் மனைவியாகிய ஏமமாலை என்க. சந்திராங்கதமன் - சந்திராங்கத ராஜன்; அவன் இல்லாள் ஏமாங்கதை - அந்தச் சந்திராங்கத ராஜனுடைய மனைவியாகிய ஏமாங்கதை யென்க. இந்நால்வரும் மிதுன தம்பதிகளாய் உபாசித்தமையால் விலக்காது சேர்த்துக் கூறப்பட்டனர்.

௩0. அதிபத்தர் - அறுபத்து மூன்று நாயன்மார்களு ளொருவர். சஞ்சரித்தல் - இங்கே யாத்திரைசெய்தல்.

## நூற்பயன்.

உத்தமமென் றுலகுபுகழ் காறுயிற் புராணகதை
 யுரைப்போர் கேட்போர்
புத்திரர்சம் பத்துமனை புகழாயு ளோங்கவிக
 போகந் துய்த்துச்
சத்தசத்துச் சதசத்தின் றராதரமோர் சித்தாந்த
 சைவ ஞாந
வித்தகரா யத்துவித சிவாநந்த பரபோக
 மேவு வாரால். (௩க)

## வாழ்த்து.

பூவுலகிற் காறுயி லாயி ரங்கட்
 புநிதனொடு கைலாச நாய கிப்போர்த்
தேவிகண பதியினொடு சித்தி புத்தி
 சேந்தனொடு வள்ளிதெய்வ யானை வாழ்க
காவலன்வா னவர்மறையோர் யாகம் வேதா
 கமங்கண்டி நீறுபஞ்சாக் கரங்கள் வாழ்க
சேவுயர்த்தா ராலயத்தி லணுக்கத் தொண்டர்
 திருப்பணிசெய் வோர்குலமுஞ் செழித்து வாழ்க. (௩உ)

ஸ்ரீ குஞ்சிதபாதந் துணை.

திருச்சிற்றம்பலம்.

பத்திய ரூபமான

## தோத்திரச்சருக்கம்.

முற்றிற்று.



௩க. சத்து - சத்தெனப் படுகின்ற பதி; அசத்து - அசத்தெனப் படுகின்ற பாசம். சதசத்து - சதசத்தெனப் படுகின்ற பசு. இம்மூன்றும் இவ்வாறு கூறப்படுதலை "எங்குஞ் செறிசிவ மிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்" எனவும், "சத்தசத் தறிவ தான்மாத் தான்சத்து மசத்து மன்று, நித்தனுய்ச் சதசத் தாகி நின்றிடு மிரண்டன்பாலும்" எனவும், "அறிவிக்க வறிதலானு மழிவின்றி நிற்றலானுங், குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவதியிருக்கு" எனவும், "அரனுளத்தே வரவரவர் திடுவென்பின் மலமான தறுமே" எனவும், "பின்பு காயஞ் சேராத வகைதானுந் தேயுமன்றே" எனவும், "அருக்கன் புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம் போமே" எனவும், வருஞ் சிவஞானசித்தித் திருவிருத்தங்களா னுணர்க: இவ்வாறு கூறும் நூல் சித்தாந்தநூல்; இந்நூலை யாசிரயித் தொழுகுபவரே சைவஞாந வித்தகரெனவும் அத்துவித சிவாநந்த பரபோக மேவுபவரெனவும் உணர்க; தராதரம் - உயர்வு தாழ்வுகள்.

# நைமிசாரணியச் சருக்கம்.

இப்பூவுலகத்திலே புண்ணியஸ்தானங்கள் பலவற்றுள்ளுஞ் சிறந்து நைமிசாரணியம் என்று பிரசித்திபெற்ற தபோவனம் ஒன்றுண்டு அது தன்பால் இருந்து தவம்புரிவோர்கள் விரும்பிய பலனை எளிதிற் கொடுக்கும் பெருமை வாய்ந்தது. முற்காலத்திலே முனிவர் யாவரும் பிரமதேவ ரிடத்துச் சென்று வணங்கி நின்று "சுவாமி! நாங்கள் மனம் அடங்கித் தவஞ் செய்தற் பொருட்டு ஒரு பரிசுத்த ஸ்தானத்தை வகுத்தருளுவீர்" என்று பிரார்த்திக்க; அவர் தமது திருக் கரத்துள்ள தருப்பை ஒன்றை நேமியாகச்செய்து "முனிவர்களே! இது சென்று தங்கின இடமே பரிசுத்த ஸ்தானமாகும். அவ்விடத் தில் நீங்கள் எளிதில் மனம் அடங்கித் தவம்புரியத் தகும்" என்று ஆஞ்ஞாபித்து விடுப்ப; அது சென்று தங்கின ஸ்தான மாதலின் அவ்வனத்துக்கு நைமிசாரணியம் என்று பெயர் விளங்குகின்றது. அங்கே சௌனகர் முதலிய முனிவர்கள் தவஞ்செய்து கொண்டிருந் தார்கள். அப்பொழுது பதினெண் புராணங்களையும் விரும்பிக் கேட்பார்க்கு உபதேசிக்கின்ற அருந்தவச் சூதமுனிவர் அவ்வனத் துக்கு வந்தார். உடனே அம்முனிவர்கள் இருக்கைவிட் டெழுந்து எதிர்கொண் டழைத்துவந்து ஆசனத்திருத்தி விதிப்படி அருச்சித் துச் "சூதமுனிவரை நோக்கி" மகா புத்திமானும் சர்வ சாஸ்தி ரங்களையும் உணர்ந்தவராயும் உள்ள முனிபுங்கவரே! நாங்கள் இப் பொழுது தேவரீரிடத்திற் கபாலவன மகிமையைக் கேட்க விரும்பு கின்றோம். எங்களிடத்திற் கிருபையுடன் அருளிச்செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க; அதுகேட்ட சூதமுனிவர் அன்புடன் முக மலர்ந்து, "முனிவர்களே! நாமும் கிருதார்த்த ராகும்படி நீங்கள் கேட்ட கபாலவன மகிமையை உங்களுக்குச் சொல்லுகின்றோம். ஆதரவுடன் கேளுங்கள்" என்று, ஆதிதேவராயும் மகாதேவராயும் உள்ள சிவபெருமானைத் தியானித்துக்கொண்டு அருள்வழிநின்று சொல்லுகின்றார்.

சித்தர் சாரணர் முதலியோராற்* சூழப்பட்டு மனோரம்மியம் வாய்ந்த மேருமலையின் சிகரத்திலே, திவ்ய ரத்தினங்க ளிழைக் கப்பட்ட முத்திமண்டபத்திலே, அநேகவித மேற்கட்டிகளுடன் விளங்குகின்ற நவரத்தின சிங்காசனத்தில் வீற்றிருக்கின்றவராயும் அடியார்களுடைய துன்பத்தை நீக்குபவராயும் எல்லா உலகங்

களையும் காத்தருளுகின்றவராயும் உள்ள சிவபெருமானைச் சனகர் முதலிய முனிபுங்கவர்கள் வணங்கித் துதித்துநின்று "சச்சிதானந்த சொரூபியாகிய சிவபெருமானே! உலகத்திலுள்ள சமஸ்த சீவர்களும் சமுசார பந்தத்திலிருந்து எவ்வாறு நீங்குவார்கள்? அவர்களுக்குக் காமம் குரோத முதலியவைகளா லுண்டாகும் தோஷங்கள் எவ்விதம் நீங்கும்? பிரமன் விட்டுணு முதலிய காரணேசுரருக்கும் ஈசுவரனுயுள்ள தேவரீரிடத்தில் அன்பு எவ்வாறு உண்டாகும்? கருணை கூர்ந்து திருவாய் மலர்ந்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, கருணைக்கடலாகிய சிவபெருமான் திருவுள மகிழ்ந்து அருளிச் செய்கின்றார்.

முனிவர்களே! நீங்கள் வினவியது நன்று. கேட்ட மாத்திரத்தில் சகல துன்பங்களையும் நீக்குவதாயும், தன்னை வழி படுவோர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தம் நான்கையும் தந்தருளுகின்ற சகசிராக்ஷ பரமேசுவரனிடத்தில் அன்பை விளைவிப்பதாயும் உள்ள கபாலவன மகிமையை உங்களுக்குச் சொல்லுகின்றோம்.

பூமியிலே கபாலவன மென்று ஒரு புராதன ஸ்தலம் இருக்கின்றது. அங்கே பிரமன் முதலிய காரணேசர்களால் வணங்கப் படும் சகசிராக்ஷ பரமேசுவரரும், கைலாசப் பிரஸ்தர ரூபமாய் விளங்குகின்றமையால் கைலாச நாயகி யென்றும் ஆன்மாக்கள் செய்யுங் குற்றங்களைப் பொறுத்தருளுகின்றமையால் க்ஷமாவதியென்றும் மஞ்சுளை யென்றும் காரணப்பெயர் பெற்று விளங்கும் ஸ்ரீபஞ்சதசாக்ஷர சொரூபிணியாகிய பராசத்தியாரும் நித்திய சாந்நித்தியஞ் செய்கிறார்கள். முன்னொரு காலத்திலே பிரமன் முதலிய தேவர்கள் சர்வசங்கார காரணமான சிவதனுசை ஸ்ரீ பஞ்சதசாக்ஷர சொரூப பரமேசுவரி கிருபையால் அந்தச் சகசிராக்ஷ லிங்க மூர்த்தியின் அடியில் வைத்துப் பூஜை செய்து மகிழ்ச்சி யுற்றார்கள். அச் சிவலிங்கப் பெருமானை ஏகாதச ருத்திரர்கள் தங்கள் குற்றந் தீர்தற் பொருட்டு அதிருத்திர விதிப்படி பூசித்தார்கள். ஆதிசேஷன் தன் குற்ற நிவிர்த்திக்காகப் பாதாளத்திலிருந்து நாடோறும் பில மார்க்கமாக வந்து சிரத்தையுடன் வழிபட்டான்.

அநேக ஜன்மங்களிற் செய்த புண்ணியங்களால் மானுட ஜன்மம் கிடைக்கும். மானுட ஜன்மத்திற் செய்த அநேக புண்ணியங்களால் சிவபத்தி யுண்டாகும். சிவ பத்தியினாலேயே ஆன்ம ஞானங் கிடைக்கும். சிவபத்தி யில்லாதவனுக்கும் சிவதருமங்களுக்கு இடை

பூஜை செய்பவனுக்கும் பிறப்பும் இறப்பும் நீங்குவதில்லை. இது சத்தியம். பிரமன் முதலிய தேவர்களுக்கும் மற்றையோர்க்கும் காமம் குரோத முதலிய குற்றங்கள் தினமும் விரைவில் அதிகப்படுகின்றன. அவைகளால் சீவர்கள் வருத்த மடைகின்றார்கள். அவை நீங்காமல் ஆன்மஞானங் கிடைக்காது. அந்தத் தலம் காளாகருவனம் கபால வனம், பனசாரணியம், தேவதாருவனம், அருச்சுனபுரம் பஞ்சவில்வ வனம், பிரமபுரம் கார்முக புரம், புத்திரப் பிரத முதலிய பல பெயர்கள் பெற்றுள்ளது. பிரமன் முதலிய தேவர்கள் அவ்விலிங்க மூர்த்தியி னடியிற் சிவதனுசை வைத்துப் பூசித்தமையால் அந்தத் தலத்துக்குக் கார்முக புரமென்று பெயர். அத்தலத்தில் பரமோத்தமமான ஐந்து தீர்த்தங்கள் விளங்குகின்றன. ஆதிசேஷன் தனது சிவாபராதம் நீங்குதற் பொருட்டுப் பாதாளத்திலிருந்து அந்தத் தலத்துக்கு வந்த பிலமார்க்கத்துக்குச் சேஷபில மென்று பெயர். அது சகசிராக்ஷலிங்க மூர்த்திக்கு ஈசான திக்கில் உள்ளது. அப்பிலம் கிணற்றுவடிவாய் விளங்குகிறது. அத் தீர்த்தம் ஆன்மாக்களின் பாவங்களையும் சிவாபராதங்களையும் நீக்கும். முன்பு அந்தப் பிலத்தின் வழியாய் வந்த ஆதிசேஷனாற் கொடுக்கப்பட்ட நாகரத்தினத்தைப் பெற்று நமது அன்பன் ஒருவன் அங்குத் திருப்பணி செய்தான். அத் தலமகிமை வேத வேதாந்தங்களில் இரகசியமாகச் சொல்லப்பட்டுள்ளது. அதனை உங்கள்பாற் கருணைகூர்ந்தும் உலக நன்மையைக் கருதியும் உங்களுக்கு நாம் சொன்னோம். நீங்கள் அவ்வுத்தம க்ஷேத்திரத்தை யடைந்து அங்குள்ளவர்கள் அநுசரிக்கும் சிவாகம விதிப்படி கைலாச நாயகியாரையும் சகசிராக்ஷ பரமேசுவரரையும் அச்சம் அன்பு சிரத்தையாகிய இவற்றோடு பூசை செய்து அநுக்கிரகம் பெறக் கடவீர்கள் என்று சிவபெருமான் அருளிச் செய்ய; முனிவர்கள் விடை பெற்றுக் கொண்டு கபால வனஞ் சென்று சிவபெருமானைப் பூசித்துத் திருவருள் பெற்றார்கள்

சௌனகாதி முனிவர்களே! சிவாபராதமே ஆன்மாக்களுக்குச் சனன மரண காரணமாகும். காம முதலிய குற்றங்களினாலே நரகத் துன்பங்கள் உண்டாகின்றன. ஆன்மாக்களுக்குத் துன்பங்களை நீக்கி அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டே உலகமாதாவாயும் கிருபா சமுத்திரமாயும் உள்ள பராசத்தியார் பஞ்ச தசாக்ஷர சொரூபிணியாய்த் தமது நாயகரான காமேசருடன் காமேசியென்னும் பெயர் பெற்று அங்கு வீற்றிருக்கின்றார். கைலாசப் பிரஸ்தர ரூபமான கலாபஞ்சார்ண யந்திரம் இப்பொழுதும் அங்கே விளங்குகின்றது ஆன்மாக்களுடைய துன்பங்களை நீக்குகின்ற அந்தத் தலமகிமை

யை உங்களுக்குச் சுருக்கிச் சொன்னோம். நீங்களும் அங்கே போய்ச் சகசிராக்ஷ பரமேசுவரரைப் பூசித்துத் திருவருள் பெறக் கடவீர்கள் என்று கூறிய சூதமுனிவரை நோக்கிச், சௌனகாதி முனிவர்கள் முனிசிரேஷ்டரே! உலகத்திலுள்ள சிவ க்ஷேத்திரங்களையும் அவைகளின் மகிமைகளையும் வியாச முனிவர்பாற் கேட்டுத் தெளிந்த நீங்கள் கிருபை கூர்ந்து அந்தத் தலமகிமையை விரித்துச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கச், சூதமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

**நைமிசாரணியச் சருக்கம் - முற்றிற்று.**

## தலவிசேடச் சருக்கம்.

முனிவர்களே! கேட்ட மாத்திரத்தில் தீமைக ளெல்லாவற்றையும் நீக்கி நன்மைக ளெல்லாவற்றையும் கொடுக்கின்ற அந்தத் தலவிசேடத்தைத் திருக்கைலாச மலையிலே சிவபெருமான் சனகாதி முனிவர்களுக்கு விரித்துக்கூற, அதை எங்கள் குருவாகிய வியாச முனிவர் சனற்குமார முனிவர்பாற் கேட்டுணர்ந்து உபதேசித்தபடி யாம் உங்களுக்குச் சொல்லுகின்றோம். மன அமைவுடன் கேளுங்கள்.

பூமியிலே புண்ணிய க்ஷேத்திரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே சிவக்ஷேத்திரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே சத்திக்ஷேத்திரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே ஐம்பது பீட க்ஷேத்திரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே நவாவரண க்ஷேத்திரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே பாலாக்ஷேத்திரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே பதினறு ஸ்ரீ புரங்கள் சிறந்தன. அவைகளுள்ளே விராட் புருடனுக்கு மூலாதார ஸ்தானமாய்த் தன்னை யடைந்தோர் பாவங்களை நீக்குகின்ற திருவாரூர் சிறந்தது. ஆன்மாக்கள் செய்யும் சிவாபராதங்களைச் சகிப்பதாயும் உத்தமமாயும் உள்ள காளாகருவனம் அதினும் சிறந்தது. இந்தத் தலத்தில் வசிப்பவன் சிவசாயுச்சியம் பெறுவான். கிருபா சமுத்திரமாகிய பராசத்தியார் ஆன்மாக்களின் சிவாபராதங்களைத் தொலைத்து அவர்களுக்கு அநுக்கிரகம் புரியத் திருவுளங் கொண்டு இத்தலத்தைப் பூமியிற் பிரகாசிக்கச் செய்தார். பதினறு ஸ்ரீ புரங்களுள்ளே மேருசிகர யந்திரஸ்தலமே முதன்மையானது. பூமியிலே மேருசிகர யந்திர ஸ்தலமென்பது

* விராண்மூல புரமென்னும் ஸ்ரீ புரமே. அது மூலாதார புரம், ஆடக க்ஷேத்திரம், வன்மீக புரமுதலிய பல திரு நாமங்கள் பெற்றுள்ளது. அத்திருவாரூருக்குத் தென்றிசையிற் பத்துவிற்கிடை தூரத்தில், திருநெல்லிக் காவுக்கு வடகீழ்த்திசையில், இந்தக் காளாகருவன க்ஷேத்திரம் சேஷபிலமென்னும் பெயர் பெற்று விளங்குகின்றது. இது பஞ்சதசாக்ஷரி யம்மையாருக்கு இடமாயும், தன்னையடைந்த அன்பர்களின் துன்பங்களை நீக்குவதாயும், ஆன்மாக்களின் சிவாபராதங்களைத் தொலைப்பதாயும் உள்ளது. பாவத்தால் வருத்த மடைகின்ற சீவர்களை நோக்கி இரக்க முற்றுப் பராசத்தியார் இந்த க்ஷேத்திர ரூபமாய்ப் பிரகாசிக்கின்றார்.

அந்நிய தலங்களில் அநேக பிறவிகளிற் செய்த ஆகாமிய முதலிய பாவங்கள் இந்தத் தலத்தில் நிச்சயமாய் அழிந்து விடுகின்றன. ஆன்மாக்களுக்கெல்லாம் சிவாபராதம் நீங்கி ஞானங் கிடைக்கத்தக்க இந்தத் தலமே அந்நிய தலங்களெல்லா வற்றினும் சிறந்தது. ஆடவர்களும் பெண்களும் புத்தி பூருவமாகவேனும் அபுத்தி பூருவமாகவேனும் அந்நிய தலங்களிற் செய்த குற்றங்களைப் பொறுத்து அவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டே சிவபெருமானும் உமாதேவியாரும் இந்தத் தலத்தில் அபராத சகேசுவரர் க்ஷமாவதி தேவியார் என்னும் காரணத் திருநாமங்கள் பெற்று வீற்றிருந்தருளுதலாலும் இதுவே எல்லாத் தலங்களினும் சிறந்தது. தேச கால விரோதத்தினாலும் அரசர்களின் மாறுதலாலும் ஆன்மாக்களின் பாவங்களினாலும் தலங்களின் மகிமை குறைந்த காலத்தில் பராசத்தியார் இந்தத் தலத்தைப் பிரகாசப் படுத்தினார். ஆன்மாக்களுக்குப் பரிசுத்தத்தைக் கொடுக்கிற ஐந்து தீர்த்தங்களோடு விளங்கும் இத்தலத்தின் மகிமையைச் சிதக்கினி குண்டத்தி லவதரித்த அந்தப் பராசத்தியாரே அறிவார்.

திருவாரூர் முதலிய தலங்கள் தம்பால் வந்து பிரார்த்திக்கின்றவர்களுக்கு அவர்கள் விரும்பிய பலனைக் கொடுக்கும். இக் காளாகருவனம் தன்னைக் கேட்போர்க்கும் நினைப்போர்க்கும் இஷ்டசித்திகளையும், தரிசனஞ் செய்வோர்க்கு ஆன்ம ஞானத்தையும் எப்பொழுதும் வசிப்பவர்களுக்கு நித்தியானந்தையும் கொடுக்கும். பிரமன் முதலிய காரணேசுவரர்களும் தங்கள் குற்றந்தீர வேண்டி இங்கு வந்து சிவாநுக்கிரகம் பெற்றார்கள். கங்கை யானவள் தன் குற்ற நீங்குதற் பொருட்டு இந்தத் தலத்தில் சிவலிங்கப் பெருமா

---

* விராண் மூலபுரம் — திருவாரூர்.

னுக்கு ஈசான திக்கில் தாமரைத் தடாக ரூபமாயிருந்து பூசித்து வருகிறாள். சனகர் முதலிய முனிவர்களுக்குத் தபோ விக்கினத்தை நீக்கியதும் காலாக்கினி ருத்திரரைக் காப்பாற்றினதும் இந்தத் தலமே யாகும். ஆதிவிடங்கரென்னும் சோமாஸ்கந்த மூர்த்தி இங்கு விளங்குகிறார். ஓர் அரசன் காம முதலிய குற்றங்கள் நீங்கி ஆன்மஞானம் பெறவேண்டித் தன் குருவினிடம் இத்தல மகிமையை அறிந்து இங்கு வந்து இஷ்ட சித்தியைப் பெற்றான். எந்தத் தலத்தில் பிரமதேவர் ஆலயம் நிருமித்து நித்தியானந்த கரமான வைசாகோற்சவத்தை நடத்தினாரோ, எந்தத் தலத்தில் பரமசிவன் சகசிர நயனரென்றும் பராசத்தியார் கைலாசப் பிரஸ்தர ரூபமாய்க் கைலாச நாயகியென்றும் பெயர் பெற்று விளங்குகிறார்களோ அதற்கு ஒப்பும் உயர்வும் மூவுலகத்தினுமில்லை. சகசிராக்ஷ பரமேசுவரர் ஆன்மாக்கள் செய்யுங் குற்றங்களைத் திருவருண் மேலீட்டாற் சகிப்பதால் அபராத சகேச ரென்றும் அதனாலேயே பராசத்தியாரும் க்ஷமாவதி யென்றும் பெயர் பெற்று விளங்கும் இந்தத் தலம்போல் வேறெந்தத் தலமு மில்லை. ஆன்மாக்கள் நன்மையை அடையத் தரும் இடம் பூமியில் இதுபோல் வேறில்லை யாதலாற் பாவத்துக்கு அஞ்சினோர் ஆதரவுடன் இந்தத் தலத்தை யடைந்து வழிபடல் வேண்டும். இங்கே வந்து சகசிராக்ஷ பரமேசுவரரையும் கைலாச நாயகியாரையும் வழிபடுகின்றவர்களுக்குத் தோஷங்களெல்லாம் நீங்கிவிடும். சந்தேகமில்லை காம முதலிய குற்றங்க ளெல்லாவற்றையும் கெடுப்பதா[illegible] இந்தத்தலமே எல்லாத் தலங்களினு மேலானது. இது கிரேதாயுகத்தில் கூ[illegible]ாலவனமென்றும் திரேதாயுகத்தில் * கபித்தவனமென்றும், து[illegible]யுகத்தில் † பனசாரணிய மென்றும், கலியுகத்தில் ‡ காளாகரு வனமென்றும், பிரசித்தி பெற்றுள்ளது.

தலவிசேடச் சருக்கம் - முற்றிற்று.



# தீர்த்த விசேடச் சருக்கம்.



முனிவர்களே! சமுசார மார்க்க சிரமத்தை நீக்குவதாயும் பாவங்களைத் தொலைப்பதாயும் உள்ள தீர்த்த மகிமையைச் சொல்லுகின்றோம். இந்தத்தலத்தில் பரமோத்தமமான ஐந்து தீர்த்தங்கள் விளங்குகின்றன. பராம்ச ரூப சாதாக்கிய சதாசிவ மூர்த்திக்கு முதலாவது சரீரம் ஜலமே. அதனாலேயே தீர்த்தத்துக்குப் பாவத்தை நீக்கும்

* கபித்தம்-விளாமரம். † பனசம்-பலாமரம். ‡ காளாகரு-காரகில்மரம்.

வன்மை அமைந்துள்ளது. விராட் புருடனுக்கு மூலாதார ஸ்தானமா யுள்ள திருவாரூரில் பரமானந்த ஞான சொரூபிணியுமாயும் அறு பத்து நான்கு கோடி யோகினி கணங்களாற் சேவிக்கப்பட்டவராயும் சதாசிவ சம்பந்த முடையவராயும் சுத்த மாயா சொரூபிணியாயும் சாதா என்று பெயருள்ளவராயு மிருக்கிற பராசத்தியார் அறுபத்து நான்கு கட்டங்கள் அமைந்த கலாதீர்த்த ரூபமாய் விளங்குகின்றார். இக்காளா கருவனத்தில் அப் பராசத்தியாரே ஐந்து தீர்த்த ரூப மாய்ப் பிரகாசிக்கின்றார். பாவங்க ளெல்லாவற்றையும் நீக்குகின்ற இவ்வைந்து தீர்த்தங்களும் பஞ்சப் பிரம சொரூபமாயுள்ளன. இவைகளுக்குப் பிரமதீர்த்தம் விஷ்ணு தீர்த்தம் ஹர தீர்த்தம் தேவ தீர்த்தம் சேஷ தீர்த்த மென்று பெயர். அன்றியும் இங்கே கங்கை வெள்ளா றென்னும் பெயருடன் சந்நிதியிற் பிரவகிக்கிறாள்.

இந்தத் தலத்திற்குக் கிழக்கே *ஏகசக்கரபுரமும் தெற்கே கோமுத்தீசுவரபுரமும் மேற்கே நர்த்தனபுரமென்னும் திருநாட்டி யத்தான்குடியும் வடக்கே புன்னாகாரணிய மென்னும் புன்னை வாசலு மிருக்கின்றன. சௌர க்ஷேத்திர முதலியன இதன் பஞ் சக் குரோச எல்லைக்குள் இருக்கின்றன. அவ்வத தலங்களில் ஸ்ரீ பஞ்சதசாக்ஷர சொரூபிணியாகிய பராசத்தியார் அவரவர்களு டைய அன்புக்கேற்ப அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டுத் தலம் தீர்த்தம் மூர்த்தி ரூபமாய் விளங்குகின்றார்.

ஆன்மாக்களுடைய பஞ்சமகா பாதகங்களை நீக்குதற் பொருட் டே பராசத்தியாரால் ஐந்து தீர்த்தங்கள் உண்டாக்கப்பட்டன. அவைகளில் அமாவாசை, சோமவாரம், சூரிய கிரகணம், சந்திர கிரகணம் ஆகிய புண்ணியகாலங்களில் விதிப்படி ஸ்நானஞ் செய்ப வன் மனோபீஷ்டங்களை யடைவான். தினந்தோறும் ஸ்நானஞ் செய்பவன் பத்துக் கிருச்சிர பலனை யடைவான். விஷு புண்ணிய காலத்தில் ஸ்நானஞ் செய்பவன் பதினாயிரம் கிருச்சிர பலனை யடை வான். சங்கிரமண புண்ணிய காலத்தில் ஸ்நானஞ் செய்பவன் ஆயி ரங் கிருச்சிர பலனை யடைவான். சடசீதி புண்ணியகாலத்தில் ஸ்நா னஞ் செய்பவன் அளவில்லாத கிருச்சிர பலனை யடைவான். வைகாசி மாசப் பௌர்ணிமையிலும் ஐப்பசி மாசத்திலும் ஸ்நானஞ் செய்ப வன் நல்ல பலனை யடைவான். மாசி மாசத்து மகநக்ஷத்திரத்திலா வது சித்திரை மாசத்துச் சித்திரை நக்ஷத்திரத்திலாவது ஜன்மநக்ஷத் திரத்திலாவது உற்பாதகாலத்திலாவது பஞ்சகாலத்திலாவது இராச்

* ஏகசக்கரபுரம்—திருவலிவலம்.

சியசலன காலத்திலாவது கோடி லிங்கத்துக்குச் சமமான இக்காளா கருவனத்திலுள்ள தீர்த்தங்களில் சங்கற்பஞ்செய்து கொண்டு, சூகத படனத்துடன் விதிப்படி ஸ்நானஞ் செய்து சுத்த வஸ்திரந் தரித்து, விபூதி ருத்திராக்ஷ மணிந்து, ஏகாதச ருத்திர செபஞ் செய்து, ருத்திர யாமள கிரந்தத்திற் சொல்லியபடி மகா பாதகங்களை நீக்கத்தக்க மூன்று பிரதக்ஷிணஞ் செய்து, சேஷ பிலத்திற் றோன்றினவராயும் கருணைக் கடலாயும் உள்ள அபராத சகேசுவரரைத் தன் பாவ நிவிர்த்தியின் பொருட்டு ஸ்ரீ ருத்திர நாமங்களா லருச்சித்துப், பாலன்னம் சுத்தான்னம் தயிரன்னம் வடை அப்பம் மற்றைப் பலகாரங்கள் பழங்கள் மற்றும் போசன பதார்த்தங்கள் ஆகிய இவைகளை நைவேத்தியஞ் செய்து நமஸ்கரித்து எவன் தன்னுடைய விருப்பத்தைப் பிரார்த்திக்கிறானோ அவனுடைய ஜன்மாந்தர பாவங்களெல்லாவற்றையும், அச்சிவ பெருமான் பொறுத்தருளுவார். பிரமன் முதலிய காரணேசுவரர் ஆதிசேஷன் ஏகாதச ருத்திரர் தேவர் மனிதர் விலங்கு பறவை முதலிய சீவர்களுக்கு இவ்வைந்து தீர்த்தங்களும் இஷ்ட சித்தியைக் கொடுக்கின்றன. திவ்வியமாயும் மேன்மையாயுமுள்ள இத் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தால் எல்லாக் குற்றங்களும் நீங்கிச் சிவசாயுச்சியங் கிடைக்கும். இத்தலத்தின் பஞ்சக் குரோசங்களில் இத் தீர்த்தங்களின் அம்சங்கள் விளங்குகின்றன.

தீர்த்த விசேடச் சருக்கம் - முற்றிற்று.



# மூர்த்தி விசேடச் சருக்கம்.



முனிவர்களே! உத்தமமான சகசிராக்ஷலிங்க மகிமையைச் சொல்லுகின்றோம். பூமியிலே ஆன்மாக்களுக்கு இஷ்ட சித்திகளைக் கொடுக்கத்தக்க மேரு, மந்தரம், கைலாசம், காசி, ஸ்ரீ பர்வத முதலிய சிவ க்ஷேத்திரங்களும் பதினாறு ஸ்ரீ புரங்களும் அவைகளின் ஆவரண க்ஷேத்திரங்களும் ஆன்மாக்கள் புத்திபூருவமாகவும் அபுத்திபூருவமாகவும் செய்யும் சிவாபரா[illegible] முதலிய பாவங்களை நீக்குதற்குப் போதாமையைக் கருதிக் கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீ சோடசாக்ஷரியம்மையார் இந்தத் தலத்தைப் பிரகாசப்படுத்தி யருளினர். ஆன்மாக்கள் செய்யும் * வினைகளை ஆயிரங்கண்களாற் பார்த்தலால் இங்

* ஆன்மாக்கள் செய்யும் வினைப்பகுதிகளைப் பார்த்து வரையறை செய்தலை "தொழுது தூமலர் தூவித்துதித்து நின், றழுது போற்றி யரற்றுகின்றாரையும், பொழுதுபோக்கிப் புறக்கணிப்பாரையும், எழுதுங் கீழ்க்கணக் கின்னம் பரீசனே" என்னுந் தேவாரத்தான் அறிக.

குள்ள மூர்த்திக்குச் சகசிராக்ஷரென்று பெயர். அநேக அபராதங்களையும் சகிப்பதால் இவருக்கு அபராத சகேசரென்றும் பிரசித்த நாமம் வழங்குகின்றது. அபராதசகேசரும் க்ஷமாவதி தேவியாரும் சர்வலோகப் பிரசித்தமாய் வீற்றிருக்கின்றார்கள். இவ் விருவரையும் பரிசுத்த ஞானத்தால் வழிபடுகின்றவன் மற்றைத் தலங்களிலுள்ள மூர்த்திகளையெல்லாம் தரிசனஞ்செய்த பலனை யடைவான். இவ் வபராத சகேசலிங்க தரிசனத்தால் மற்றைய லிங்கமூர்த்திகளுக்குச் செய்த குற்றங்களெல்லாம் நீங்கும். இவ்விலிங்கமூர்த்தியைக்காட்டிலும் குற்றங்களைப் பொறுக்கும் லிங்கமூர்த்தி வேறெங்குங் கிடையாது. ஆன்மாக்கள் செய்யுங் குற்றங்களைப் பொறுத்தும், ஆதிசேஷன் செய்த குற்றங்களைப்பொறுத்து அவனுக்குத் தன் இனத்துள் உயர்வைக் கொடுத்தும், பிரமன் செய்த குற்றத்தைப் பொறுத்தும், முனிவர்களுக்குச் சிரௌதமார்க்கத்தை யுபதேசித்தும், கபாலவனத்தை ஓர் அரசனைக்கொண்டு திருநகரமாகச் செய்வித்தும், விஷ்ணுவின் கோபத்துக்கு அஞ்சி வருந்திய தேவர்களைக் காத்தும், இலக்குமிதேவி தனது நாயகனைக் காணாது வருந்தித் தவஞ்செய்ய நாயகனைக் காணும்படி செய்தும், ஓர் அன்பருக்குச் சிவரத்தின மளித்துக் காத்தும், முனிவர்கள் பிரார்த்தனையின்படி க்ஷமாவதி யம்மையாரால் மான் கன்றைப் பரிபாலித்தும் அருள் புரிந்த இந்த லிங்கமூர்த்திக்குச் சமமான லிங்கமூர்த்தி மூவுலகத்திலுங் கிடையாது. எந்த க்ஷேத்திரத்தில் பிரமோத விநாயகர் தம்மை வழிபடுவோர்க்கு விக்கினங்களை நீக்கி யருளுகின்றாரோ அதற்குச் சமமான க்ஷேத்திரம் எங்கும் இல்லை. தம்மை வழிபடுவோர்க்கு அற முதலிய புருஷார்த்தம் நான்கையும் கொடுத்தருளும் அபராதசகேசுவரரே எல்லாராலும் வழிபடத்தக்கவர்.

யாகங்களுள்ளே சிவயாகமும், மலைகளுள்ளே மேருமலையும், விரதங்களுள்ளே பிரதோஷ விரதமும், மந்திரங்களுள்ளே சோடசாக்ஷரி மந்திரமும், தானங்களுள்ளே அபயதானமும், ஆன்மாக்களுள்ளே ஞானமுள்ளவனும், சற்பாத்திரங்களுள்ளே லளிதாபத்தனும், தருமங்களுள்ளே சிவதருமமும், தேவர்களுள்ளே மகாதேவனும், விருக்ஷங்களுள்ளே கற்பக விருக்ஷமும், பசுக்களுள்ளே காமதேனுவும், தீர்த்தங்களுள்ளே சேஷதீர்த்தமும், இரத்தினங்களுள்ளே நாகரத்தினமும்போல லிங்கங்களுள்ளே அபராதசகேச லிங்கமே சிறந்தது. அந்த லிங்கமே பரஞ்சோதி சொரூபம். அதுவே மேலானவற்றிற்கெல்லாம் மேலானது. சிவாபராதங்களை நீக்குதற்கு அதுவே மூலகாரணம். ஆன்மாக்களுடைய சிவாபராதங்களை வேரோடு

களைந்து உலகங்களையெல்லாங் காத்தருளும் பெருங்கருணையினாலே கபால வனத்தில் சேஷபிலத்தினின்றும் ஈசுவரன் லிங்கரூபியாய்த் தோன்றி யருளினர். ஆன்மாக்களுக்கு அநுக்கிரகஞ்செய்யும் மற்றை லிங்கங்க ளெல்லாம் வந்து இந்த லிங்கத்தைத் தரிசனஞ் செய்கின்றன. சந்திரோதயத்தின் முன் இருள் போலவும், சிங்கத்தின்முன் யானைபோலவும், சிவஞானத்தின்முன் அஞ்ஞானம்போலவும், கருடனுக்குமுன் பாம்பு போலவும், பெருங் காற்றின்முன் மேகம் போலவும், வச்சிராயுதத்தின்முன் மலைகள் போலவும் இந்தச் சிவலிங்க தரிசனத்தால் சிவாபராதங்கள் நாசமடையும். அபராத சகேசரை அச்சமும் அன்புங்கொண்டு தரிசனஞ் செய்தால் காமம் குரோத முதலியவற்றாலுண்டான குற்றங்கள் நீங்கும். ஆறு நாள் வழிபட்டால் சாட்குண்ணியத்தை யடைவான். சிரத்தையுடன் சேவிப்பவன் மகாதானம் மகாயாகங்களைச் செய்தவனாகவும் மகா சித்தியைப் பெற்றவனாகவும் ஆவான். புத்திமானாயுள்ளவன் இச் சிவலிங்க வழிபாட்டின் புண்ணிய மிருதியை ஆராய்ந்து ஒவ்வொரு காலமும் பிரதக்ஷிணம் நமஸ்காரம் தோத்திரங்களுடன் வழிபட்டால் எல்லாக் குற்றங்களும் நீங்கி இவ் வுலகவின்பங்களை யநுபவித்து மறுமையிற் சிவபெருமானுடைய திருவடியை யடைவான்.

அபராத சகேசருடைய மகிமையைக் கேட்டால் பத்துப் பிறவிகளிற் செய்த பாவங்கள் நெருப்பிற்பட்ட பஞ்சு போல் அழியும். அவ்வபராத சகேச லிங்கமென்னுந் திவ்விய நாமத்தை கேட்டால் நூறு பிறவிகளிற் செய்த பாவங்கள் சூரியனைக் கண்ட இருள் போல உடனே நீங்கும். அச்சிவலிங்கப் பெருமானை வணங்க வேண்டுமென்று வீட்டிலிருந்து வெளிபே வந்தால அநேக பிறவிகளிற் செய்த பாவங்கள் அப்பொழுதே நீங்கும். அப் பெருமானைத் தரிசித்தால் எல்லாக் குற்றங்களும் நீங்கும்.

அபராத சகேசரை ஸ்ரீ ருத்திரங்களாலும் ஸ்ரீ ருத்திர சூக்தங்களாலும் தோத்திரஞ் செய்தால் விதிப்படி யாகஞ் செய்த பலனை யடைவான். இந்த லிங்கமூர்த்திக்கு அபிஷேகத் திரவியங்களாலும் பரிசுத்த தீர்த்தங்களாலும் அபிஷேகஞ் செய்வித்தால் வேறு தலங்களிலுள்ள லிங்கமூர்த்திகளை யெல்லாம் சுவர்ண கலச தீர்த்தத்தினால் அபிஷேகஞ் செய்வித்த பலனை யடைவான். பச்சைக் கர்ப்பூரம் குங்குமப்பூ கஸ்தூரி முதலிய சுகந்த திரவியங்கள் கலந்த சந்தனாபிஷேகஞ் செய்வித்தால் சிவசாயுச்சியத்தைப் பெறுவான். இவ் விலிங்க

மூர்த்தியை ஒரு புஷ்பத்தாற் பூசித்தால் மற்றை லிங்கமூர்த்திகளை லக்ஷம் சுவர்ண புஷ்பங்களாற் பூசித்த பலனை யடைவான்.

அபராத சகேசருக்குத் தூபத்தின் பொருட்டுச் சிரத்தையுடன் அகிற்கட்டை கொடுத்தால் அவர் அவன் செய்த அநேக குற்றங் களைப் பொறுத்தருளுவார். கர்ப்பூர தீபங் காண்பித்தால் வெண்ணி றமும் நெற்றிக் கண்ணும் பெறுவான். ஏலம் கிராம்பு முதலியவை சேர்ந்த தாம்பூல நிவேதனஞ் செய்தவன் சிவலோகத்தில் உபசரிக்கப் படுவான். மணி, அபிஷேக கலசம், தூபம், தீப முதலிய பாத்திரங் களைக் கொடுத்தவன் பாவங்களெல்லாம் நீங்கி இஷ்ட சித்திகளை யடைவான். நிருத்த கீத வாத்தியங்களை உபயோகப் படுத்தினவன் எப்போதும் பரமானந்த மடைவான்.

அபராத சகேசுவரை ஒருதரம் நமஸ்கரித்தால் உத்தம ஆசாரி யனை வணங்கினவனுவான். அவருடைய சந்நிதானத்தில் ஸ்ரீ பஞ்சாக்ஷ ரத்தை ஒருதரஞ் செபித்தால் பூரண பலனையடைவான். அவ்வப ராத சகேசுவரரைக் காலையில் தரிசனஞ் செய்தவன் தன தானியங் களுடன் பூமி தானம் செய்த பலனை யடைவான். மத்தியானத்தில் தரிசனஞ் செய்தவன் நன்றாய் அலங்கரித்த ஆயிரம் பசுக்களைத் தானஞ் செய்த பலனை யடைவான். சாயங்காலத்தில் தரிசனஞ் செய்தவன் இரண்டு பக்கத்திலு முகத்தையுடைய (ஈனுஞ் சமயம் வாய்ந்த) ஆயிரம் பசுத்தானஞ் செய்த பலனை யடைவான். அர்த்த சாமத்தில் தரிசனஞ் செய்தவன் அஞ்ஞானம் நீங்கி விஞ்ஞானத்தை யடைவான். ஜன்ம நக்ஷத்திரம், சங்கிரமணம், கிரகணம், ஆகிய இப் புண்ணிய காலங்களில் தரிசனஞ் செய்தால் அபமிருத்தியு விலகும். நிர்நாசை, மிருத்தியு மதனி, சர்வ மிருத்தியு நிவாரணி முதலிய சத் திகள் அம் மூர்த்தியினுடைய சந்நிதானத்தில் எப்பொழுதும் சே வித்துக கொண் டிருக்கின்றார்கள்.

அபராத சகேசுவரருடைய மகிமைக ளெல்லாவற்றையுஞ் சொல்லுதற்கு யார் வல்லவர். கபால வனத்துக்குச் சமமான தபோ வனமும் அதிலுள்ள ஐந்து தீர்த்தங்களுக்குச் சமமான தீர்த்தங் களும் அபராத சகேசலிங்கத்துக்குச் சமமான லிங்கமும் இவ்வுல கத்தில் வேறில்லை. அபராத சகேசுவரர், சேஷபிலோற்பவர், கபால வனநாதர், காளாகருவனேசர், க்ஷமாவதி மனோகரர், காரணேசார்த்தி ஹரர், வைசாகோற்சவப்பிரீதர், காமதோஷஹரர், சிவன், சோளமகி பால பிரார்த்தனபீஷ்டதாயகர் என்று முனிவர் மகிழ்ச்சியுடன் இந்த மூர்த்தியைத் தோத்திரஞ் செய்கின்றார்கள். அவரவர்களு

டைய அன்புக் கேற்ப இம்மூர்த்தி அநுக்கிரகஞ்செய்கின்றார். இந்த லிங்கம் ஏழு பாதலத்துக்கும் அடியிலிருந்து உலகத்தின் அநுக்கிரகத்தின் பொருட்டுச் சுயம்புவாய்ச் சேஷபிலத்தில் முளைத்தெழுந்தது.

மூர்த்தி விசேடச் சருக்கம் - முற்றிற்று.



# சேஷ தீர்த்தச் சருக்கம்.

இவ்வாறு கூறிய சூதமுனிவரை நோக்கிச் சௌனகாதி முனிவர்கள் "சுவாமீ! காளாகருவன நாதருடைய மகிமையை உங்கள்பாற் கேட்டு எங்களுக்கு மனம் அமையவில்லை யாதலின் அதனை இன்னமுஞ் சொல்லவேண்டும்" என்று பிரார்த்திக்கச், சூதமுனிவர் காளாகருவனத்தையும் அங்கு வீற்றிருக்கின்ற கருணைமதம் பொழியும் பிரமோத கணபதியையும் ஐந்து தீர்த்தங்களையும் கைலாச நாயகியாரையும் சகசிராக்ஷ மகேசுவரரையும் தியானித்து வணங்கிக்கொண்டு சொல்லத் தொடங்கினர்.

முனிவர்களே! வேதாகமங்களில் இரகசியமாக வைக்கப்பட்ட இந்தத் தலமகிமையைச் சொல்லுவதற்கு ஆயிரநாவுள்ள ஆதிசேஷனும் வல்லவனல்லன். இதற்கு ஒப்பான க்ஷேத்திரம் பூமியில் வேறு கிடையாது. ஒரு நாளாவது அரை நாளாவது ஒரு நிமிஷமாவது அரை நிமிஷமாவது இந்தத் தலத்தில் வசிப்பவர்கள் திருக்கைலாசத்தை யடைவார்கள். கன்னிகை, பசு, இடபோற்சர்ச்சனம், வஸ்திரம், இரணியம், உதகும்பம், ஆகிய இவைகளை இந்தத் தலத்தில் அன்போடு தானஞ் செய்கின்றவன் சிவசாமீப்பியத்தை யடைவான். இத் தலத்தில் பிதிரர்களுக்குப் பிரீதியாகச் சிராத்தஞ் செய்தால் செய்பவர்களுடைய பிதிர்கள் நரகத்தினின்றும் நீங்கி அழிவில்லாத பதவியையடைந்து நித்தியானந்தராய் வாழ்வார்கள். இத் தலத்தில் ஒரு க்ஷணம் வசிப்பவன் வேறு தலங்களில் நூறு வருஷம்வரை அன்போடு செய்த சிவபுண்ணிய பலனை ஈசுவராஞ்ஞையால் அடைவான். இங்குள்ள தீர்த்தங்களில் புண்ணிய காலங்களில் ஸ்நானஞ் செய்தவர்கள் சிவலோகத்தை யடைவார்கள். இங்குள்ள பிரம தீர்த்தக்கரையில் ஒரு பணம் தானஞ் செய்தவன் வேறு தலங்களில் கோடி திரவியங்களைத் தானஞ்செய்த பலனை யடைவான். இத் தலத்தில் வீற்றிருக்கும் அபராத சகேசுவரரை மகாபிஷேகம் மகா நைவேத்தியம் அருச்

சனைகளாலும் பிரதக்ஷிணம் நமஸ்காரம் தோத்திர முதலியவைகளாலும், இரதோற்சவங்களாலும் வழிபடுகின்றவர்கள் சிவ சாயுச்சியத்தைப் பெறுவார்கள். பிரதக்ஷிணஞ் செய்தவன் பயிர் பழங்களுடன் கூடின பூமிதானஞ் செய்த பலனை யடைவான். அபராத சமேகசுவரர் பொருட்டுத் திருநந்தனவனம் அமைக்கின்றவர்களும் அபிஷேக தீர்த்தம், வஸ்திரம், சந்தனம், கொடி, குடை ஆகிய இவைகளைக் கொடுக்கின்றவர்களும் இம்மையின்பங்க ளெல்லாவற்றையும் அநுபவித்து மறுமையில் சிவ சாயுச்சிய மடைவார்கள்.

இந்த லிங்கமூர்த்திக்கு ஈசான திசையில் ஒரு கிணறு இருக்கின்றது. அதற்குச் சேஷபிலமென்று பெயர். அது ஆதிசேஷனால் நிருமிக்கப்பட்டது. அதன் வழியாகவே ஆதிசேஷன் இங்கு வந்து பூசைசெய்கிறான். அவன் ஒரு சிவபத்தருக்குத் தினமும் நாகரத்தினங்கொடுத்து அவரால் அபராதசமேகசருக்கு ஆலயஞ் செய்வித்தான். அந்தச் சேஷ தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால் குஷ்டரோகம் நீங்கும். அத் தீர்த்தக்கரையில் சிரத்தையுடன் தானஞ்செய்தால் அது சிவப்பிரீதியாகும். அத் தீர்த்தத்தைத் தரிசித்தவன் யமலோகத்தைப் பார்க்கமாட்டான். காலையில் அக் கிணற்றைத் தரிசித்தவன் இராத்திரிசெய்த பாவம் நீங்குவன். சாயங்காலத்திற் றரிசித்தவன் காலை தொடங்கிச் செய்த பாவம் நீங்குவன். மாசப்பிறப்பு, அமாவாசை, பௌர்ணிமை, சோமவாரம் ஆகிய இவைகளில் இக் கிணற்றை மூன்று பிரதக்ஷிணம் வந்து நமஸ்கரித்து இத் தீர்த்தத்தைப் பானஞ் செய்தவன் அப்பொழுதே பிரமகத்தி முதலிய பாவங்கள் நீங்கப் பெறுவன். அன்றியும் கார்த்திகை மாசத்துச் சோமவாரத்தில் முற்கூறியபடி செய்பவன் இன்னும் விசேட பலனை யடைவான். அபராத சமேகசலிங்கத்தின் மூலம்வரை இக்கிணற்றின் ஆழம் இருப்பதால் இக் கிணற்றுக்கு லிங்கசம்பந்த மிருக்கின்றது. ஆதலால் இதற்குச் சமானம் வேறொன்றில்லை. இக் கிணற்றை நித்தியம் தரிசனஞ் செய்பவன் ஈசுவராஞ்ஞையால் சகல சௌபாக்கியங்களையும் அடைவான்.

## சேஷ தீர்த்தச் சருக்கம் - முற்றிற்று.



# கபாலவனச் சருக்கம்.

முனிவர்களே! கேட்டமாத்திரத்தில் பாவங்க ளெல்லாவற்றையும் நீக்கி ஈசுவரனிடத்துப் பத்தி வைராக்கியங்களைக் கொடுக்கத் தக்க கபாலவன சரித்திரத்தைச் சொல்லுகின்றோம். முற்காலத்திலே கபாலமுனி யென்று ஒரு யோகி யிருந்தார். அவர் வேத வேதாங் தங்களை ஓதி யுணர்ந்தவர். மந்திர தந்திரங்களில் வல்லவர். பரமேசுவரியிடத்திற் பத்தி யுள்ளவர். ராஜ யோகாப்பியாசம் உடையவர். அம் முனிவர் குளிர் காலத்திலே நீரிலும் மழைக் காலத்திலே வெறும் வெளியிலும் இருந்து சிலகாலம் சருகுகளையும் சிலகாலம் காற்றுக் களையும் சிலகாலம் கந்தமூல பலங்களையும் புசித்தும் சிலகாலம் ஒன்றையும் புசியாமலும் சுவாசத்தை யடக்கியும் லளிதா பரமேசுவரியைத் தியானஞ் செய்துகொண்டு ஆயிரந் தேவவருஷம் வரை அருந் தவஞ் செய்தார். அவருடைய சிரசிலிருந்து தபோக்கினியின் புகைக் கூட்டம் மேலெழுந்து பரவிற்று. அதனால் தேவர்கள் மிகத் துன்ப முற்று ஸ்ரீ லளிதா பரமேசுவரியைச் சரணமடைந்து, உலகமாதாவே! பராபரையே! கல்யாண நிலயமே! காமாக்ஷி யென்னும் பெயருடையவரே! பத்தர்களின் இஷ்டத்தைக் கொடுப்பவரே! சர்வான்மாக்களுடைய மனசிலும் புத்திரூபமா யிருப்பவரே! மேருசிகர மத்தியிலுள்ள ஸ்ரீமந் நகரத்துக்குத் தலைவியே! சர்வமங்கள காரணமாயுள்ள தாயே! எங்களைக் காப்பாற்றவேண்டும். கபாலரென்னும் ஒரு முனிவர் உம்மைக் குறித்து அன்போடு அருந்தவஞ் செய்கின்றார். அந்தத் தபோக்கினியானது அமிர்தமுண்ட எங்களையும் சுடுகிறது. அவர் விரும்பியதைக் கொடுத்தருளி எங்களைக் காத்தருளல்வேண்டும் என்று பிரார்த்திக்க, அம்மையார் தேவர்களே! "உங்களுக்கு அபயங் கொடுக்கின்றோம் நீங்கள் அஞ்சற்க. திவ்விய போகங்களை மகிழ்ச்சியோடு அநுபவித்துக் கொண்டிருங்கள்" என்று அசரீரியாற் கூறித் தேவர்களுக்கு அநுக்கிரகித்துப், பின்பு பாதம் வரை தொங்குகின்ற சடையும் உயரத்தூக்கினகையும் தவத்தினலிளைத்த சரீரமும் உடையவராய் வெய்யிலையே ஆகாரமாய்க்கொண்டு நிற்கின்ற கபால முனிவர்க்கு முன்னே சென்று கரும்புவில் புஷ்பபாணம் பாசம் அங்குசம் ஏந்திய நான்கு திருக் கரங்களை யுடையவராயும் கைலாசப் பிரஸ்தாரத்திலுள்ளவராயும் ககர முதலிய அக்ஷர சொரூபிணியாயும் கோடிசூரியப் பிரகாச முள்ளவராயும் பூரண சந்திரன்போன்ற திருமுக முடையவராயும் புன்னகையுடன் தோன்ற; அம் முனிவர்

ஆனந்தக் கடலில் மூழ்கிப் பரவசமடைந்து அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, அம்மையாரை நோக்கிப் "பாற் சமுத்திரத்தின் மத்தியிலுள்ள இரத்தினத் துவீபத்தில் வீற்றிருப்பவரே! தேவர்களாலும் அசுரர்களாலும் வணங்கப்படும் சரணாரவிந்தங்களை யுடையவரே! உலக மாதாவே! இராஜ ராஜேஸ்வரியே! சர்வமங்களத்தைச் செய்பவரே! வழிபடுகின்றவர்களின் உபத்திரவங்களை நாசஞ் செய்பவரே! அடியேனைக் காத்தருளவேண்டுமென்று தோத்திரஞ் செய்தார்.

பராசத்தியார் கிருபையுடன் கபால முனிவரை நோக்கி, முனிவனே! நீ அருந்தவஞ் செய்தற்குக் காரணம் யாது? உன் தபோக்கினிப் புகையாற் பீடிக்கப்பட்ட தேவர்களும் அசுரர்களும் மானுடர்களும் யோகிகளும் நம்மைச் சரண மடைந்தார்கள். உன் விருப்பத்தைக் கேள் தருகின்றோம் என்று அருளிச்செய்ய; அம் முனிவர் அஞ்சலியஸ்தராய் "தாயே! வேறு வரங்கள் என்ன பிரயோஜனம்? நான் சமுசார பந்தமில்லாமல் எப்பொழுதும் உம்முடைய திருவடிகளையே தியானித்துக் கொண்டிருக்க அநுக்கிரகஞ் செய்தல் வேண்டும்" என்று பிரார்த்திக்க; அம்மையார் "முனியே! உன்னுடைய ஆகாமிய முதலியன தடுக்கப்பட்டன. நீ புண்ணிய முள்ளவன். நம்முடைய திருவடிகளில் உனக்கு இடைவிடாத பத்தி யுண்டாகுக. நம்மிடத்து அன்பு யாவர்க்கும் எளிதிற் கிடைக்காது. அத்தகைய அன்பு உனக்குக் கிடைத்தது. ஆதலின் நீயே முத்திக்குப் பாத்திரம். தேகாந்தத்தில் நம்முடைய சாயுச்சியத்தைத் தருகின்றோம். அன்றியும் நாம் இங்குக் கைலாசநாயகி யென்ற பெயருடன் உனக்கு அநுக்கிரகஞ் செய்ததுபோல நித்திய சாந்நித்தியமா யிருந்து சமஸ்த சீவர்களுக்கும் அநுக்கிரகஞ் செய்கின்றோம். உன்னுடைய பத்தி விசேடத்தினால் இன்னும் ஒரு வரந் தருகின்றோம். இந்தத் தலம் கபாலவனம் என்று உன் பெயரால் விளங்குக" என்று வரங் கொடுத்து அந்தர்த்தானமானார். அன்று முதல் அவ்வனத்துக்குக் * கபாலவனமென்று பெயர் விளங்குகின்றது. கபால முனிவர் தேவியின் வரப்பிரசாதத்தால் பரமானந்த சமுத்திரத்தில் அமிழ்ந்தினார். இவ்வனம் தாபத்திரயங்களையும் நீக்கும். புண்ணியத்தைக் கொடுக்கும். மும்மலங்களையும் நீக்கும். கைலாச நாயகியாரிடத்தில் பத்தியை யுண்டுபண்ணும். மோக்ஷத்தைக்கொடுக்கும்.

## கபாலவனச் சருக்கம் - முற்றிற்று.

* கபாலவனமென்னும் பெயர்வந்தமைக்கு வேறு காரணமும் உண்டு. அவற்றை மேல்வரும்: விடங்க கபாலவன ரகசியச் சருக்கத்தா னுணர்க.

# நகராலய நிருமாணச் சருக்கம்.

முனிவர்களே! சகசிராக்ஷ பரமேசுவரன் ஒரு அன்பருக்குநாக ரத்தினங் கொடுப்பித்து அவரால் நகராலய நிருமாணஞ் செய்வித்த சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்;— முற்காலத்திலே காஞ்சீபுரத்திலே கௌசிக வமிசத்திற் பிறந்த ஒரு பிராமணர் சிவபத்த சிகாமணியாயிருந்தார். அவருக்குச் சிவசர்மா என்று பெயர். அவர் சமமுதலிய ஆறு குணங்களை யுடையவர். இயம முதலிய அஷ்டாங்கத்தோடு கூடின யோகங்களை யறிந்தவர். எல்லா ஆன்மாக்களிடத்தும் சமபுத்தியுள்ளவர். இரக்கம் உள்ளவர். ஸ்ரீ பஞ்சாக்ஷர செபத்தில் அன்புள்ளவர். எப்பொழுதும் ஈசுவரனைப் பூசிக்கும் நேசமுடையவர். அவர் பத்தினி மகதி யென்னும் பெயருள்ளவள். அவள் மகா பதிவிரதை. சிவபத்தியுள்ளவள். அவ் விருவரும் தினந்தோறும் சிவபூசை செய்துகொண்டு சிவனடியார்களுக்குத் திருவமுதளித்து மகிழ்வித்து வருங்காலத்திலே, அவ்விருவருக்கும் சிவாநுக்கிரகத்தால் ஒரு குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்குச் சிவானந்தனென்று பெயர். அவ்விருவரும் அவனை வளர்த்துவரும் நாளில் மிக உக்கிரமாயும் பயமாயும் உள்ள அநாவிருஷ்டியினாலே பஞ்ச முண்டாயிற்று. சீவர்களெல்லாம் என்ன செய்வோமென்று வருத்தமடைந்தார்கள். அது நோக்கிச் சிவசர்மா என்பவர் அவர்கள்பால் மிகவும் இரக்கமுற்று, அற்ப சிவாபராதத்தினாலேயே இவ் வருத்தம் விளைந்ததெனத் தெளிந்து, அதன் பொருட்டு அபராத சகேசுவரரை நோக்கித் தவஞ்செய்து அவருடைய திருவருளாற் பொருளபெற்றுச் சிவனடியார்களையும் அவர்களுடைய பந்து மித்திரர்களையும் ஏழைகள் குருடர் செவிடர் ஆகியவர்களையும் கவலைநீங்க மகிழ்விப்போம் என்று கருதி, முனிவர்களால் அபராத ஹர க்ஷேத்திரத்தை யறிந்து சென்று, அபராத சகேசுவரரை நாற்பத்தைந்து நாள்வரை உபாசித்துவந்தார்.

அக் காலத்திலே ஆதிசேஷன் தனது அபராத நிவிர்த்தியின் பொருட்டுத் தினந்தோறும் இரவில் வந்து அபராத சகேசனைப் பூசித்துப், பூசையின் முடிவில் சந்நிதானத்தில் ஒவ்வொரு நாகரத்தினத்தை வைத்து "இதனை யாரேனும் சிவனடியார்கள் எடுத்துக் கொள்க" என்னும் எண்ணத்துடன் சென்றுவிடத்; தரிசனத்துக்கு வரும் அடியார்களுள் காண்போர் அதனை எடுத்துக் கொள்வது வழக்கம்.

ஒரு நாள் ஆதிசேஷனுடைய பூஜாவசான சமயத்திலே சிவசர்மா என்பவர் தமது மனைவி புத்திரர்களுடன் சிவ தரிசனத்துக்குச் சென்றார். அப்பொழுது சிவபெருமானுடைய திருவருளால் "ஆதிசேஷனே! சிவசர்மா என்னும் இப் பிராமணன் பஞ்சத்தின் கஷ்ட நிவிர்த்தியின்பொருட்டு நம்முடைய சந்நிதானத்தில் தவஞ்செய்கின்றான். இவன் நமது அடியார்களைப் பூசிப்பவன். நமது அடியார்களுட் சிறந்தவன். இவனுக்குத் தினமும் நாகரத்தினத்தைக் கொடு" என்று ஓரசரீரி தோன்றிற்று. அது கேட்ட ஆதிசேடன் தன்னெதிரே சிவபெருமானைத் தரிசித்துக்கொண்டு நிற்கும் பிராமணரை நோக்கிப் பரமானந்தமடைந்து அட்டாங்க நமஸ்காரஞ் செய்து "பிரமஞானக் கடலே! சிவராஜயோக மறிந்தவரே! சிவானந்தப் பெருக்கே! சிவபத்த சிகாமணியே!" என அவரை நாத்தழுதழுப்பப் புகழ்ந்து, நான் முற் பிறவிகளிற் செய்த புண்ணியபத்தினாலும் இப்பொழுது செய்யும் சிவ பூசையினாலும் ஈசுவரன் உம்மைத் தந்தார். நான் செய்த பூஜாபலனைப் பெற்றேன். இன்று இந்த நாகரத்தினத்தைப் பெற்றுக்கொள்ளும். சிவாஞ்ஞையின்படி தினமும் ஒவ்வொரு நாகரத்தினந் தருகிறேன் அதுகொண்டு சிவனடியார்களையும் அவர்களைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றுக என்று சொல்லி இரத்தினங்கொடுத்துப் பாதலஞ் சென்றான். சிவசர்மாவும் அவ்வாறே செய்துவருபவர் ஒருநாள் இவ்வடர்ந்தவனத்தை யழித்துச் சிவ கைங்கரியம் செய்வோம் என்று கருதிக்கொண்டு சந்நிதிக்கு வந்தார். அப்பொழுது சிவபெருமான் "பிராமணனே! நீ தினமும் உனக்குக் கிடைக்கும் நாகரத்தினத்தைவிற்று அப் பொருள்கொண்டு, நம்முடைய நந்தியாலும் இந்திரனாலுஞ் சொல்லப்பட்ட சிற்பநூல் விதிப்படி நமக்கு இவ்விடத்தில் கர்ப்பக்கிருகம் அருத்த மண்டபம் மகா மண்டபம் முதலியவைகளோடு ஆலயம் அமைக்குக. இங்குள்ள ஐந்து தீர்த்தங்களுக்கும் மதில் படித்துறை இயற்றுக. கோபுரம் பிராகார முதலியவைகளைச் செய்க. சந்நிதானத்தில் ஆதிசைவர் முதலியோர்க்குக் கிருகங் கட்டுக. வீணை குழல் மிருதங்கமுதலிய வாத்தியங்களை முழக்குகின்றவர்களுக்கும் தாசி தாசன் முதலான வர்க்கத்தாருக்கும் வீதிகளில் வீடுகள் இயற்றுக" என்று அசரீரியாற் கூற, அதுகேட்டு ஆனந்தமடைந்த பிராமணோத்தமர் தினந்தோறும் ஆதிசேடன்பாற் பெறும் நாகரத்தினத்தை விற்றுச் சிவபத்தர்களைத் திருப்திசெய்து, கைலாசநாயகியார்க்கும் சகஸ்ராக்ஷ பரமேசுவரருக்கும் காமிகோத்தராகமத்தையும் காரணாகமத்தையும் அநுசரித்துப் பூசை செய்வித்து, சிவாலயம் கிருகமுதலியவற்றை அமைத்துச், சிவபூசைசெய்யும் ஆதி

சைவருக்கும் மற்றவர்களுக்கும் அளவிறந்த திரவியங் கொடுத்தார். அதனால் அவர்கள் மனமகிழ்ந்து சமுசார யோக க்ஷேம காரியங்களிற் சிரமமின்றிச் சிவாராதனையைச் செவ்வே நடத்திவந்தார்கள். பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் காளாகரு வனத்தில் நவரத்தின மயமான ஆலயம் மாளிகை முதலியவற்றை நோக்கி அதிசயமும் ஆனந்தமும் அடைந்தார்கள். பிராமணர் முதலியோர் காளாகருவன விருத்தாந்தம் மிகவும் இரகசிய மென்று தினமும் அபராத சமேசரை வழிபட்டு வந்தார்கள்

நகராலய நிருமாணச் சருக்கம் - முற்றிற்று.



# காரணேசாதி யபராத சகனச் சருக்கம்.

முனிவர்களே! சிவபெருமான் காரணேசர் முதலியோரின் அபராத சகனஞ் செய்தமையைச் சொல்லுகின்றோம்;— பிரமன் விட்டுணு முதலிய தேவர்கள் தத்தம் அதிகாரபதவியில் மகிழ்ச்சியோ டிருக்கு நாளிலே, பிரமதேவர் "நமக்கு ஐந்து முக மிருக்கின்றன. நாமே உலகங்களைச் சிருட்டிக்கின்றோம். சிருட்டி, திதி, சங்காரம் என்னு மூன்று கிருத்தியங்களுள் சிருட்டி யென்னும் நமது கிருத்தியமே முதன்மையானது. நாமே ஈசுவரன்" என்று தருக்கினர். விஷ்ணுமூர்த்தியானவர் "உலகங்களை யெல்லாம் நாமே காக்கின்றோம். நம்மையன்றி எசமானன் வேறில்லை. நாமே ஈசுவரன்" என்று தருக்கினர். இவ்வாறே இந்திரன் முதலிய தேவர்களும் தங்கள் தங்கள் அதிகாரத்தைப் பெரிதாக மதித்து நாமே ஈசுவரன் என்று தனித்தனி தருக்குற்றார்கள். எல்லாருக்கும் ஈசுவரனும் வியாபகனும் உள்ள பரமேசுவரனை மறந்தார்கள். பிரமாதி தேவர்கள் இவ்வாறு தருக்குற்ற பாவ மிகுதியால் தேச கால விரோதமும் புண்ணிய பாவப் பிறழ்ச்சியும் அநேக மதபேதங்களும் ஆசார பேதங்களும் உண்டாயின.

அப்பொழுது கருணைக்கடலான லளிதா பரமேசுவரியார் இவ்விதம் பாவம் அதிகரித்தலை நோக்கி, இவர்களின் அகங்காரத்தைத் தொலைக்கக்கருதி, தாம் யாவர்க்கும் புத்திரூபமாய் விளங்குகின்றமையால் பிரமதேவர் மனசிற் பிரவேசித்துத், திருக்கைலாச மலைக்குப் போய்ச் சிவபெருமானைத் தரிசிக்க வேண்டுமென்று நினைப்பித்தார்.

பிரமதேவர் ஈசுவர தரிசனத்தின்பொருட்டு அகங்காரத்துடன் திருக் கைலாச மலைக்கு வந்தார். அப்பொழுது உமாதேவியார் பரம சிவனை நோக்கி, நாதரே! தேவரீரைப்போல் பிரமனுக்கும் ஐந்து தலை யிருத்தல் கூடாது. இவனுக்கு ஒரு பேதங் கற்பிக்க வேண்டும் என்று பிரார்த்திக்க; அது கேட்ட பரமசிவன் பிரமதேவருக்கு அகங் காரமும் சிவாபராதமும் அதிகரித்தலை நோக்கி அவருடைய ஒரு தலையைத் தமது நகத்தாற் கிள்ளியெறிந்தார். உடனே பிரமதேவர் பயந்து நாம் சிவாபராதியானோம். சிவாபராதம் மோக்ஷத்தையுங் கெடுக்கும். அதனால் பத்தி, வைராக்கியம், ஞானம், இராஜயோக முதலிய நன்மைகளெல்லாம் நாச மடையும். நமது சிவாபராதம் எவ்விதம் நீங்கும். ஈசுவரகிருபை எவ்விதம் உண்டாகுமென்று மிகுந்த வருத்தத்துடன் பரமசிவனை வேதபாத தோத்திரங்களால் துதிக்கப், பரமசிவன் அதற்கு மகிழ்ந்து, பிரமனே! உன்னுடைய சிவா பராதம் நீங்குதற் பொருட்டுக் காளாகருவன க்ஷேத்திரத்தை அடை யக் கடவாய் என்று அநுககிரகஞ் செய்தார். உடனே பிரமதேவர் காளாகருவனம் வந்தார்.

விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் பிரமதேவருக்குக் கிடைத்த தண்டனையைக் குறித்து மிகப்பயந்து ஈசுவரனைத் தியானம் பண்ணி அஞ்சலி செய்து, ஈசுவரன் அகங்காரங்கொண்ட பிரமாவின் தலை யைக் கிள்ளி விட்டார். நாமே ஈசுவரன் என்ற அகங்கார புத்தி நமக்கும் இருக்கிறது. என் செய்வோமென்ற கவலையுடன் திருக் கைலாச மலைக்குப் போய்ச் சிவபெருமானைத் தரிசித்துத் துதித்தார் கள். அதற்கு மகிழ்ந்து, சிவபெருமான் விஷ்ணு முதலிய தேவர்களை நோக்கித், "தேவர்களே! நீங்கள் உங்களுடைய சிவாபராதத்தை நீக்கிக்கொள்ளுதற் பொருட்டுக் காளாகரு வனத்தை யடைந்து அப ராதசகேசப் பெருமானை அன்போடு வணங்கக்கடவீர்கள் அவ்வனத் தில் ஆன்மாக்கள் செய்யும் அபராதங்களை யெல்லாம் சகிப்பதால் அபராத சகேசரென்று பெயர்வழங்குகிற சகஸ்ராக்ஷ பரமேசுவரரும் கைலாசப் பிரஸ்தரரூபமாய் வீற்றிருக்கின்றமையால் கைலாச நாயகி யென்று பெயர்வழங்குகிற பராசத்தியாரும் அநுக்கிரகத்தின் பொரு ட்டு விளங்குகிறார்கள். அங்கு அநுக்கிரகம்பெறும்வரை உக்கிரமான தவஞ் செய்யுங்கள். உங்களுக்கு ஈசுவரன் நிச்சயமாய் அநுக்கிரகஞ் செய்வார் என்று அருளிச்செய்த திருவாக்கைக் கேட்ட விஷ்ணு முதலிய தேவர்கள் கபால வனத்தை யடைந்து சித்திரைமாச முதல் வைசாகஉற்சவம்வரை அச்சத்தோடும் அன்போடும் அவ்வனத்துக்கு

நாற்பக்கத்தும் சூழ்ந்து பிரமதேவனோடு தவஞ்செய்து ஸ்ரீ சூக்தம் உருத்திர சூக்தம் துர்க்கா சூக்தங்களால் சிவபெருமானையும் உமாதேவியாரையும் அன்போடு சுகந்த புஷ்பங்கள்கொண்டு அருச்சித்து இராகாமண்டல பூஜை முதலியவைகளை விதிப்படி செய்து, சருக்கரை யன்னம் பாலன்னம் வடை பாயசம் சுகந்த தாம்பூலம் ஆகிய இவற்றை நிவேதித்து, அநேக அபராதங்களைப் பொறுக்கின்றவரே! சகசிராக்ஷ மகாதேவரே! கால வித்தியாசத்தினால் நாங்கள் செய்த அபராதங்களைப் பொறுத்தருளுக என்று பிரார்த்தித்தார்கள். அது கேட்டருளிய கருணைக் கடலான அபராத சகேசர் வைகாசிமாதப் பௌர்ணிமையில் பிரமன் முதலிய தேவர்களை நோக்கி, நீங்கள் அஞ்ஞானத்தாற் செய்த குற்றங்க ளெல்லாவற்றையும் பொறுத்தருளினோம். உங்கள் விருப்பத்தைப் பூர்த்திசெய்கின்றோம் என்று அநுக்கிரகஞ் செய்தார். பிரமன் முதலிய தேவர்கள் சிவபெருமானை நோக்கிப், பிரபுவே! தேவரீர் எங்கள் அபராதங்களைச் சகித்தீராகையால் தேவரீர்க்கு அபராத சகேசரென்று பெயர் விளங்கவேண்டும். எங்கள் சிருட்டி முதலிய காரியங்களுக்கு நேரும் இடையூற்றை நீக்கித் தேவரீர் துணைசெய்யவேண்டு மென்று பிரார்த்திக்கச், சிவபெருமானும் அப்படியே ஆகுக என்று வரங்கொடுத்தருளினார். அன்று தொடங்கி அப் பெருமானுக்கு அபராத சகேசர் என்று பெயர் விளங்குகின்றது. இவ்விதம் லளிதா பரமேசுவரியின் கருத்தை யநுசரித்துச் சிவபெருமான் பிரமன் முதலிய தேவர்களின் குற்றத்தைப் பொறுத்து அநுக்கிரகஞ் செய்தருளினார். இதைப் படித்தவர்களும் கேட்டவர்களும் சிவாபராதம் நீங்கப் பெறுவார்கள்.

**காரணேசாதி யபராத சகனச் சருக்கம் - முற்றிற்று.**



# ஆதிசேஷாபராத சமனச் சருக்கம்.

முனிவர்களே! ஆதிசேஷாபராத சமனமென்னுஞ் சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்:—, முன்னொருகாலத்திலே தெய்வச் செயலாலும் தேச கால விரோதத்தாலும் ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் விரோத முண்டாயிற்று. வாயுதேவன் நானே உயர்ந்தவன். நானே எல்லாச் சீவர்களுக்கும் பிராணன். ஆதலால் நானே எல்லாத் தேவர்களினும் அதிக பலமுள்ளவன் என்று நினைத்தான். ஆதிசேஷன் நானே ஆயிரம் படங்களினாற் பூமியைத் தாங்குதலால் எனக்

குச் சமானம் வேறொருவருமில்லை யென்று நினைத்தான். இவ்வாறு இருவரும் அகங்கரித்துச் சத்தியலோகஞ் சென்று, பிரமதேவரை நோக்கி, எங்களுள் யார் அதிக வன்மையுள்ளவனென்று கேட்டார்கள். அது கேட்டுப், பிரமதேவர் அவர்கள் வன்மையின் ஏற்றத் தாழ்வுணர்ந்துகூற ஆற்றலில்லாதவராய் மௌனமாயிருந்தார். அது கண்ட இருவரும் வைகுண்டத்துக்குப்போய், விஷ்ணுவின் சந்நிதானத்தில் அச்சத்தோடும் அன்போடும் நின்று, வேத பாதாதி தோத்திரங்களால் துதித்துத், தண்டம்போல் நமஸ்கரித்து, அஞ்சலிசெய்து தங்கள் சந்தேகத்தைக் கேட்டார்கள். விஷ்ணுவும் அவ்வாறே மௌனமா யிருந்தார். பின்பு அவ்விருவரும் திருக்கைலாச மலைக்குச் சென்று, ஸ்ரீ ருத்திர சூக்தங்களால் சிவபெருமானைத் துதித்து, மகேசுவர! மகேசான! எங்களுள் யார் அதிக வன்மை யுள்ளவனென்று அகங்கரித்து வினவினார்கள். சிவபெருமான் அவர்களை நோக்கி "உங்களுள் ஆதிசேஷன் ஆயிரஞ் சிகரங்களையுடைய மேருமலையைத் தனது படங்களால் மூடிக்கொள்க. அவைகளுள் ஒரு சிகரத்தை வாயுதேவன் பிடுங்கி யெறிந்தால் வாயுவே அதிக பலசாலி. இன்றேல் ஆதிசேஷனே அதிக பலசாலி" யென்றார். உடனே அங்கு நின்றும் சென்று ஆதிசேஷன் தனது ஆயிரம் படங்களாலும் மேருவின் ஆயிரஞ் சிகரங்களையும் மூடிக்கொள்ள; வாயுதேவன் அதிக கோபத்துடன் மூன்று முகூர்த்தம்வரை பிரளயகாலம் போலச் சப்தகுல பருவதங்களையும் பிடுங்கிச், சப்த சமுத்திரங்களையும் கலக்கிச், சப்தலோகங்களையும் நடுங்கச்செய்து உலக முழுதையும் நாசஞ்செய்கிற பெருங்காற்றாய் விருத்தியடைந்தும் மேரு சிகரங்களை அணுவளவேனும் அசைக்க முடியாதவனாய், மிக வருத்தமடைந்து, நாம் என்ன செய்வோம்? எங்குப் புகுவோம்? எவரைச் சரண மடைவோம்? சமஸ்த சீவர்களுக்கும் நம்மால் இடையூறு விளைந்து நமக்குச் சிவாபராதம் வந்து விட்டது. வந்தும் நமது பிரதிஞ்ஞை முற்றுப் பெறவில்லையாயின் நமக்கு உலகத்தில் அவமதிப்புண்டாகுமே என்றுஆலோசித்துத், தன் வடிவத்தைக் குறுக்கிக்கொண்டு ஆதிசேஷனது மூக்குநுனியிற் பிரவேசித்தான். உடனே மூக்கிற்றுன்பம் உண்டாக, ஆதிசேஷன்மூக்கைத்தூககிப் பூற்காரஞ்செய்தான். அவ்வளவில் வாயுதேவன் மூன்று சிகரங்களை அசைத்துப் பிடுங்கி மூன்றிடங்களில் வீசினான். ஆதிசேஷன் கர்வ நீங்கிச் சிவ சந்நிதானத்தை யடைந்து வெட்கித் தலை குனிந்து நிற்கச், சிவபெருமான் ஆதிசேஷனை நோக்கிக் கோபித்து, "ஆதிசேஷனே! நீ நாகராஜனாய் நமது ஆஞ்ஞையின்படி பூமியைத் தாங்குபவனா யிருந்தும், அச்செயலால் நமக்குச் சமானம் ஒருவரு

மில்லை யென்று தருக்குற்று, சர்வாந்தர்யாமியாயும் எங்குஞ் சஞ்சரிப் பவனுயும் நமது அஷ்ட மூர்த்தங்களுள் ஒன்றாயும் உள்ள வாயுதேவ னோடு வாதஞ்செய்தாய். அதனால் உலக முழுதுந் துன்பமடைந்தது. நாம் சமஸ்த சீவர்களின் உள்ளும் புறமும் எங்கும் வியாபித்திருப்ப தால் அவர்களுக்குச் செய்த குற்றம் நமக்குச் செய்ததே யாய்ச் சிவா பராதியானய் என்று அருளிச்செய்ய; ஆதிசேடன் அதுகேட்டுப் பயந்து வருந்திப் பரமசிவனை நமஸ்கரித்து அஞ்சலிகூப்பி நின்று, பக வனே! அஞ்ஞானத்தால் நிகழ்ந்த எனது குற்றந்தீரும் உபாயத்தை யருளிச்செய்து எளியேனைக் காத்தருள வேண்டுமென்று பிரார்த் திக்கப், பரமசிவன் "ஆதிசேடனே! விராண்மூல புரமென்னுந் திரு வாரூருக்குத் தென் கிழக்கில் காளாகருவன மென்று ஒரு தல மிருக் கின்றது. அங்கே அபராத சகேசுவரர் சாந்நித்தியஞ் செய்கிறார். அத் தலத்திற்குப் போய் அவ் விலிங்கத்தைப் பூசித்துச் சுகமடைவாய் என்றருளிச் செய்தார்.

அதுகேட்ட ஆதிசேடன் மிக விரைந்து காளாகரு வனத்துக்கு வந்து, தனது குற்றம் நீங்கும்படி அபராத சகேசுவரரைப் பூசித்துச், சதருத்திரங்கால் தோத்திரஞ் செய்து வில்வத்தால் அருச்சித்து மிளகன்னம் நிவேதனஞ்செய்து பிரார்த்திக்க; கருணைக் கடலாகிய அபராத சகேசர் "ஆதிசேடனே! உனது குற்றத்தைச் சகித்தோம். இனி அகங்காரஞ் செய்யாதே. சர்வாந்தர்யாமியான வாயு நமது வடிவம். அவனோடு உனக்கு வாதம் வேண்டாம். நீ பாதாளத்தி லிருந்து வந்த மார்க்கத்திற்குச் சேஷபில மென்று பெயர் வழங்குக. அதிலுள்ள தீர்த்தம் ஆன்மாக்களின் பாவங்களை யெல்லாம் நீக்கிச் சேஷதீர்த்தமென்று பிரசித்தி பெறுக. நீ சிவாபராதஞ் செய்தா யென்பதற்கு அடையாளமாக ஒவ்வொரு காலங்களில் உனக்குத் தலைவலியுண்டாக, அப்பொழுது பூகம்பம் உண்டாகும். நாம் உனது குற்றத்தை சகித்தோ மென்பதற்கு அடையாளமாக அத் தலைவலி ஒரு க்ஷணமாத்திரத்தில் நின்றுவிடும் என்று அநுக்கிரகஞ் செய்து அந்தர்த்தானமானார்.

## ஆதிசேஷாபராத க்ஷமனச் சருக்கம் - முற்றிற்று.



# இந்திராபாராத சமனச் சருக்கம்.



முனிவர்களே! இந்திராபராத சமனச் சரித்திரததைச சொல்லுகின்ருேம்;— முன்னொரு காலத்தில் இந்திரன் ஐராவதத்தின்மேலறித், தேவர்களெல்லாம் சூழ்ந்துவரக், கந்தருவகானங்களைக் கேட்டும் அரம்பையர் நடனங்களைப் பார்த்தும் தேவராஜ்பாதிகாரந் தனக்கு இருக்கின்றதென்னும் தருக்குடன் மகிழ்ந்து உலாவந்தான் அப பொழுது அவன் நமக்குச் சமானம் ஒருவருமில்லை. நாமே எல்லாரினும் மேன்மையுடையோம். ஆயினும் பூலோகததிலே திருவாரூரிலுள்ள கலா தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்பவர்கள் நமது உலகத்தையடைந்து நமக்குச் சமானமாய் விடுகின்ருர்களென்று கருதிப் பொருமையுற்றுச், சம்வர்த்தகவாயுவை அழைத்து, வாயுதேவனே! பூமியிலே விராண்மூல புரமென்னுந் திருவாரூரிலே அதி பரிசுத்தமாயும் சுபமாயும் கலா தீர்த்தமென ஒன்றிருக்கிறது. அது தேவர்கள் உமாதேவியார்க்குப் பிரியகரமான யாகம் புரிந்த இடமாகும். அது முதல் அதற்குச் சிதக்கினி குண்டமென்று பெயர். அந்நகர்க்குத் தேவயாக புரமென்று பெயர். அத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கிற மனிதர்கள் மகா பாவங்களிலிருந்து விலகித் திவ்ய போகங்களை யநுபவிக்கும் நமது லோகத்துக்கு வந்து விடுகிருர்கள். அத்தீர்த்தம் நமது கௌரவ பங்கத்துக்கு ஏதுவா யிருக்கின்றமையின், நீ இப்பொழுதே அதனை யடைந்து இரண்டு முகூர்த்த காலத்திற்குள் மண்மாரியால் தூர்த்துவிடுக என்று ஆஞ்ஞாபித்தான். வாயுதேவன் இந்திரனது ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு வேகமாய் வந்து உலகத்துக் கெல்லாம் உபத்திரவம் உண்டாகும்படி உக்கிரனுய் மண்மாரி பொழிந்து ஆழமான கலாதீர்த்தத்தை ஒன்றரை முகூர்த்தத்துள் மேடாக்கிவிட்டுத் தேவலோகஞ் சென்று, தேவர்கள் சூழச் சபையில் வீற்றிருக்கும் இந்திரனை வணங்கி அஞ்சலிசெய்து நின்று, அரசனே! உம்முடைய ஆஞ்ஞையின்படி கலாதீர்த்தத்தை மேடு செய்து விட்டேன் என்றுன். அது கேட்ட இந்திரன் மகிழ்ந்து வாயுதேவனைப் புகழ்ந்தான். உடனே இந்திரனுக்குச் சகிக்கமுடியாத வயிற்று வலி யுண்டாக; அதனுல் இந்திரன் வருந்தி, நாம் என்ன செய்வோம்? எங்கேபோவோம்? யார் நம்மைக் காப்பார்? என்று வருந்தித் தன் குருவாகிய வியாழ பகவானிடஞ் செல்ல; அவர் இந்திரனுடைய வயிற்றுவலியின் காரணத்தை யோக திருஷ்டியினுல் ஆராய்ந்தறிந்து "இந்திரனே! நீ விராட்புருடனுக்கு மூலாதார க்ஷேத்

திரமாகிய திருவாரூரில் உள்ளதாயும் சிவபெருமானுக்குத் திருமேனியாயும் அதி.பரிசுத்தமாயும் அறுபத்து நான்கு கட்டங்களை யுடையதாயும் உள்ள கலாதீர்த்தத்தைத் தூர்ப்பித்த குற்றத்தால் உனக்கு வயிற்றுவலி யுண்டாயிற்று. அது நீங்குதற் பொருட்டுத் தயாநிதியாகிய சங்கரனைச் சரணமடைவாய். யாவர்க்கும் பயத்தைக் கொடுப்பவரும் நீக்குபவரும் சிவபெருமானே யாவர்'' என்று கூறினர்.

அதுகேட்ட இந்திரன் சிவாபராதத்துக்குப் பயந்து சோகங்கொண்டு குருவை நமஸ்கரித்துச், சுவாமீ! எந்தத்தலத்தில் சிவபெருமானைப் பூசித்தால் என்குற்றம் நீங்கும். அடியேனிடத்துத் தயைகூர்ந்து அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க; வியாழபகவான் சிவாபராதத்தை நீக்கத்தக்க உத்தம தலம் யாதென்று ஞான திருஷ்டியினல் அறிந்து, இந்திரனே! உன்னுடைய சிவாபராதம் நீங்கத்தக்க தலத்தைச் சொல்லுகின்றேம். கேட்பாயாக. விராண் மூலபுரத்துக்குத் தெற்கிலுள்ள வெள்ளாற்றங் கரையிலே, திருநெல்லிக் காவுக்குக் கீழ்த்திசையில், புன்னுகாரணிய மென்னும் புன்னைவாசலுக்குத் தென்றிசையில், பிரமபுரியென்னும் வலிவலத்துக்கு மேற்றிசையில், கோமுத் தீசுவரத்துக்கும் திருக்கைச் சினத்துக்கும் வடதிசையில் காளாகரு வனமென்று ஒரு புராதன க்ஷேத்திர மிருக்கிறது. அங்குச் சென்று ஸ்ரீ ருத்திரயாமளத்திற் சொல்லிய விதிப்படி ஸ்ரீ ருத்திராத்தியாயத்தையும் பஞ்சப் பிரம மகாமந்திரங்களையும் செபித்து, அங்கு எழுந்தருளி யிருக்கும் அபராத சகேச சிவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகஞ் செய்து, சுகந்த புஷ்பஞ் சாத்தி, வில்வ பத்திரங்களால் ஸ்ரீ ருத்திர திரிசதார்ச்சனை செய்து, சுத்தான்னம் குளான்னம் வடை பாயசம் ஆகிய இவைகளை நிவேதனஞ் செய்து, அடியேன் செய்த அபராதத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துத் தோத்திரஞ் செய்தால், அப்பெருமான் உடனே உனக்கு அநுக்கிரகஞ் செய்வாரென்று சொன்னர். அது கேட்ட இந்திரன் உடனே காளாகரு வனத்தையடைந்து அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து குருவாக்கின்படி பூஜை ஜபம் தியானம் நைவேத்யம் தோத்திரம் ஆகியவற்றை அன்போடு செய்து அபராத சகேசப் பெருமானைப் பிரார்த்திக்க; அவர் திருவுளமிரங்கி, "இந்திரனே! நீ திருவாரூரிலுள்ள கலாதீர்த்தத்தை மண் மாரியாற் றூர்த்துவிட்ட சிவாபராதத்தால் உனக்குச் சகிக்கமுடியாத வயிற்று வலி வந்தது. சிவாபராதத் தாலேயே எல்லாருக்கும் வியாதிகள் உண்டாகின்றன. நம்மை அன்போடு பூசித்த உனது சிவாப

ராதத்தைப் பொறுத்தருளினோம். நீ தேவகணங்களுடன் கலாதீர்த்தத்தை முன்போல் வெட்டி அமைப்பாயானால் பராசக்தியின் கருணையைப் பெறுவாய். அவளநுக்கிரக மில்லாமல் வயிற்றுவலி தீராதென்று அசரீரியாற் கூற; அது கேட்ட இந்திரன் அப்பொழுதே தேவர்களுடன் திருவாரூருக்கு வந்து கலாதீர்த்தத்தை முன்போல வெட்டிப் படித்துறைகள் அமைத்துப் புதுப்பித்தான். உடனே இந்திரனுக்கு வயிற்றுவலி நீங்கிற்று. இக்கதையைப் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் சிவாநுக்கிரகத்தினாலே எல்லா வியாதிகளும் நீங்கி இன்ப முண்டாகும்.

இந்திராபராத சமனச் சருக்கம் - முற்றிற்று.



## * மிருகார்ப்பகாவனச் சருக்கம்.

முனிவர்களே! சகசிராக்ஷ பரமேசுவரன் மான்கன்றைப் பரிபாலித்த சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்;— முன்னொரு காலத்திலே தன்னையடைந்தோர் யாவருக்கும் இன்பத்தைக் கொடுக்குங் காளாகரு வனத்திலே சோமசர்மா என்று ஒரு யோகியிருந்தார். அவர் அஷ்டாங்க யோகமறிந்தவர். சகல சாஸ்திரங்களையும் உணர்ந்தவர். சமஸ்த சீவர்களிடத்தும் சமபுத்தி யுள்ளவர். வெப்பத்தையும் குளிர்ச்சியையும் ஒப்பாக நினைப்பவர். அவர் அநேக முனிவர்களாற் சூழப்பட்டவராய்த் தவஞ் செய்து கொண்டிருந்தார். அவருடைய ஆச்சிரமத்திலே முற்பிறப்பிற் புண்ணியஞ் செய்த ஒரு பெண்மான் இருந்தது. அதை அங்குள்ள முனிபத்தினிகள் அன்போடுவளர்த்து வந்தார்கள். அந்தமான் சிலநாட் சென்று கருப்பந் தரித்தது. அதற்கு முனிபத்தினிகளும் அவர்களுடைய பிள்ளைகளும் மிக்க அன்புடன் பரிசுத்தமாகிய புல் முதலிய சாத்துவிக ஆகாரங்களைக் கொடுத்து வர, அதனால் விருத்தியடைந்த கருப்பத்தை யுடைமையால் அந்தமான் ஞானம் பொருந்திய சிசுவையுடையதாய்க் கருப்பம் நிரம்பி, மாசி மாசத்திலே மகநக்ஷத்திரமும் சுபலக்கினமும் வாய்ந்த சுபதினத்திலே பிரசவித்து, உடனே அவ்வேதனையால் மிருகசரீரத்தை விட்டு அம் முனிவர்கள் பார்த்திருக்கத் தன் பூருவ புண்ணியத்

* மிருகம்—மான். அர்ப்பகம்—கன்று. அவனம்—பரிபாலனம் மிருகம் அர்ப்பகம் அவனம் என்பன மிருகார்ப்பகாவனம் என நின்றது.

தால் தேவசரீரம் பெற்று விமானத்திலேறித், தெய்வப் பெண்கள் சூழ்ந்து வரவும் தேவர்கள் தோத்திரஞ் செய்யவும் மன மகிழ்ச்சியுடன் திருக்கைலாசத்தை யடைந்தது.

அப்பொழுது முனிவர்களெல்லாம் மிக ஆச்சரியமடைந்து அந்தமானின் புண்ணிய பரிபாகத்தைப் புகழ்ந்து, பின்பு தாயில்லாத மான்கன்றை நோக்கி, "முற்பிறப்பில் இந்த மான் யார்? என்ன பாவஞ் செய்தது? எந்தக் கரும பரிபாகத்தினுல் மான் பிறப்பை யடைந்தது?" என்றுலோசித்து, ஞான திருஷ்டியினுல் அதன் பூருவ ஜன்மாந்தர ஸ்திதியை யறிந்து, அதிசயமடைந்து "இது பூருவ ஜன்மத்தில் ஒரு தபசி. சற்காரியங்களுக்கு அநேக விக்கினமென்று பெரியோர் கூறுகிறபடி அவருக்கு இறக்குங் காலத்தில் மான்கன்றின்பால் ஆசையுண்டானமையால் சிவாபராதம் விளைந்து இப்பிறப்பு உண்டாயிற்று" என வுணர்ந்து, அதன்பால் இரக்கமடைந்து, அதனைக் காத்தற் பொருட்டு ஈசுவரனை நோக்கி "அடியார்களின் துன்பங்களை நீக்குகின்றவரே! கல்யாண குணங்களுக்கு நிலயமாயுள்ளவரே! காமேசுவரிக்குப் பிரியரே! தேவர்களெல்லாம் வணங்குந் திருவடித் தாமரையை யுடையவரே! வழிப்பட்டவர்களைக் காத்தருளும் அபயகரத்தை யுடையவரே! மகாதேவரே! சகசிராக்ஷ பரமேசுவரரே! சிவாபராதத்தால் மான் வடிவமடைந்த இந்தத் தபசியைக் காத்தருள வேண்டும். உமக்கு நமஸ்காரம்" என்று பிரார்த்தித்தார்கள்.

உடனே கிருபா சொரூபியாகிய அபராத சகேசர் மான்கன்றைக் காத்தருளும் பொருட்டு க்ஷமாவதிதேவியார்க்கு ஆஞ்ஞாபிக்கக்; கிருபா சமுத்திரமாகிய அம்மையார் அதனை ஈன்ற பெண்மான் போன்ற வடிவமெடுத்துக்கொண்டு அக்கன்றின் சமீபத்தில் வர; முனிவர்கள் அதைப் பார்த்து, இதுஎன்ன ஆச்சரியம். மரண மடைந்த மான் திரும்ப எவ்விதம் பிழைத்தது. மரித்தவுடன் நாமெல்லாம் பார்த்திருக்க விமானத்திலேறித் திருக்கைலாச மடைந்ததே. இந்த மான்கன்றின் சுகிருதத்தினுலாவது முனிவர்களின் சாந்நித்திய விசேடத்தினுலாவது பிழைத்ததோ என்றுலோசித்து, மரணமடைந்தவர் பிழைப்பதென்பது கிடையாது. நமது பிரார்த்தனைக் கிரங்கிப் பரமேசுவரனுல் ஆஞ்ஞாபிக்கப் பெற்ற க்ஷமாவதி தேவியாரே இவ்வாறு வந்திருக்கிறுர் என்று நிச்சயித்து, மான்வடிவாயுள்ள க்ஷமாவதி தேவியாரைப் பூசித்தார்கள். அம்மையார் தமது திருமுலைப்பால் கொடுத்து அந்த மான் கன்றை வளர்த்துவர, அதுவும் தினமும் உமாதேவியாரின்

திருமுலைப்பால் குடித்த விசேடத்தினால் சுக்கிலபக்ஷ சந்திரன்போல விருத்தியடைந்தது. மான்வடிவாகிய அம்மையார் அது புல் நுனிகளையும் தருப்பை நுனிகளையும் தானே கடித்துத் தின்று தன்னுடம்பை வளர்த்துக் கொள்ளும் பருவமடைந்தபொழுது, அதனை நாவினால் நக்கி மனமகிழ்ச்சியுடன் முனிவரெல்லாங் காண மறைந்தருளினார். இவ்வதிசயத்தை நோக்கி அம் முனிவர்கள் உமாதேவியாரை நமஸ்கரித்தார்கள். மான்கன்றும் அம்மையாரின் திருமுலைப்பால் குடித்த விசேடத்தால் பூர்வஜன்ம ஞானம் பெற்று மரணமடைந்து, பின்பு பிராமண குலத்திற் பிறந்து யோகவித்தியா சாமர்த்தியம் வாய்ந்து, ஜன்மாந்தர ஞானத்தை யடைந்து சிவசாயுச்சியம் பெற்றது.

மிருகார்ப்பகாவனச் சருக்கம் - முற்றிற்று.



# சிரௌத மார்க்கப் பிரதரிசனச் சருக்கம்.



முனிவர்களே! சிரௌத மார்க்கப் பிரதரிசன மென்னுஞ் சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்;— முந்தின யுகத்திலே இப்பூமியிலே பிராமணர் க்ஷத்திரியர் முதலினோர் திரவிய ஆசை மிகுந்தவர்களாயும், மதத்தினால் பிரக்ஞாந்தகர்களாயும், ஈசுவர பக்தியில்லாதவர்களாயும் சிரௌத மார்க்கத்தை நிந்தித்துக் காமத்தில் இச்சையுள்ளவர்களாயும் வேதத்திற் கூறிய கருமங்களைப் பொய்யென்று வாதித்தார்கள்; அது நோக்கிக் கிருபாநிதியாயும் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் உள்ள பரமேசுவரன் ஆன்மாக்களுக்குப் போக மோக்ஷங்களைக் கொடுக்கிற மங்கலமுள்ளனவாய் உயர்ந்த இரண்டு மார்க்கங்களை ஸ்தாபனஞ் செய்தருளினார். அவ்விரண்டும் உலகிற்கு நன்மையைத் தருவன. தேவர்களுக்கு உரிமைபெற்றன. சிரேஷ்டமுள்ளன. மும்மலங்களை நீக்கத்தக்கன. இரணத் திரயங்களைக் கெடுப்பன. ஞான மார்க்கம் கரும மார்க்கம் என்று பெயருள்ளன. அவற்றுள், கரும மார்க்கம் சித்தசுத்திக்குக் காரணம். சுவர்க்க போகத்துக்குச் சாதனம் இந்திரன் அக்கினி சந்திரன் முதலிய தேவர்களுக்குத் திருப்தி செய்யத் தக்கது. யஞ்ஞத்தினால் தேவர்களும் புத்திரனால் பிதிரரும் பிரமசரியத்தினால் முனிவர்களும் திருப்தியடைகிறார்களென்பது வேதத்தின் ஆணை. இவற்றுள் தேவதிருப்திக்குக் காரணமாகிய யஞ்ஞத்தினாலேயே தேவகடன் நீங்குகிறது. இந்த யஞ்ஞம் மந்திர தந்திர சொரூபமாகலால் உயர்ந்தது. இது

சைவம், வைதிகம், மிசிரமென்று மூன்று வகைப்படும். இம்மூன்ற னுள்ளும் அநேக வகையுண்டு. இந்த யஞ்ஞ கருமங்களை உலகத் தைக் காத்தற்பொருட்டுப் பரமசிவன் வெளிப்படுத்தினார். ஆன்ம யோகமென்று பெயருள்ள சைவயஞ்ஞம் யஞ்ஞங்களெல்லாவற்றுள் ளும் உயர்ந்தது.

அநேக முனிவர்கள் மனமகிழ்ந்து தங்கள் தங்கள் இஷ்டசித்தி யின் பொருட்டுப் பத்தி சிரத்தையுடன் அவ்வவ் விதிப்படி யஞ்ஞ கருமங்களைச் செய்யத் தொடங்கினார்கள். அப்பொழுது அபராத சகேசுவரர் கருணைமேலீட்டால் முனிவர்களுக்கு யஞ்ஞகருமங்களைச் செய்து காண்பிக்கவேண்டு மென்று திருவுளங்கொண்டு, விபூதி பூசிய திருமேனியும், திரிபுண்டரம் விளங்குகின்ற நெற்றியும், உருத்திராக்க மணிந்த கண்டமும். உடையவராய்ப் பிராமண வேடம் பூண்டு கோமுத்தீசுவரர் என்னும் பெயருடன் தோன்றி, ஆன்மாக்களுக்குப் போகங்களைக் கொடுக்கிற பசு பந்த முதலிய யஞ்ஞங்களையும் ஆத்ம அநாத்ம விவேகத்தைத்தரும் ஆன்மயோகமென்னும் யஞ்ஞத்தையும் செய்து காண்பித்தார். ஆத்ம அநாத்ம விவேகம் முறைப்படி அறி யப்படுமானல் ஆன்மசொரூப விஞ்ஞானம் தனக்குத் தானாக அநு பவிக்கப்படுமென்று பேத ஞானத்தைப் பிரகாசஞ் செய்யக் கருதி, வேதாகம மிசிரமான ஆன்மயோக மென்னும் யஞ்ஞத்தை வசந்த ருதுவில் வைசாக சுத்தத்தில் ஆரம்பித்துச், சிதகக்னி குண்டத்தில் ஞானமென்கிற அக்கினியை மூட்டி, காருகபத்திய முதலிய அக்கினி ஸ்தானங்களில் சைவ முதலிய மூன்றக்கினிகளையும் ஸ்தாபித்து, பிராதச்சவன முதலிய கருமங்களை அவ்வவ்வாதார தேவதைகளை நோக்கிச் செய்து, பிரதாஞைகுதியை ஞானக்கினியில் ஓமம் பண்ணி அவபிருத ஸ்நான முடித்து, முன்பு சுவர்ண குண்டலங்களையுடைய பிராமணராய் வந்த அச்சிவபெருமான் நாக குண்டலங்களை யணிந்த திருச்செவியும் சந்திரனைத் தரித்த சிரசும் பரிசுத்தம் பொருந்திய பளிங்குபோல் விளங்குந் திருமேனியும் க்ஷமாவதிதேவியாரால் ஆலிங் கனஞ் செய்யப்பட்ட இடப்பாகமும் உடையவராய், நந்தி பிருங்கி முதலியோர் சூழ்ந்து சேவிக்க இடபாரூடராய்த் தோன்றி யருள; அதுகண்ட முனிவர்களெல்லாம் ஆச்சரியமும் மகிழ்வும் உடையவர் களாய், கோமுத்தீசுவரரைச் சகசிராக்ஷ பரமேசுவரராகவும் அவரது தீக்ஷாபத்தினியும் * குரரியால் அலங்கரிக்கப்பட்ட சிரசையுடைய

* குரரி—யாகஞ்செய்யும் பர்த்தாக்களின் தீக்ஷாபத்தினிகள் சிரசில் அணியத்தக்கது.

வருமாகிய மஞ்சுளாம்பிகையை க்ஷமாவதி தேவியாராகவும் நினைத்தார்கள். பரமேசுவரன் இவ்வாறு தரிசனங்கொடுத்து,'முனிவர்களே! உலகத்தில் சகல ஜீவர்களும் மலத்திரயங்களாலும் தாபத்திரயங்களாலும் தசேந்திரியங்களாலும் உண்டாகுங் குற்றங்களை யடைந்து பூமி நரக சொர்க்கங்களைச்சேர்ந்து இன்ப துன்பங்களை யநுபவிக்கின்றார்கள். அகண்டானந்த ரூபமாகிய நமது சாயுச்சியத்தை இவ்வான்மயோக மென்னுங் கருமத்தினாலேயே அடைவார்கள். இது செய்தற்கு ஆற்றலில்லாதவர்கள் இநதத் தலத்தில் வைசாகோற்சவத்தில் சௌரத மார்க்கப் பிரதரிசனம் என்னும் உற்சவத்தைத் தரிசனஞ் செய்வார்களாயின் அவர்களுக்கு உத்தமமான சாயுச்சியங் கிடைக்கும். இதிற் சந்தேகமில்லை. சத்தியம்! சத்தியம்!! என்று சொல்லி யாவருங் காணச் சிதக்கினி குண்டத்தில் மறைந்தருளினார். இவ்வற்புதத்தை நோக்கி யாவரும் சகசிராக்ஷ பரமேசுவரனே கோமுத்தீசுவரராகவும் க்ஷமாவதி தேவியாரே மஞ்சுளாம்பிகையாகவும் தோன்றியருளித் தயையினால் ஆன்ம யோகத்தைச் செய்து காட்டினார்களென்று ஒருவரோடொருவர் கூறி ஆனநதக் கடலில் மூழ்கினார்கள்.

**சௌரத மார்க்கப் பிரதரிசனச் சருக்கம் = முற்றிற்று.**

# பதுமாபராத சகனச் சருக்கம்.

முனிவர்களே! பாவங்களெல்லாவற்றையும் நீக்குகின்ற பதுமாபராத சகனமென்னுஞ் சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்;— முன்னொருகாலத்திலே இலக்குமிதேவியுடன் விஷ்ணுமூர்த்தியானவர் சற்புத்திரப் பேற்றையடையும்பொருட்டுச்சிவபெருமானையும் உமாதேவியாரையும் நோக்கி, அநேக சிவ விரதஙகளைச் சிரத்தையோடு அநுட்டித்து வர; அப்பொழுது ததீசி முதலிய முனிவர்கள் வந்து, விஷ்ணுவே! பிரணவ சொரூபராயும் சச்சிதானந்தராயும் உள்ள சிவபெருமானுடைய திருவுருவை உமது கருத்திற்கேற்பப் பூசித்து வருவீராயின் இஷ்டசித்தி யுண்டாகுமென்று கூறிச் சென்றார்கள்.

மறுநாள் விஷ்ணுமூர்த்தியானவர் முன்போலப் பூசை முடித்துக்கொண்டு, முனிவர்கள் கூறியது நல்லதென்று நினைத்துச், சிவ

---

* பதுமா - இலக்குமி.

பெருமானை நோக்கிச், சந்திரசூட! இடபத்துவச! மகாதேவ! கங்காதர! பக்தார்த்தி பஞ்சனேசான! வந்தியா தோஷ நிவாரண! அகண்டானந்த சிற்கன ! எனத் துதித்துச், சுவாமீ ! அடியேன் சோமாஸ்கந்த மூர்த்தத்தைப் பூசிக்கவேண்டுமென விரும்புகிறேன். சற்புத்திரப்பேற்றின் பொருட்டும் உலகோபகாரமாகவும் அந்த மூர்த்தத்தைக் கொடுத்தருளவேண்டு மென்று பிரார்த்தித்துத் தியானிக்க; ஈசுவர கிருபையால் அவருடைய அஞ்சலியஸ்தத்தில் ஒரு வெள்ளைச் செவ்வந்திப்பூ விழுந்தது. உடனே விஷ்ணுமூர்த்தியானவர் கண்களைத் திறந்து பார்க்க, சிவபெருமான் கங்கையும் சந்திரனும் சிரசிற் றரித்தவராய்க், கோடி சூரியப்பிரகாசமாய்க், கோடி சந்திர சீதளாகாரராய்த், திவ்விய சுகந்தலேபனராய், ஒருபக்கத்தில் வீரகட்கம் விளங்குபவராய்ச், செங்கழுநீர்ப்புஷ்பந் தரித்தவராய், பரமார்த்தத்தைக் கொடுப்பவராய், இருபத்தைந்து மூர்த்திகளுக்கும் அதீதராய்ச், சாமகானப் பிரியராய்ப், பிரபுவாய்ச், சப்தகோடி மகாமந்திர யந்திரரூப சிங்காசனத்தில் வீற்றிருப்பவராய்க், காரணேசத் தன்மையை விட்டுப் பிரகாசிக்குந் திருமேனியுடையராய், ஆனந்தமிகுந்த ஹம்ஸ நடனஞ்செய்யுஞ் சோமாஸ்கந்த மூர்த்தியாகத் தரிசனங் கொடுத்தருளினார். விஷ்ணுமூர்த்தியும் பரமானந்தத்தால் தழுதழுத்த கண்டமுடையவராய்த் தோத்திரஞ் செய்து, சதருத்திரீயமந்திரங்களாற் பூசித்தார். பின்பு இலக்குமி விட்டுணு இருவர்களும் அம்மூர்த்தியைக் கையிலெடுத்து ஆனந்தமடைந்து தினந்தோறும் பூசித்தார்கள். அன்றியும் ஈசுவரப் பிரீதியின் பொருட்டுச் சிவனடியார்களுக்கு அன்போடு அன்னமளித்தார்கள். அப்பொழுது சிவபெருமான் திருவுளமகிழ்ந்து விஷ்ணுமூர்த்திக்கு அநுக்கிரகம் செய்ய, அவரது திருவருளால், சர்வலோக மனோகரனும், சுவர்ணம்போல ஒளிவாய்ந்த மேனியுடையவனும் சர்வாங்க சுந்தரனும் ஒரு புத்திரன் பிறந்தான். விஷ்ணுமூர்த்தியானவர் அவனுக்கு மன்மதனென்று பெயரிட்டுத் தம்புத்திரனோடும் மனைவியோடும் ஆனந்தமுற்றுத் தியாகராஜராகிய சோமாஸ்கந்தமூர்த்தியை முன்னையினும் விசேடமாகப் பூசித்துவந்தார்.

சிலகாலஞ் சென்ற பின்பு ஒருசமயத்தில் இலக்குமியானவள் "நம்முடைய நாயகனோ விசாலித்து நீண்ட கண்களையுடையவர். எங்கும் நிறைந்தவர். சகல ஜீவர்களிடத்தும் உள்ளிருப்பவர். எல்லா உலகங்களையுங் காக்கின்றவர். உலகத்துக்குக் காரணேசுவரர். பிரத்துக்குப் பரமாயுள்ளவர். அத்தைகய பிரபு நம்மை அன்போடு

மார்பில் வைத்திருக்கிருர். நமக்குப் புத்திரனுகிய மன்மதனே சிறந்த அழகுள்ளவன் ஆதலின் நம்மையொத்தவர் பெண்டிருள் ஒருவரு மில்லை. நாமே எல்லா உலகங்களுக்குந் தலைவியென்று கருதித் தருக் குற்றுச் சோமாஸ்கந்த மூர்த்தியையும் பூசிக்காது பராசத்தியாராகிய காமேசுவரியையும் தனக்குச் சமமாக நினைத்தாள். இவ்வாறு நினைத்த இலக்குமியின் தருக்கு நோக்கிப் பராசத்தியார் கோப மடைந்து அவளது புத்திரனுகிய மன்மதன் அற்பாயுளை யடையக் கடவனென்று சபித்தார். உடனே இலக்குமியானவள் தனக்குக் கிடைத்த சாபத்தை யெண்ணி மிகுந்த துக்கமடைந்து, "ஐயோ, என் கர்வத்தினுல் எனக்கு இத்துன்பம் வந்தது என்று நினைத்துச், சர்வலோகங்களையுங் காத்தருளும் பராசத்தியாரை நோக்கி, "மகா ராக்ஞியே! சகல சீவர்களின் இருதய குகையில் வசிக்கின்றவரே! சிருட்டி, திதி, சங்காரங்களைச் செய்கின்றவரே! உலகங்களுக் கெல் லாந் தாயே! உம்மை நான் சரணமடைகின்றேன். நான் அறி யாது செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும். உம்மையன்றி வேறு கதியில்லை. உமக்கு நமஸ்காரம். அடியேனுக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டு மென்று பிரார்த்திக்க; அது கேட்ட அம்மையார் கிருபைகூர்ந்து, இலக்குமியே! பூமியில் காளாகருவன மென்று ஓர் க்ஷேத்திர மிருக்கின்றது. அதில் பரமேசுவரன் அபராத சகேச ரென்ற திருநாமம் புனைந்து க்ஷமாவதி தேவியோடும் பிரகாசிக்கின் ருர். நீ அங்கே போய் அபராத சகேசரையும் க்ஷமாவதி தேவியை யும் பத்தியோடு அவ்வக்காலங்களிற் பூசிக்கக் கடவாய். நாம் உனக் குச் சாபங்கொடுத்துச் சிவபூசை செய்யும்படி ஆஞ்ஞாபித்தது உல கோப காரமாகுமென்று அசரீரியாற் கூறினுர்.

பின்னெருகாலத்தில் தேவர்கள்பொருட்டு மன்மதன் பரமேசுவர னைச் சத்துருவாக நினைத்துச்சென்று அவருடைய நெற்றிக்கண்ணுற் சாம்பரானுன். அப்பொழுது இலக்குமி விஷ்ணு இருவர்களும் புத்திர சோகத்தினுல் துக்கமடைந்து, காளாகரு வனத்துக்குச்சென்று அருந் தவம் புரிந்து, அபராத சகேசுவரரையும் க்ஷமாவதி தேவியையும் அன்போடு பூசிக்க; அபராத சகேசுவரர் அவ்விருவரையும் நோக்கி, "உங்கள் புத்திரனை உமாதேவியானவள் அற்பாயுளுடையவனுகச்

சபித்தபடியால் அவ்வாறே அவன் சரீரமில்லாம லிருக்குக. நீங்கள் அது குறித்து நம்மைப்பூசித்தமையால் அவன் தீர்க்காயுளுடையவனு குக. அவன் மனைவியாகிய இரதிக்குமாத்திரம் அவனுருத் தெரியக் கடவது என்று அநுக்கிரகஞ் செய்து லிங்கத்துண் மறைந்தருளினர்.

பதுமாபராத சகனச் சருக்கம் - முற்றிற்று.

# நிருத்த தரிசனச் சருக்கம்.



முனிவர்களே! பரமேசுவரன் சகல பாவங்களையும் நீக்குகின்ற திரியங் நடனம், ஊர்த்துவ நடனம், ஏகபாத நடன முதலிய முப்பத் திரண்டு நடனங்களைப் பதஞ்சலி முனிவர் பொருட்டுச் செய்த சரித் திரத்தைச் சொல்லுகின்றோம்;—விராண்மூல புரமென்னும் அந்தர் நர்த்தன புரத்தில் சுத்தசாட்குண்ணிய பரிபூரணரான பரமேசுவரன் தினந்தோறும் பிரதோஷ காலத்தில் ஆசீந தாண்டவஞ் செய்தருளு கின்றார். அதனால் உலகம் தொழிற்படுகின்றது. மேன்மையாயும் சர்வாநந்தகரமாயும் பரிசுத்த ஞானத்தைக் கொடுப்பதாயும் நிருமல மாயும் உள்ள அவ்வாசீன தாண்டவஞ் செய்தருளுகின்ற பரமேசு வரனைப் பிரமன் விஷ்ணு இருவரும் தினந்தோறும் வந்து தரிசித்து வாத்திய கைங்கரியஞ் செய்து செல்வது வழக்கம்.

ஒருநாள் விஷ்ணுமூர்த்தி பிரதோஷ சமயத்தில் நடன தரிசனஞ் செய்யப் புறப்படுவதைத் தெரிந்த ஆதிசேஷன் அவரது வாகனமாகிய கருடனை நோக்கி, நமது தலைவராகிய விஷ்ணுமூர்த்தி நித்தியமும் சாயங்காலத்தில் எங்கே செல்கின்றாரென்று கேட்க, கருடன், "விராண்மூல புரத்தில் பரமேசுவரன் செய்தருளுகின்ற ஆசீந தாண் டவ தரிசனத்தின்பொருட்டுச் செல்கின்றார்" என்று கூற; அது கேட்ட ஆதிசேஷன் அந்தத் தாண்டவ தரிசனத்தில் மிக விருப்ப முற்று, கருடனை நோக்கி, "நீர் நித்தியமும் விஷ்ணுமூர்த்தியோடு சென்று தாண்டவ தரிசனஞ் செய்கின்றீர். என்னை ஒரு நாளாவது அழைத்துச் சென்று தரிசனஞ் செய்விக்கவேண்டும். அதில் மிகுந்த விருப்பமுடையேன்" என்று சொல்ல; அதுகேட்ட கருடன் முன்

னுள்ள பகையினால் தன் சபத்தினி மாதாவின் குமாரனாகிய ஆதிசேடனை உபாயத்தாற் கொல்ல நினைத்து அப்படியே ,செய்கிறேன் என்றான்.

பின் ஒருநாள் கருடன் விஷ்ணுவைச் சுமந்து விராண்மூல புரத்திற் கொண்டுபோய்விட்டு வேகமாய்த் திரும்பி வந்து, பாதிவழிக்குமேல் நடன தரிசனத்தின்பொருட்டு அதிகவேகமாய் வருகிற ஆதிசேஷனைக் கண்டு, இவ்வளவு மெல்லச் சென்றால் தரிசனங் கிடைக்காது. என் மூக்கினால் உம்மைக் கவ்வி அரைக்ஷணத்தில் அங்குக் கொண்டுபோய் விடுகிறேனென்று சொல்லிக் கவ்விப் போம்பொழுது, கோபங்கொண்டு இருபுறமும் வாள்போன்ற மூக்கினால் வெட்ட; அதனைப் பொறுக்க முடியாமல் பயந்து ஆதிசேஷன் சிவபெருமானைத் தியானித்து, அவரது திருவருளால் விராண்மூல புரத்திலுள்ள கலாதீர்த்தத்தில் சத்துருபீதி நிவாரண கட்டத்தில் அர்க்கியங் கொடுத்துக் கொண்டிருக்கிற ஒரு முனிவருடைய அஞ்சலியஸ்தத்தில் விழுந்தான். உடனே முனிவர் தமது அஞ்சலியஸ்தத்திலிருக்கும் தீர்த்தத்தை ஆதிசேடனோடு வீச, ஆதிசேடன் இருடிரூபமடைந்தான். அஞ்சலியிலிருந்து விழுந்தமையின் அம்முனிவர்க்குப் பதஞ்சலியென்று பெயருண்டாயிற்று. அப்பதஞ்சலி முனிவர் ஆலயத்துட் சென்று நடன சபையை யடைந்து, பத்தர்களின் உபத்திரவத்தை நீக்கி யருளும் சாட்குண்ணிய பரிபூரண தயாநிதியாகிய தியாகராஜப் பெருமானைத் தரிசித்து மகிழ்ந்துநிற்க, அப்பெருமானும் நித்தியமும் நடனஞ் செய்கிற கால அளவைக் காட்டிலும் அரை முகூர்த்த காலம்அதிகமாக நடனஞ் செய்ய, அவர் பத்தியுடன் சேவித்தார். விஷ்ணுமூர்த்தி நடனதாமதத்தை நோக்கிச் சங்கையுற்று வாத்திய கைங்கரியஞ்செய்துகொண்டு நிற்க, அதை யுணர்ந்த பரமேசுவரன் விஷ்ணுவை நோக்கி, விஷ்ணுவே! எல்லா ஆன்மாக்களையுங் காத்தற்பொருட்டே நமது ஆசீந தாண்டவ முதலிய அநேக தாண்டவங்கள் உண்டாயின. அவ்வளவு தாண்டவங்களையும் உலகிற்கு வெளிப்படுத்துதற்பொருட்டே உனது சயனமாகிய ஆதிசேஷன் இருடிவடிவங்கொண்டு பதஞ்சலி யென்னும் பெயருடன் இங்கு வந்திருக்கின்றான். இவனுக்கு அநுக்கிரகத்தின் பொருட்டே இன்று நடனம் தாமதித்தது. இவன் ஓர் அமிசத்தினால் தனது உண்மைவடிவுடன் உனக்குப் படுக்கையாக இருப்பதன்றி, மற்றோர் அமிசத்தினால் இவ்விருடி வடிவத்துடன் இங்கு இருக்கக் கடவன் என்று அசரீரியாற் கூறியருளினர். அதுகேட்ட பிரமன் விட்டுணு இருவரும்

ஈசுவர கருணை ஆதிசேடனுக்குக் கிடைத்தமை நோக்கி மனமகிழ்ந்து விடைபெற்றுச் சென்றார்கள்.

அன்றுமுதல் பதஞ்சலி முனிவர் தினந்தோறும் பிரதோஷ காலத்தில் பேரன்புடன் அஜபாநடன சேவை செய்துகொண்டு வருபவர் ஒருநாள் இத்தாண்டவம் ஒன்றோ பலவோ வெனச் சந்தேகித்து, எப்படி உலகம் பலவிதமாயிருக்கின்றதோ அப்படியே தாண்டவமும் பலவிதமாகவே இருக்கவேண்டும் என்று நிச்சயித்து, எல்லா நடனங்களையும் தரிசிக்கவேண்டுமென்று எனக்கு விருப்பம் எழுவதை மூலகாரணராகிய தியாகராஜப் பெருமானிடத்தில் எவ்வாறு விண்ணப்பஞ் செய்வது என்று ஆலோசித்துக் கொண்டிருக்க, அப்பெருமான் அவருடைய கருத்தைத் திருவுளங்கொண்டு அவரை நோக்கி, அன்பனே ! காமேசுவரி காமேசுவரர்களின் ஐக்கியத்திற்கே நடனமென்று பெயர். அது ஒவ்வொரு ஆதாரத்திலும் வேறுபட்டுப் பலவாம். அந்நடனங்களுள் முப்பத்திரண்டு சிறந்தன. அந்தக் கமல முதலாகிய முப்பத்திரண்டு நடனங்களையும் உனக்கு நாம் காளாகரு வனத்தில் நன்று காண்பிக்கின்றோம். இவ்விராண்மூல புரத்திலுள்ள வன்மீக குகையில் மகத்துக்கு மகத்தாயும் தேவர்களுக்கு உரியதாயும் யோகிகளால் தரிசிக்கத் தகுந்ததாயும் அசபா நடனமென்று பெயருடையதாயும் விளங்கும் ஆசீந நடனத்தை உனக்கு நாம் காண்பித்தோம். உன் விருப்பம் நிறைவேறுதற் பொருட்டுக் காளாகரு வனத்துக்குச் செல்லுக. நம்மிடத்து மிகுந்த அன்புள்ள வியாக்கிரபாத முனிவன் உலக நன்மையின் பொருட்டு உனக்குச் சிநேகனாகக் கடவன். நீங்களிருவரும் அவ்வனத்திற் சென்று நமது நடன வகைகளைத் தரிசித்து ஆன்மாக்களெல்லாம் உய்யுநிமித்தம் அவைகளை உலகத்திற் பிரசித்தஞ் செய்யக் கடவீர்கள் என்று அசரீரியாற் கூறியருளினார்.

அது கேட்ட முனிவரிருவரும் "இந்த மூலாதார க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் தியாகராஜப் பெருமான் செய்தருளுகின்ற ஆசீந நடன சேவையை விட்டு வேறோரிடத்துக்கு எவ்வாறு செல்வது" என்று நினைக்கும் பொழுது, சிவபெருமான், "அன்பர்களே ! நமக்கு இந்தத் தலத்தில் நடைபெறும் பங்குனி யுற்சவத்தையும் நவராத்திரி யுற்சவத்தையும் தரிசித்தவர்களுக்கு நித்தியமும் என்னைத் தரிசித்த பலன் உண்டாகக் கடவது. நமது உற்சவம் ஆன்மாக்களின் பரிபாலன காரணமாகும். நமது அநுக்கிரக காலமே உற்சவமென்று கொண்டாடப் படுகிறது. உங்களுடைய அன்பின் மேலீட்டால்

உங்களுக்கு ஓர் வரங் கொடுக்கின்றோம். அஃதாவது எப்பொழுது நமக்கு உற்சவம் நடந்தாலும் அப்பொழுது நம்மைத் தரிசனஞ் செய்ய வருபவர்கள் முதலில் உங்களைத் தரிசித்துக்கொண்டு பின்பு நம்மைத் தரிசிக்கக் கடவர்கள். எவர்கள் உங்களிடத்து அன்பில்லாமல் நம்மைத் தரிசிக்கின்றார்களோ அவர்களுடைய தரிசனபலன் உங்களைச் சாரக்கடவது. இது நிச்சயம். உங்கள் முகமாகவே நமக்கு நைமித்திகங்கள் நடக்கக்கடவன. நீங்களிருவரும் காளாகரு வனம் போய் அங்கே கமல நடனமுதலிய அநேக நடனங்களைத் தரிசித்துக்கொண்டு சிலகாலம் இருக்கக் கடவீர்கள்" என் றருளிச் செய்தார்.

அதுகேட்ட பதஞ்சலி முனிவர் தமது நண்பராகிய வியாக்கிர பாத முனிவருடன் காளாகரு வனம் போய்த் தேவர்களால் வணங் கப்படும் ஆலயத்தை யடைந்து, அச்சமும் அன்பும் பொருந்தி, கைலாச நாயிகா நாதராயும் தயாநிதியாயும் உள்ள சிவபெருமானைத் தரிசித்துச், சகசிராக்ஷ பரமேசுவரரே! நாங்கள் மூலாதார க்ஷேத் திரத்திலுள்ள சோமாஸ்காந்த மூர்த்தியின் ஆஞ்ஞைப்படி இங்கு வந்தோம். எங்களுக்கு நடனவகைகளை யெல்லாம் காட்டியருள வேண்டும் என்று பிரார்த்திக்கச், சிவபெருமான் அதனைக் கேட் டருளி அவர்கள் பிரார்த்தனைக் கிரங்கி அவ்வாறே செய்வோமென்று அநுக்கிரகித்து, வைசாகோற்சவ மத்தியில் மிகுந்த ஆச்சரியத்தை விளைவிப்பனவாயும் உலகங்களை யெல்லாம் காத்தருளுவன வாயும் உள்ள கமல நடனம், ஏகபாத நடனம், துவிபாத நடனம், ஊர்த் துவபாத நடனம், உத்தான நடனம், குக்குட நடனம், முதலிய முப் பத்திரண்டு நடனங்களையும் காட்டி யருளினர். பதஞ்சலி முனிவர் முதலிய முனிபுங்கவர்கள் அஞ்ஞானத்தை நீக்கி விஞ்ஞானத்தைக் கொடுப்பதாயும் மனோபீஷ்டத்தை தருவதாயும் உள்ள அந்த நட னங்களைத் தரிசித்து அதிசயமும் மகிழ்வும் அடைந்து வேதங்களால் தோத்திரஞ் செய்து கிருதார்த்தரானார்கள். இந்தச் சரித்திரத்தைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் நடன தரிசன பலனை யடைவார் கள்.

## நிருத்த தரிசனச் சருக்கம் - முற்றிற்று.



# காளாகருவன நாமகதனச் சருக்கம்.

முனிவர்களே! எல்லாப் பாவங்களையும் நீக்கத்தக்க காளாகருவன நாமகதன சரித்திரத்தைச் சொல்லுகின்றோம் கேளுங்கள்;— முன்னொரு காலத்திலே பிரமன் முதலிய தேவர்கள் மிகத் தருக்குற்றுப், பரமேசுவரன் கன்மபலத்தைக் கொடுப்பவர் என்பதை மறந்து, கன்மமே இஷ்டசித்தியைக் கொடுப்பதெனக் கருதி, யாவரும் ஒருங்குகூடி, தங்கள் இஷ்டசித்தியின் பொருட்டு ஒரு யாகஞ் செய்தார்கள். அப்பொழுது அவர்களின் அகங்காரத்தை யடக்குதற் பொருட்டு ஈசுவரானுக்கிரகத்தினலே அந்த யாகத்திலிருந்து ஓர் வில்லுத் தோன்றிற்று. அதற்கு உருத்திரதனுசு என்று பெயர். அது பெரிதாயும் கோடி சூரியப் பிரகாசமாயும் இருந்தது. அதை விஷ்ணுமூர்த்தி தமது கரத்தா லெடுத்துத் தோளில்வைத்தார். அது உருத்திர மூர்த்தியின் வில்லாகையால் அவர் காத்தற்றொழிலுடையவரா யிருந்தும் காலாக்கினி ருத்திரரைப்போலச் சர்வசங்கார கிருத்திய முடையவரானர். அவருக்குக் கோபம் அதிகரித்தது. கண்கள் சிவந்தன. பற்களை நறநறவென்று கடித்தார். அது கண்ட தேவர்கள், முன் மிகுந்த கெர்வமுள்ளவர்களா யிருந்தும் அது நீங்கிச் சோக முடையவர்களாய் மிகப் பயந்து, விஷ்ணுவின் கோபத்தை நீக்க முடியாதவர்களாய் என் செய்வோ மென்று துக்கித்துத், தங்கள் குருவாகிய வியாழ பகவானை யடைந்து, பகவானே! எல்லாத் தருமங்களையும் அறிந்த ஆசாரியரே! பிரபுவே! தயை செய்து எங்களைக் காத்தருள வேண்டும். காத்தற் றொழிற்கு இறைவராகிய விட்டுணுமூர்த்தி யாகாக்கினியி லெழுந்த வில்லைத் தரித்துக் காலாக்கினி ருத்திரரைப் போலச் சருவ சங்காரஞ் செய்பவரானர். நாங்கள் என் செய்வோம். எங்குச் செல்வோம். எங்களுக்கு இவ்வாபத்து எவ்வாறு நீங்கும். எந்தக் கருமபரிபாகத்தினல் இஃது உண்டாயிற்றென வினவிப் பிரார்த்தித்தார்கள். அது கேட்ட வியாழ பகவான் தேவர்களுக்கு நேர்ந்த ஆபத்தின் காரணத்தை ஞான நோக்கால் அறிந்து, தேவர்களே! நீங்கள் சிவபெருமானை மறந்து கன்மமே பலனைக் கொடுப்பதென்று நிச்சயித்து யாகஞ் செய்தீர்கள். உங்களுக்கு ஞானம் உண்டாதற்காகவே அந்தவில் உண்டாயிற்று. அது உருத்திரமூர்த்தியின் வில்லாகையால் அதை விஷ்ணு தரித்தவளவில் அவர் காத்தற் றொழிலுடையவரா யிருந்தும் காலாக்கினி

ருத்திரர்போலக் கோப மடைந்து சருவசங்காரஞ் செய்பவராய் விட்டார். ஆயினும் நீங்கள் பயப்படவேண்டாம். அதற்கு ஓர் உபாயஞ் சொல்கின்றோம். பூமியில் விராண் மூல புரமென்று ஒரு க்ஷேத்திர மிருக்கிறது. அதிற் சம்புவாகிய வன்மீக நாதரும் பராபரையாகிய உமாதேவியாரும் நித்திய சாந்நித்தியஞ் செய்கிறார்கள். அங்கே போய் மிகுந்த அன்போடு வன்மீக நாதரைப் பூசியுங்கள். அவருடைய கிருபையால் உங்களுக்கு இவ்வாபத்து நீங்கும் என்றார்.

அது கேட்ட இந்திரன் முதலாகிய தேவர்கள் வியாழபகவானை நமஸ்கரித்து அஞ்சலியஸ்தர்களாய் விடை பெற்றுக்கொண்டு, சிரத்தையுடன் விராண்மூல புரத்தை யடைந்து, அங்குள்ள சகசிரதள பதுமினி யென்னுங் கமலாலயத்தில் விதிப்படி ஸ்நானஞ் செய்து, வன்மீக நாதரையும் உமாதேவியாரையும் பூசிக்க; உமாதேவியார் தேவர்களே நீங்கள் கபாலவனத்தை யடைந்து விருக்ஷரூபமாய் நின்று சிரத்தையுடன் தவஞ் செய்யுங்கள். உங்களுக்கு இஷ்ட சித்தியுண்டாகு மென்று அசரீரியாற் கூறியருளினார். அதுகேட்ட தேவர்கள் கபாலவனத்தை யடைந்து சகசிராக்ஷமகேசுவரருக்கு நாற்புறத்திலும் காளாகரு விருக்ஷரூபமாயும் தேவதாரு விருக்ஷரூபமாயும் நின்று அச்சிவலிங்கப் பெருமானையும் க்ஷமாவதி தேவியாரையும் தியானம் பண்ணிக்கொண்டு மானசிகமாய்ப் பூசித்தார்கள். அப்பொழுது சர்வலோகங்களையுங் காத்தருளுகின்ற சகசிராக்ஷப் பெருமான் விருக்ஷரூபமா யிருக்கும் தேவர்கள்பாற் கிருபைகூர்ந்து, தேவர்களே! நீங்கள் இங்கு நின்றும் பயமில்லாமல் விராண்மூல புரத்திற்கு விரைந்து சென்று அங்குள்ள வன்மீக குகையில் கறையான் வடிவங்கொண்டிருங்கள். உங்களைத்தேடி விஷ்ணு அவ்விடத்திற்கு வந்து நீங்க ளிருக்குமிடந் தெரியாமல் அங்குச் சிரமமேலீட்டால் வில்லின் நுனியை வன்மீக குகையிலூன்றி மற்றோர் நுனியைத் தனதுமோவாயில் வைத்து நாற்புறத்திலும் பார்த்துக்கொண்டு நிற்பான். அப்பொழுது நீங்கள் அவ்வில்லின் நாணியைக் கறையான் வடிவத்தால் அரித்து விடுங்கள். அதனால் விஷ்ணுவின் தலை அறுபட்டு விழுந்துவிடும். உடனே நீங்கள் அவ்வில்லை யெடுத்துக் கொண்டு விரைவாய் இங்கு வந்து நமது லிங்கத்தினடியில் ஸ்தாபியுங்களென்று ஆஞ்ஞாபித்தருளினார். அதுகேட்ட தேவர்களெல்லாம் சிவபெருமானுடைய ஆஞ்ஞையின்படி விராண்மூல புரத்திற்குச் சென்று பயமின்றிக் கறையான் வடிவங்கொண்டு வன்மீக குகையில் மறைந்து விஷ்ணுவை எதிர்பார்த்திருக்க; அவரும் மிக்க

கோபங்கொண்டு மூவுலகத்திலும் தேவர்களைத் தேடிக் காணுமல் அதிக சிரமத்துடன் விராண்மூல புரத்திற்கு வந்து வன்மீககுகையில் வில்லின் ஓர் நுனியை வைத்து மற்ருேர் நுனியைத் தமது மோவாயில் வைத்து நாற்புறத்திலும் பார்த்துகொண்டு நிற்க; அப்பொழுது கறையான் வடிவாங்கிய தேவர்கள் லளிதாபரமேசுவரியின் கிருபையால் அவ்வில்லின் நாணியைக் கண்டிக்க; அவ்வில்லு நிமிர்ந்து விஷ்ணுவின் தலையை யறுத்துக் குருக்ஷேத்திரத்தில் விழுத்திற்று. அப்பொழுது வன்மீகநாதர் தேவர்களே! நீங்கள் இந்த வில்லையெடுத்துக்கொண்டு சீக்கிரமாகக் காளாகரு வனத்துக்குப் போய்ச் சகசிராக்ஷ மகேசுவரரைப் பிரார்த்தித்து அவரநுக்கிரகத்திஞல் அச்சிவலிங்கப்பெருமானடியில் இதனை ஸ்தாபியுங்கள். இனி நீங்கள் அஞ்சற்க. இவ்வில்லின் அமிசமே ஆகாயத்தில் விளங்குக என்று அசரீரியாற் கூறியருளிஞர்.

அதுகேட்ட தேவர்கள் அவ்வில்லை யெடுத்துக்கொண்டு தேவதாரு வனத்தை யடைந்து அபராத சமேசரைப் பூசித்துப் பலவகைப் புஷ்பங்களால் அருச்சித்து அவ்விலிங்கத்தினடியில் வில்லை ஸ்தாபித்து க்ஷமாவதி தேவியாரையும் விதிப்படி பூசித்தார்கள். அப்பொழுது க்ஷமாவதி தேவியார் தேவர்களே! உங்களுக்கு அபராத சமேசருடைய வழிபாட்டால் அபீஷ்ட சித்திகள் உண்டாகக்கடவன என்று அநுக்கிரகஞ் செய்ய, தேவர்கள் அவ்வரத்தைப் பெற்று மகிழ்ந்து விடைபெற்றுக் கொண்டு தங்கள் உலகம் போய்ச் சேர்ந்தார்கள். தேவர்கள் காளாகரு விருக்ஷ ரூபமாய்த் தவஞ்செய்தமையால் இத்தலத்திற்குக் காளாகரு வனமென்று பெயருண்டாயிற்று. அவர்கள் தேவதாரு விருக்ஷ ரூபமாய்த் தவஞ்செய்தமையால் தேவதாரு வனமென்றும் வில்லைத் தாபித்துப் பூசித்தமையாற் கார்முக புரமென்றும் சொல்லப்படும்.

**காளாகருவன நாமகதனச் சருக்கம் - முற்றிற்று.**



# இலக்குமி தவம்புரி சருக்கம்.



இவ்வாறு கூறிய சூதமுனிவரை நோக்கிச் செளனகர் முதலிய முனிவர்கள், புராணார்த்தங்களை யறிந்த சூதமுனிவரே! சிவதனுசினால் விஷ்ணுவின் தலை அற்று விழுந்தபின் நடந்த விருத்தாந்தங்களெல்லாவற்றையும் எங்களுக்குக் கூறவேண்டு மென்று பிரார்த்திக்கச் சூதமுனிவர் சொல்லுகின்றார்;—

முனிவர்களே! அமைவுடன் கேளுங்கள். விஷ்ணுவின் தலை அற்று விழுந்தவுடனே இலக்குமி தேவியானவள் பெருந் துன்பமடைந்து சிவாபராதத்தினால் நமக்கு இந்த வைதவ்வியம் வந்தது. "நாம் என்ன செய்வோம். நமக்கு ஈசுவரனைத் தவிர வேறு கதி ஏது" என்று எண்ணி முகத்தினின்றும் கண்ணீர் வழிய விராண்மூல புரத்துக்கு வந்து, ஸ்ரீ வன்மீக நாதரை மூன்று முறை பிரதக்ஷிணஞ் செய்து அடிக்கடி நமஸ்கரித்துத், தனக்கு நாயகன் கிடைக்க வேண்டு மென்று கருதித் தோத்திரஞ் செய்தாள். அப்பொழுது வன்மீக நாதர் அவளுடைய அன்புக்கு மகிழ்ந்து, இலக்குமியே! சிவாபராதத்தினால் உனக்கு இவ்வைதவ்வியம் வந்தது. அது நீங்குதற் பொருட்டு இந்தத் தலத்துக்கு ஆக்கினேய திக்கில் விளங்குகிற காளாகரு வனத்துக்குப் போய், அங்கே உருக்கி ஓடவிட்ட தங்கம் போற் பிரகாசமுள்ள லிங்கத் திருமேனி கொண்டு வீற்றிருப்பவராயும், யாவராலும் வந்திக்கப் பட்டவராயும் உள்ள அபராத சகேசுவரரையும் கைலாச நாயகி யெனப்படும் க்ஷமாவதி தேவியையும் விதிப்படி அன்போடு பூசைசெய்யின், அவள் உனது அபராதத்தைப் பொறுத்து உனக்கு அநுக்கிரகஞ் செய்வாள். சீக்கிரம் கபாலவனம் போகக் கடவாய் என்று ஆஞ்ஞாபித்தார்.

அது கேட்ட இலக்குமி தேவி வன்மீகநாதரை நமஸ்கரித்துக் கொண்டு கபாலவனம்போய், வாழைப்பழம் பலாப்பழம் தேன் நெய் பால் பலவகைப் பழ ரசங்கள் முதலிய அபிஷேகத் திரவியங்களால் அபராத சகேசருக்கு அதிருத்திர மகாருத்திர சதருத்திரீய விதிப்படி அபிஷேகஞ் செய்து, வெண்பட்டினாலும் பலவகை ஆபரணங்களாலும் அலங்கரித்துக் கஸ்தூரியுங் குங்குமப்பூவுங்கலந்த சந்தனஞ் சாத்தி அபராத சகங்களாயுள்ள நானாவித ஸ்தோத்திரங்களாலும் வேதபாத ஸ்தோத்திரங்களாலும் விருப்புடன் துதித்து, க்ஷமாவதி நாதரே! அபராத சகேசுவரரே! எனது குற்றங்களைப் பொறுத்

தருளி எனக்கு நாயகனைத் தந்தருள வேண்டும். தேவரீர்க்கு நமஸ் காரஞ் செய்கிறேன் என்று சிரத்தையோடு பிரார்த்தித்தாள். இவ் வாறு பிரார்த்தித்த இலக்குமியை நோக்கி அபராத சகேசர் கிருபை கூர்ந்து, இலக்குமியே! எந்த விடத்து எந்தப் பொருள் இழக்கப் பட்டதோ அந்த விடத்தில் அந்தப் பொருள் தேடப்படுமாதலால் யாகத்தி லுண்டான வில்லால் எந்தத் தலத்தில் உன்னுடைய நாய கன் தலை யறுபட்டதோ அந்தத் தலத்திற்குச் சென்று வன்மீகநாத ரைப் பிரார்த்தித்தால் உனக்கு அவர் அனுக்கிரகஞ் செய்வா ரென்று அசரீரியாற் கூறியருளினர்.

அதுகேட்ட இலக்குமியானவள் திருவாரூரை யடைந்து வன் மீக நாதரை நமஸ்கரித்து வேதசார நாமங்களால் வில்வபத்திரங் கொண்டு அருச்சித்துப் பலவகையாற் றுதித்து, சருவ லோகேசுவர னே! சருவ மங்கள காரணனுயுள்ள பகவானே! அடியேன் அறியா மையாற் செய்த அபராதங்களைப் பொறுத்தருள வேண்டும். தேவ ரீருடைய பாதார விந்தங்களைத் தவிர வேறு கதியில்லை. உம்மையே சரணமடைந்தேன். பிரபுவே! நாயகனை யிழந்திருக்கின்ற எனக்கு என்னுடைய நாயகனைக் கொடுத்து அநுக்கிரகஞ் செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தாள். அதுகேட்டருளிய வன்மீக நாதர் கிருபை கூர்ந்து, இலக்குமியே! இதற்கு மேற்றிசையில் கிருஷ்ணமங்கள மென்று ஒரு புண்ணிய க்ஷேத்திர மிருக்கிறது. அங்குள்ள சார புஷ்பகரணி யென்னுந் தீர்த்தக் கரையிலிருந்து தவஞ் செய்வாயாகில் அதற்கு மகிழ்ச்சியுறும் நமது அநுக்கிரகத்தினல் உன்னுடைய நாய கன் சித்திரை மாதத்தில கருடவாகனத்தில் ஏறிக்கொண்டு உன்னைப் பாணிக்கிரகணஞ் செய்து கொள்ளுதற்கு ஆசையுடன் வருவன். நீ உன் நாயகனை யடையக் கடவா யென்று அசரீரியாற் கூறியருளினர்.

அது கேட்ட இலக்குமி யானவள் அன்போடு சிவபெருமானை நமஸ்கரித்துக் கொண்டு கிருஷ்ண மங்கள க்ஷேத்திரத்தை யடைந்து வசந்தருதுவில் தனது நாயகன் வரவைக் குறித்துச் சிவபெருமானை நோக்கிச் சாரபுஷ்கரணிக் கரையில் தவஞ்செய்தாள். சிவபெரு மான் அவளுடைய தவத்திற்கு மகிழ்ந்து விஷ்ணுவை உயிர்பெற் றெழும்படி செய்தார். விஷ்ணுவானவர் உயிர் பெற்றுத் தமது நாய கியைப் பார்ப்பதற்கு, விரும்பிச் சித்திரை மாசத்தில் சாரபுஷ்கரணிக் கரைக்குவர, அவரைப் பார்த்து இலக்குமி யானவள் மகிழ்ச்சியுற்று ஆலிங்கனஞ் செய்து கொண்டு ஆனந்தக் கடலில் அமிழ்ந்தினள்.

முனிவர்களே! அந்த க்ஷேத்திரத்திலே சாரபுஷ்கரணி யென்னுந் தடாகக்கரையிலே இலக்குமிதேவியும் விஷ்ணுமூர்த்தியும் தம்மை வழிபடும் அன்பர்களுக்கு அநுக்கிரகஞ் செய்து கொண்டு இப்பொழுதும் விளங்குகிறார்கள். இவ்வாறு க்ஷமாவதி தேவியார் இலக்குமியின் அபராதங்களைப் பொறுத்தருளி அவளுக்குத் தனது நாயகனை யடையும்படி அநுக்கிரகம் புரிந்தார். இக் கதையைப் படித்தவர்களும் கேட்டவர்களும் இவ்வுலகத்திலே எல்லா வின்பங்களையும் அநுபவித்துத் தேகாந்தத்திலே சிவசாயுச்சியம் பெறுவார்கள்.

இலக்குமி தவம்புரி சருக்கம் - முற்றிற்று.



# புண்டரீக வனச் சருக்கம்.



முனிவர்களே! அந்த க்ஷேத்திரத்திற்குப் புண்டரீகவனமென்று பெயர்வந்த காரணத்தைச் சொல்லுகிறோம்;—முற்காலத்திலே புண்டரீகரென்று ஒரு முனிவர் இருந்தார். அவர் விஷ்ணுபத்தி யுள்ளவர். தவமாகிய ஒழுக்கத்திலும் வேதமுதலிய கல்வியிலும் அறிவிலும் சிறந்தவர். உத்தம ஞானத்தாற் பாவமற்றவர். தாய் தகப்பன் ஆசாரியர் முதலிய பெரியோர்களை எப்பொழுதும் அன்புடன் வழிபடுகின்றவர். இந்நியமமுள்ள அந்த முனிவர் சுசீலையென்னுந் தமது பத்தினியோடு வெகுகாலம் சற்கருமங்களெல்லாவற்றையும் அநுட்டித்துவரும்பொழுது, கருமத்தினால் முத்தி கிடைக்குமா? ஞானத்தினால் முத்தி கிடைக்குமா? என்று அவருக்கு ஒரு சந்தேகம் நிகழ, அவர் முனிபுங்கவர்களை யடைந்து பத்தி சிரத்தையுடன் நமஸ்கரித்துத் தமது சந்தேகத்தைத் தெரிவிக்க, அவர்கள் யாவரும் அதுகேட்டு ஆலோசித்து, முனிவரே! கருமம் ஞானத்துக்குச் சாதனம். கருமத்தினாலேயே யோகிகள் ஞானத்தை யடைந்திருக்கிறார்கள். எவ்வாறெனின் கருமத்தினாற் பரிசுத்த மனசைப்பெற்று எங்கும் சமபுத்தியுள்ளவர்களாய் ஆன்மஞானம் அடைந்திருக்கிறார்களாதலின் உலகத்திலே ஆன்மாக்களுக்குக் கருமமே ஞானசாதனமென்னும் துணிவுற்று எப்பொழுதும் கருமத்தையே செய்யும் என்று சொல்ல அதுகேட்டு மகிழ்ச்சி யுற்றுச், சந்திரபாகையென்னும் நதிக்கரையிலுள்ள பண்டரிபுரத்தில் விஷ்ணுபத்தியோடு நிஷ்காமமாகச் சற்கருமங்களைச் செய்து வந்தார்.

அப்பொழுது விஷ்ணுமூர்த்தியானவர் நீருண்ட மேகம்போற் பிரகாசிக்கின்ற விடலரூபத்துடன் அப்புண்டரீக முனிவரது பத்தியை வெளிப்படுத்துதற்பொருட்டு அவர் தமது தாய்க்குப் பூசை புரியுஞ் சமயத்தில் வந்தார். அவரது வரவையறிந்த முனிவர் அவரை ஒரு கல்லின்மேல் இருக்கும்படி சொல்லி விஷ்ணுபத்தியோடு தாயைப் பூசித்துக்கொண்டிருந்தார். விடலரூபங்கொண்டு வந்தருளிய விஷ்ணுமூர்த்தியும் தமது இரண்டு பாதங்களையுங் கல்லின்மேற் சமமாக வைத்துச் சித்திரம்போல் அசைவற்றுநின்று அவரது உத்தம பத்தியையும் கருமசிரத்தையையும் நோக்கி மகிழ்ந்து, முனியே! உன்னுடைய பத்தி விசேடத்தால் நாம் இவ்வுருவத்துடன் இங்கிருந்து யாவருக்கும் அநுக்கிரகஞ் செய்கின்றோம். நீ நிஷ்காமமாகச் சற்கருமங்களைச் செய்வதால் உனக்கு மோக்ஷத்துக்கு ஏதுவான பரிசுத்தஞான முண்டாகக் கடவது. அன்றியும் ஞானசாதனமாயுள்ள மற்றொரு விஷயமுஞ் சொல்கின்றோம். விராண்மூலபுரத்துக்கு ஆக்கினேயதிக்கில் காளாகரு வனமென்று ஒரு புராதன க்ஷேத்திர மிருக்கிறது. அது புருஷார்த்தம் நான்கையும் கொடுக்கும். அந்தத் தலத்திற்குப் போய், ஆனந்தமூர்த்தியும் தாண்டவேசுரரும் பராபரரும் ஆகிய அபராதசகேசுவரரை வழிபட்டு எப்பொழுதும் ஆனந்தமுடையவனாகக் கடவாய். அப்பொழுது பதஞ்சலி யென்னும் முனிபுங்கவரோடு சிநேகம்பெறக் கடவாய். அங்கே வியாக்கிரபாதரென்னும் பெயருடன் ஞானசித்தியைப் பெறுவாய் என்று அநுக்கிரகஞ்செய்ய, அதுகேட்டுப் புண்டரீகமுனிவர் அவரது திருவடிகளைத் தியானித்துக்கொண்டு காளாகருவனத்தை யடைதற்பொருட்டு விராண்மூலபுரத்துக்கு வந்து சகசிரதள பதுமினியில் விதிப்படி ஸ்நானஞ்செய்து ஹம்ஸமந்திர சொரூபியாயுள்ள தியாகராஜப் பெருமானைத் தமது மனைவியோடு தரிசனம்பண்ணி அங்கிருந்து தவஞ்செய்ய, அப்பெருமான் கிருபைகூர்ந்து, புண்டரீக முனியே! நீ தவத்தினால் எல்லாப்பாவங்களும் நீங்கப்பெற்றாய். விராட்புருடனுடைய உச்சுவாச நிசுவாச நடையே தாண்டவமென்று சொல்லப்படும். இத்தாண்டவ தரிசனம் ஆன்மாக்களைச் சமுசார சாகரத்தினின்று கரையேற்றும். தாண்டவமூர்த்தியாயுள்ள நமது தரிசனம் பெற்றவர்கள் சருவசித்தியையு மடைவார்கள். முப்பத்திரண்டுவகைத் தாண்டவங்களையும் எவன் சிரத்தையுடன் தரிசிக்கின்றானோ அவன் அநேக சித்திகளையும் பெற்றுச் சிவசாயுச்சியத்தை அடைவான். முப்பத்திரண்டு தாண்டவங்களைச் செய்கிற மூர்த்தியின் தரிசனம் மனோநிச்சயத்தைக் கொடுக்குமாதலால்

லின் அஃது உண்டாதற்பொருட்டு இதற்கு ஆக்கினேய திக்கிலுள்ள காளாகருவனத்துக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் க்ஷமாவதிமனோகரரான அபராத சகேசுவரரைப் பூசித்து அவரநுக்கிரகத்தால் காமிய பல விருப்பம் நீங்கிச் சித்தசுத்திபெறக் கடவாய். மேலும் அவரநுக்கிரகத்தாலும் தாண்டவ சேவையாலும் உச்சுவாச நிசுவாச மார்க்கம் உன் மனத்திற் புலப்படும். அவ்வப்பியாசத்தினால் ஆன்மானந்த சொரூபம் பிரகாசிக்குமென் றருளிச்செய்தார்.

அதுகேட்ட புண்டரீகமுனிவர் பரமானந்தத்தில் அமிழ்ந்திச் சிவபெருமானை அஞ்சலிகூப்பி வணங்கிக்கொண்டு தம் பத்தினியுடனும் அங்கிருந்து சபத்தினிகர்களாய்த் தம்மோடுவந்த முனிவர்களுடனும் காளாகருவனம் போய்ச் சேர்ந்தார். யாவரும் தத்தம் மனைவிமாரோடு க்ஷமாவதி மனோகரராகிய சகசிராக்ஷ மகேசுவரரை நமஸ்கரித்து அஞ்சலி செய்துகொண்டு சந்நிதானத்தில் நின்று, கைலாச நாயகிக்கு நாதரே! சகசிராக்ஷ மகேசுவரரே! அபராத சகேசுவரரே! பிரபுவே! பார்வதிதேவியாரை இடப்பாகத்திலுடையவரே! அர்த்த சந்திரனைச் சிரசிற்றரித்தவரே! இடபாரூடராயுள்ள பூதநாதரே! வணங்குகின்ற எங்களைக் காத்தருளவேண்டுமென்று தங்கள் அபராதநிவிர்த்தியின் பொருட்டு வேதசாரமாயுள்ள தோத்திரஞ் செய்தார்கள். சிவபெருமான் அதுகேட்டுத் திருவுள மகிழ்ந்து அம்முனிவர்களுக்குமுன்னே இடப்பாகத்திற் பார்வதிதேவியாரோடு இடபாரூடராய், நந்தி முதலிய கணங்கள் சூழ்ந்து சேவிக்க, மந்தகாசத்துடன் சந்திரசேகர மூர்த்தியாய்த் தோன்றிப், புண்டரீகமுனிவரை நோக்கி, முனியே! உனது பூசை தோத்திரங்களால் மகிழ்ச்சியுற்றோம். உனக்கு நன்மை யுண்டாகக்கடவது. நீ விரும்பிய வரத்தைக் கேள். நாம் தருகின்றோம் என்றருளிச் செய்தார். அதுகேட்ட புண்டரீகமுனிவர் மனமகிழ்ந்து அன்போடு நமஸ்கரித்து, "பிரபுவே! சமுசாரசாகரத்தில் அமிழ்ந்திச் சிற்றறிவுடையவர்களாகிய மனிதர்களுக்கு எதை உணர்ந்தாற் சாயுச்சியங் கிடைக்கும்? இவ்வுலகமெல்லாம் தேவரீர்க்கு வடிவமென்பது வேதாந்த சாஸ்திரத்தின் நிச்சயமா யிருக்கவும் சீவர்கள் அஞ்ஞானத்தால் ஏன் மோகத்தை யடைகிறார்கள்? எவ்வாறு ஞானத்தையடைவார்கள்? இச் சந்தேகங்களை நீக்கியருள வேண்டுமென்று பிரார்த்திக்க; சிவபெருமான் முனியே! எதை யுணர்ந்த மாத்திரத்தில் சமுசார நிவிர்த்தியுண்டாகுமோ அத்தன்மையுடையதாயும் இரகசியமாயும் புராதனமாயும் உள்ள அதைச் சொல்லுகின்றோம்.

இருவகைப் பிரபஞ்சத்தையும் ஒடுக்கின சத்தியோடு கூடியாத ஹற் சத்தெனப்படும் சிவம் ஒன்றே ஆதியிலுள்ளது * சத்தியோடு கூடிய சிவம் என்பதே சத்து என்பதற்குப் பொருளாகும். சத்துச் சித்து ரூபமான பரமான்மாவி னிடத்தில் ஒடுங்கி நிற்கின்ற இருவகைப் பிரபஞ்சமும் அவித்தை காரணமாகத் தோன்றுகின்றன. எல்லா உலகமும் நம்மிடத்திலேயே தோன்றி நின்று அழிகின்றன வியாபக நயம்பற்றி அவை நம்முடைய ரூபமாகும். நாமே எங்கும் வியாபியாயும் அதனால் எல்லாப் பொருளுமாயும் இருப்போம். கடவுள் அநேக மென்பது இல்லை. நித்தியமாயுள்ள நம்மைச் சற்குருவின் உபதேசத்தால் அறிபவனே மலநீக்க முடையவன். விராட் டுருவமாயுள்ள நமக்கு உலகமெல்லாம் வடிவம். அவ் வடிவத்துள் சனன தாரகமாகிய திருவாரூர் மூலாதார ஸ்தானமாகும். அவ்விடத்தில் நாம் ஆச்சரியகரமான அசபா நடனஞ் செய்து வருகின்றோம். அவ்வாறே ஒவ்வொரு ஆதாரங்களிலும் தாண்டவபேதம் விளங்குகின்றது. அத்தாண்டவ தரிசனத்தால் யோகமும் ஞானமும் சித்திக்கும். அவர்களுக்கே ஆன்மானந்தமாகிய ஒளி பிரகாசிக்கும். நம்மிடத் தன்பில்லாதவர்கள் மாயையினால் மோக மடைகின்றார்கள். நாம் காரணேசர் முதலிய தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் அவரவருடைய அன்புக்குத் தக்கபடி அநுக்கிரகஞ் செய்கின்றோம். சிவாபராதமே பிறவிக்குக் காரணம். சிவாபராதம் இல்லாதவர்களே மல மற்றவர்கள். மற்றொரு இரகசியத்தை உனக்கு நாம் உபதேசிக்கின்றோம். அமைவுடன் கேட்பாயாக. எவ்வளவு சிவாபராதங்களும் இந்தத் தலத்தில் வந்து நம்மைத் தரிசனஞ் செய்த மாத்திரத்தில் நீங்கி விடுகின்றன. நீ நம்மை இங்கு ஆயிரம் வெண்டாமரைப் புஷ்பங்களால் பூசித்தபடியால் உனக்குச் சிவாபராதங்கள் நீங்கி விட்டன. நமக்கு அபராத சகேசனென்னும் பெயர் உலகப் பிரசித்தம். ஆன்மானந்தத்தைக் கொடுக்கின்ற அநேக நடனங்களை உனக்கு வைகாசிமாசத்திற் காண்பிக்கின்றோம். இன்று முதல் இவ்வனம் உன் பெயரால் புண்டரீக வனமென்று விளங்குக. உனககு நாமே ஞானோபதேசஞ் செய்து தீக்ஷை பண்ணிவைத்தோ மாகையால் வியாக்கிரபாதன் என்று உனக்குத் தீக்ஷாநாமங் கொடுத்திருக்கின்றோம். அவ்வாறே நின்பெயர் விளங்குக என்றருளிச் செய்து அந்தர்த்தானமானார்.

---

* சத்து - என்பதற்கு இவ்வாறு பொருள் கோடல் சிவாகம ஸ்ரீகண்ட பாஷியங்களின் துணிவாகும்.

முனிவர்களெல்லாம் ஈசுவரன் அருளிச் செய்தமை கேட்டுப் பரமானந்த மடைந்து வைகாசி மாதம் பரணி நக்ஷத்திரத்தில் நடைபெற்ற அபிஷேக ஆராதனைகளைக் கண்டு களிகூர்ந்து அங்கு நிகழ்ந்த முப்பத்திரண்டு தாண்டவங்களையும் சிரத்தையுடன் சேவித்து எப்பொழுதும் சிவபெருமானைத் தியானஞ் செய்து கொண்டிருந்து சீவன் முத்தராயினர். பரமசிவன் வரங்கொடுத்த காலமுதல் இந்த க்ஷேத்திரம் புண்டரீகவனமென்று மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றது. அவ்வுற்சவ தரிசனஞ் செய்கின்றவர்களுக்குச் சிவாபராதங்களெல்லாம் நீங்கி விடுகின்றன. இப்புண்டரீக வன வைபவம் புத்திர பௌத்திர தன தானியாதி சகல சம்பத்துக்களையுந் தருவதுடன் சித்த சுத்தியையும் ஈசுவரகுணங்களையும் கொடுக்கும். மேலும் அவரவர் விருப்பத்துக் கேற்பச் சுவர்க்க மோக்ஷங்களையுங் கொடுக்கும்.

**புண்டரீகவனச் சருக்கம் - முற்றிற்று.**



# கருடனுக்குப்
# பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்த சருக்கம்.

முனிவர்களே! சகஸ்ராக்ஷ பரமேசுவரன் கருடனுக்கு ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரோபதேசஞ்செய்து அவனுடைய சிவாபராதங்களைப் பொறுத்தருளிய கதையை உங்களுக்குச் சொல்லுகின்றோம்;— மந்திரம் என்பதற்கு நினைப்பவனைக் காப்பது என்பது பொருள். அம்மந்திரம் க்ஷரமென்னும் அழிவின்மையால் அக்ஷரமென்னும் பெயருள்ள எழுத்துருவமா யிருக்கின்றது. அவற்றுள் பஞ்சாக்ஷரமென்னு மகாமந்திரம் பாவமென்னும் காட்டுக்கு அக்கினியாகும். அது தன்னைச் செபிக்கின்றவர்களுக்கு இஷ்ட பூர்த்தியைக் கொடுப்பதில் காமதேனுவை யொக்கும். பிரமன் முதலிய தேவர்களுள் சிவபெருமான் உயர்ந்தவராதல்போல மந்திரங்களுள் பஞ்சாக்ஷரமே உயர்ந்தது. சப்தகோடி மகாமந்திரங்களுள் உயர்ந்ததும், தன்னைச் செபித்தவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதுமாயுள்ள பஞ்சாக்ஷர மகாமந்திரத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். மனம் அமைந்து கேளுங்கள்.

காசிப முனிவருடைய புத்திரனுகிய கருடன் தனது சபத்தினி மாதாவினுல் தன் தாய்க்குத் துக்கம் நேர்ந்ததையும், தமையனுக்குக் கால் இல்லாமையையும், தான் தாயின் பொருட்டுச் சபத்தினி மாதாவின் புத்திரர்களைச் சுமந்து வருகின்ற சிரமத்தையும் நினைந்து வருத்தமுற்றுத் தன் பிதாவை யடைந்து அவரையும் அவருடன் இருக்கின்ற முனிவர்களையும் நமஸ்கரித்து அஞ்சலி செய்து நின்று, பெரியோர்களே! யாது காரணத்தால் என தாய் துக்கமுறவும், தமையன் காலில்லாமலிருக்கவும் நான் சபத்தினி மாதாவின் புத்திரர்களைச் சுமக்கவும் நேர்ந்தது. அதனை அடியேனிடத்துத் தயைகூர்ந்து கூறியருளவேண்டு மென்று அச்சத்தோடும் அன்போடும் நின்று பிரார்த்தித்தான்.

அதுகேட்ட முனிவர்கள் ஆலோசித்து ஞான நோக்காற் றெரிந்து, கருடனே! உன் தாய்க்குச் சிவாபராதத்தினுலேயே சபத்தினி நிமித்தமான துக்கமுண்டாயிற்று உனக்கும் முற்பிறவியின் சிவாபராதத்தினுல் சபத்தினிமாதாவின் புத்திரர்களைச் சுமக்கும்படி நேர்ந்தது. உன் பிதாவின் சிவாபராதத்தால் அவருக்குக் காலில்லாத புத்திரன் பிறந்தான். இவ்வளவு சிவாபராதங்களும் நீங்கும் பொருட்டுச் சிவப்பிரீதிகரமாயும் சிரேட்டமாயும் சிவாபராதத்தை நீக்குவதாயும் உள்ள ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஸ்ரீபுரத்துக்கு விரைந்து போய்ச் செபிக்கக் கடவாய் என்று ஆஞ்ஞாபிக்க; அதுகேட்ட கருடன் உடனே ஸ்ரீபுரத்துக்குப்போய் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தைச் செபித்துக்கொண்டு தவஞ்செய்தான். அவனுடைய தவத்திற் கிரங்கிச் சிவபெருமான் எழுந்தருளிவந்து, கருடனே! இதற்கு ஆக்கினேயதிக்கில் காளாகருவனமென்று ஒரு புராதன க்ஷேத்திர மிருக்கிறது. அங்கு நாம் எம்மை வழிபடுகின்றவர்களுக்கு எல்லா அபராதங்களையும் பொறுத்தருளுவதால் அபராத சகேசரென்னும் பெயருடன் விளங்குகின்றோம். அங்கு உன்னுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கின்றோம். விரைந்து வருக என்று கூறியருளினுர்.

கருடன் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு மகிழ்ந்து அஞ்சலிசெய்து காளாகருவனத்துக்குப் போய் அபராதசகேசுவரரை அன்போடு வழிபட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷர செபஞ் செய்துகொண்டிருக்கும் பொழுது அவனுக்கு முன்னே சிவபெருமான் தோன்றியருளி, கருடனே! உன் தவத்திற்கு மகிழ்ந்தோம். நீ விரும்பிய வரங்களைக் கொடுக்கின்றோம். பஞ்ச மகாபாதகங்களை நீக்குவதாயும் பஞ்சேந்திரிய விகாரங்களைத் தொலைப்பதாயும் நம்முடைய ஐந்து முகங்களி

னின்றும் தோன்றியதாயும் உள்ள ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தின் பிரயோக பேதங்களை உபதேசிக்கின்றோம். அது சமம் விஷமம் என இருவகைப்படும். நம்முடைய சத்தியோஜாதம், வாமதேவம், அகோரம், தற்புருஷம், ஈசானமென்னும் ஐந்து முகங்களினின்று தோன்றிய அம்மந்திரம் தொண்ணூற்றொன்பது பேதமுள்ளதென்றும் சிவாபராதத்தைப் போக்குவது என்றும் இரகசியத்துள் இரகசியமென்றும் மந்திரார்ணவ கிரந்தத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. அது பிரணவத்தோடு சேர்ந்து சுத்தபஞ்சாக்ஷரமென்றும் சத்திபீஜத்துடன் கூடிச் சத்திபஞ்சாக்ஷர மென்றும் பெயர்பெறுவதுமன்றி ஸ்ரீபீஜம் வாக்பீஜம் ஹ்ரம் என்னும் பீஜம் ஹ்ளம் என்னும் பீஜம் ஆகிய இவைகள் சேர்ந்து பலதிறப்பட்டுப் பல பெயர்களையடைகின்றது. அம்மந்திரத்தின் அக்ஷரலக்ஷ செபத்தினால் மோக்ஷம் சித்திக்கும். அம்மந்திரத்துள் இருப்பது சோதிரூபம். அதனுள் இருப்பது சதாசிவம். ஆதலாற் சதாசிவரூபமாகிய அம்மந்திரம் சருவசித்தியையுங் கொடுக்கும். "நமசிவாய" என்னும் அவ்வைந்தெழுத்துக்கள் சிவசொரூபம். [அவற்றுள் நகாரம் - பிரமபீஜம் மகாரம் - விஷ்ணுபீஜம். சிகாரம் - உருத்திரபீஜம் வகாரம் - ஈசுவர சொரூபம். யகாரம் - சதாசிவ சொரூபம்.] ஆகையால் அம்மந்திரம் பஞ்சப்பிர்ம சொரூபமாகும் என்று ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையும் அதன் பிரயோக விதியையும் உபதேசித்தருளினர். கருடன் அவ்வுபதேசம் பெற்று ஆனந்தத்தில் அமிழ்ந்திக்கிடக்க, சிவபெருமான் அவனுக்குச் சாக்ஷுஷதீக்ஷை செய்தருள; அக்கருடனும் மிகுந்த காந்தியுடன் பிரகாசித்தான். உடனே சிவபெருமான் மறைந்தருளினர்.

முனிவர்களே! கருடன் சிவபெருமானால் உபதேசிக்கப்பட்ட ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை அன்புமிகுந்து சிவத்தியானம் பண்ணிக்கொண்டு செபித்து ஓமம் தருப்பணம் ஆகிய இவற்றை விதிப்படி செய்து அம் மந்திர மகிமையாலும் ஈசுவர கிருபையாலும் சிவாபராதம் நீங்கி மிகுந்த பலம்பெற்று, உலகங்களையெல்லாம் தன் வயிற்றில் அடக்

---

[ ] இவ்வடையாளமிட்ட பஞ்சாக்ஷர சொரூப நிர்ணயம் சடாதார யோக நிலையி லுள்ளது.

கிய விஷ்ணுவைச் சுமக்குந் தன்மையை அடைந்தான். அதனால் அவனுக்குச் சபத்தினி மாதாவின் புத்திரர்களால் உண்டான பயம் நீங்கிற்று. அதுமுதல் கருடன் காளாகரு வனத்தில் இருந்து கொண்டு தினந்தோறும் அபராதசகேசுவரரைப் பூசித்து வந்தான். இக்கதையைப் படிப்பவர்களுக்கு ஈசுவரகிருபையால் சருவசித்திக ளும் உண்டாகும் சத்தியம். சத்தியம்.

கருடனுக்குப்

பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்த சருக்கம் - முற்றிற்று.

# சோழராஜனுக்கு அநுக்கிரகஞ்செய்த சருக்கம்.

முனிவர்களே! சகசிராக்ஷசிவ பெருமான் சோழராஜனுக்கு அநுக்கிரகஞ் செய்ததாயும், பாவவிமோசன காரணமாயும் உள்ள சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்;—காஞ்சீ புரத்திலே சிவபக்த சிகாமணியாய் வீரேந்திர சோழனென்று ஒரு அரசன் இருந்தான். அவன் சிவதீக்ஷை பெற்றுச் சிவத்தியானம் பண்ணிக்கொண்டு சைவாசாரியர்களிடம் சிவாகம நூல்களைப் பயின்று சிவபூஜைசெய்து வருநாளில் ஒரு சமயம் சிவஸ்தல யாத்திரை செய்ய விரும்பிப் பிர யாணித்துத் திருவாரூருக்கு வந்து சேர்ந்தான். அப்பொழுது அவன் அங்கு அநேக முனிவர்களோடு வந்த அக்கினி வேசியர் என் னும் முனிவரைப் பூருவ புண்ணியத்தால் தரிசித்து நமஸ்கரித்து, முனிவர் பெருமானே! சீவர்களுக்குத் தோஷங்கள் பலவற்றுள் ளும் காமமே பெரிதாகச் சொல்லப்படுகின்றது. அக்காமத்தினா லேயே எல்லாரும் சிவபெருமானைமறந்து சிவாபராதிகளாய் நரகத்தில் விழுகின்றார்கள். அக்காமமாகிய தோஷம் எவ்வாறு நீங்கும்? அஃது உயர்ந்த முனிவர்களையும் தன்வசப்படுத்தி நிற்கும். அதனை வைராக் கியத்தினாலே ஒழிக்கவேண்டு மென்பது சாஸ்திரவிற்பன்னர்களின் கருத்து. அவ்வைராக்கியமும் யாவருக்கும் எளிமையில் வாராமை யின் அக்காமத்தைச் சுலபமாய்க் கடக்கத்தக்க வழியைக் கூறியருள வேண்டுமென்று பிரார்த்தித்தான்.

அதுகேட்ட முனிவர் அன்புகூர்ந்து ஞானநோக்கால் தலங்களுள் உயர்ந்த தலம் எதுவென்று ஆராய்ந்து, அரசனே! இந்தத் தலத்திற்கு ஆக்கினேய திக்கில் சீவர்களின் சுகத்துக்கு ஆதாரமாயும் எல்லாக் குற்றங்களையும் நீக்குவதாயும் ஆன்மாக்களுக்கு மலபந்தத்தை நீக்குவதாயும் போக மோக்ஷத்தைக் கொடுப்பதாயும் காரணேசர் முதலிய தேவர்களுக்கு அபீஷ்டத்தை அளிப்பதாயும் காளாகருவனமென்று ஒரு புராதன தலம் இருக்கின்றது. அது வெள்ளாற்றங்கரையில் உள்ளது. அத்தலத்தில் அபராதசகேசுவர சிவலிங்கப் பெருமானும் உமாதேவியாரும் நித்திய சாந்நித்தியஞ் செய்கின்றார்கள். அங்கே சிவபெருமான் அந்தர் நிருத்த முதலிய அநேக நடனங்களைச் செய்தருளுகின்றனர். முன்னொரு காலத்தில் பாண்டுவின் புத்திரனாகிய அருச்சுனன் பாசுபதாஸ்திரம் பெறுதற் பொருட்டு மிகத் தவஞ்செய்துங் கிடைக்காமல் வருத்தமுற்றுச் சிவாபராதத்தினாலேயே நமக்கு ஈசுவரா நுக்கிரகங் கிடைக்கவில்லை யென்று துணிந்து இத்தலத்தை யடைந்து அபராதசகேசுவரரைப் பூசித்துச் சிவாபராதம் நீங்கிப் பாசுபதாஸ்திரம் பெற்றுக்கொண்டான். அருச்சுனன் பூசித்தமையால் இதற்கு அருச்சுனபுரமென்று பெயருண்டாயிற்று. அரசனே! சீவர்களுக்குச் சிவாபராதத்தினாலேயே காம முதலிய தோஷங்கள் உண்டாகின்றனவாதலின் அவற்றை நீக்குதற் பொருட்டுக் காளாகருவனத்துக்குப் போய் அபராதசகேசுவரரை ஆயிரம் அலரிப் புஷ்பங்களாற் பூசித்துத் தோத்திரஞ் செய்தால் அவர் அநுக்கிரகஞ் செய்வாரென்று கூறினார்.

அதுகேட்ட சோழமகாராஜன் அம்முனிவரை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு காளாகருவனத்துக்கு வந்து அங்குள்ள முனிவர்கள் கூறிய விதிப்படி தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து சிவாபராத நிவிர்த்தியின் பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை அக்ஷர சகஸிரம் செபித்துப் புரச்சரணம் என்னும் ஓமம் செபம் தருப்பண முதலியவற்றைச் செய்து சிவபெருமானை அன்போடு பூசித்துச், சகஸிராக்ஷ மகேசுவரனே! எனக்குக் காம முதலியவற்றா லுண்டாகிய தோஷங்களை நீக்கி மோக்ஷத்திற்கு உபாயத்தை அருளிச்செய்ய வேண்டும். எனக்குத் தேவரீரே கதி என்று பிரார்த்திக்க; அடியார்க்கு அருள்பவராகிய சிவபெருமான் கிருபைகூர்ந்து, வீரேந்திர சோழராஜனே! உன்னுடைய பூஜை செப முதலியவற்றிற்கு மகிழ்ந்தோம். உனக்கு நன்மைக ளுண்டாகக் கடவன. இதற்கு வாயுதிக்கில் மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றதாயும் எல்லாப் பாவங்களை

யும் நீக்குவதாயும் உத்தமமாயும் ஸ்ரீபுரமென்று ஒரு தலம் இருக்கின்றது. அந்தத் தலத்தில் பசு (ஆன்மா) க்களின் பாசத்தை நீக்குவதால் பாசஹந்திரியென்னும் பெயருடன் ஸ்ரீ சக்கரராஜன் என்னும் யந்திரத்தில் இருக்கும் சோடசாக்ஷரி யென்னும் பராசத்தி அன்பர்களுக்கு அநுக்கிரகஞ் செய்தற்பொருட்டு நித்தியசாந்நித்தியஞ் செய்கின்றாள். அவளே இந்தத் தலத்தில் கைலாசநாயகியென்னும் பெயருடன் வீற்றிருக்கின்றாள். இங்குள்ள இவளே சீவர்களின் காமமுதலிய ஆறுபகைகளேயும் நீக்குபவளாதலின் இவளேயே சரணமடைவாயென் றருளிச்செய்த அசரீரி வார்த்தையைக் கேட்டு அரசன் மீட்டும் நமஸ்கரித்துத் துதித்து, அஞ்சலியுடன் ஸ்ரீகைலாச நாயகியைத் துதித்துச் சகசிரநாமங்களால் அருச்சனை செய்து, ஸ்ரீ நகர நாயகியாய் விளங்கும் அம்மையே! காம முதலிய தோஷங்களேயுடைய எனக்கு அவற்றை நீக்கி அநுக்கிரகஞ் செய்யவேண்டு மென்று பிரார்த்திக்க; அம்மையார் கிருபைகூர்ந்து, சோழராஜனே! அபீஷ்டங்களெல்லாவற்றையுந் தரத்தக்க ஓர் இரகசியத்தைச் சொல்லுகின்றோம். உத்தமோத்தமராயும், பராசத்தியைத் தன்வசத்திற் கொண்டவராயும் இருபத்தைந்து மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவராயும் அசபாமந்திரசாரமாயும் ஹம்ஸமந்திர சம்புடித ஸ்ரீ சோடசாக்ஷர மந்திரரூபமாயும் விளங்குகின்றவர் தியாகராஜ மூர்த்தியேயாவர். அவரைச் சாயங்கலத்தில் தரிசனஞ் செய்பவர்கள் மோக்ஷமடைவார்கள். அவரே இங்கு ஆதிவிடங்கரென்னும் பெயருடன் விளங்குகின்றார். அவரை அலரிப் புஷ்பங்களாலும் சண்பக புஷ்பங்களாலும் பூசித்து அப்பெருமானுக்கு இரதோற்சவமும் நடத்துவாயானால் உனக்குக் காமதோஷம் நீங்குமென்று கூறிய அசரீரி வார்த்தையைக் கேட்டு, அரசன் மனமகிழ்ந்து, ஆதிவிடங்கத் தியாகராஜ மூர்த்திக்கு இரதோற்சவஞ் செய்வித்துக் காம முதலிய தோஷங்கள் நீங்கி உண்மைஞான மடைந்து காஞ்சீபுரத்துக்குப் போய் இடையுறாத சிவத்தியான முடையவனாய் அரசாண்டிருந்து தேகாந்தத்திலே சிவசாயுச்சியம் பெற்றான். இதைக் கேட்டவர்களும் படித்தவர்களும் இம்மை மறுமைப் பயனை யடைவார்கள்.

சோழராஜனுக்கு

அநுக்கிரகஞ் செய்த சருக்கம் - முற்றிற்று.



# பிரமபுர நாமகதனச் சருக்கம்.

முனிவர்களே ! சமற்கார புரமென்னுந் திருவாரூருக்கு ஆக்கி னேய திக்கில் வெள்ளாற்றங்கரையில் விளங்குவதாயும் மூவுலகத்தி லும் பிரசித்திபெற்றதாயும் அதிபரி சுத்தமாயும் உள்ள இந்தத்தலத் திற்கு முன்கற்பத்தில் கபித்தவனமென்றும் இப்பொழுது காளாகரு வன மென்றும் பெயர். அன்றியும் பிரமபுரமென்றும் ஒரு பெய ருண்டு. அவ் வரலாற்றைச் சொல்லுகின்றோம்.

முன்னொரு காலத்திலே திருக்கைலாச மலையில் ஸ்ரீ கண்டபர மேசுவரனை வணங்குதற் பொருட்டு வந்த பிரமன் இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் ஒருங்குகூடி ஒருவரோடொருவர் அநுவாதமாகப் பேசிக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது பிரமதேவர் தம்மை ஈசு வரனாக நினைத்துக்கொண்டு, காரணேசுவரர்களுள் சிருட்டியென்னு முதற்றொழில் நம்மாலேயே செய்யப்படுகின்றது. நமக்கு ஒப்பான வரும் நம்மின் மேலானவரும், ஒருவரு மிலரென்று கூறினர். சிவ பெருமான் அவரை நோக்கி, "நீ இவ்வாறு கருவமடைந்தமையால் உனக்குச் சத்தியலோகாதிபத்தியம் இல்லாமற் போகக் கடவ தென்று சபிக்க; உடனே பிரமதேவர் பயந்து மிகத் துன்பமுற்றுத் திருப்பாற் கடலை யடைந்து விஷ்ணுமூர்த்தியைப் பலமுறை துதித்து அடிக்கடி நமஸ்கரித்துப், "பிரபுவே ! என் கருவத்தால் உனக்குச் சத்தியலோகாதிபத்தியம் இல்லாமற் போகக் கடவதென்று பரமேசு வரன் சபித்தருளினர். நான் என் செய்வேன்" என்று வருந்திப் பிரார்த்திக்க; அதுகேட்ட விஷ்ணுமூர்த்தியானவர் புன்னகை செய்து பிரமதேவரை நோக்கி, மகனே ! அஞ்சற்க. அந்தச் சாப நிவாரணத்திற்காக ஒ ருபாயஞ் சொல்லுகின்றோம். பூமியிலே சமற் கார புரமென்னுந் திருவாரூருக்குத் தென்கிழக்கில் காளாகருவன மென்று ஒரு தலம் உண்டு. அங்கே கைலாச நாயகி சமேதராய்ச் சக சிராக்ஷ பரமேசுவரன் அனவரத சாந்நித்தியஞ் செய்து, சீவர்களின் அபராதங்களெல்லாம் பொறுத்தருளுவதால் அபராத சகேசரென் னும் பெயர் கொண் டெழுந்தருளி யிருக்கின்றார். நீ அங்குச் சென்று அன்புடன் அவரைத் தியானித்துத் தவஞ்செய்து கொண்டி ருந்தால் அப்பெருமான் உன் தவத்திற்கு மகிழ்ந்து நீ விரும்பியதைத் தந்தருளுவார், உனக்குச் சத்தியலோகாதி பத்தியங் கிடைக்கும். விசேடசுகத்தையும் பெறுவாய். நானும் முன்னொரு சமயத்தில்

சிவாபராத தோஷத்தால் வருத்த முற்று அங்குச் சென்று தவஞ் செய்து சுகம்பெற்றேன். நீயும் விரைந்து திருவாரூருக்குப் போய் ஸ்ரீ மூல சோம மகேசுவரரைத் தரிசித்து அவரநுக்கிரகம் பெற்றுக் கொண்டு காளாகருவனஞ் செல்லக் கடவாய்" என்று கூறினர்.

பிரமதேவர் உடனே மனமகிழ்ந்து விஷ்ணுவை வணங்கி விடை பெற்றுக்கொண்டு திருவாரூருக்கு வந்து அங்குள்ள கலாதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸ்ரீ மூல சோம மகேசுவரரைப் பூசித்து அருந் தவஞ் செய்து கொண்டிருக்கச், சிவபெருமான் அதற்கு மகிழ்ந்து, பிரமனே! இதற்கு ஆக்கினேயதிக்கில் காளாகருவன மென்று ஒரு தபோவனம் விளங்குகிறது. அங்கேபோய்த் தவஞ்செய்யக் கடவாய் என்று அருளிச் செய்ய; உடனே பிரமதேவர் சிவபெருமானை வணங் கிக்கொண்டு காளாகரு வனத்தை யடைந்து, மல்லிகை குருக்கத்தி தாழை முதலிய புஷ்பங்களால் வாசனையுள்ளதாய், மந்தாரம் பாரிஜா தம் சண்பகம் புன்னை பாதிரி தேவதாரு வாழை தென்னை முதலிய விருக்ஷங்கள் நிறைந்து, பலவகைப் புஷ்பங்களின் மதுவைப் பானஞ் செய்கின்ற வண்டுகளின் இசையாலும் குயில் கிளி அன்ன முதலிய பறவைகளி னொலியாலும் மனோகரமாயுள்ள அவ் வனத்தைப் பார்த்து வியப்புற்று அங்கு ஆயிரம் வருடந் தவஞ் செய்துகொண் டிருந்தார்.

சிவபெருமான் அவர் தவத்திற் கிரங்கி இடபாரூடராய்த் தோன் றியருள உடனே பிரமதேவர் சிவபெருமானை வணங்கி நின்று, பார் வதி நாயகரே! உமக்கு நமஸ்காரம். குக்குட நர்த்தனஞ் செய்யும் பிரபுவே! உமக்கு நமஸ்காரம். சிவந்த சடாமுடியுடையவரே! உமக்கு நமஸ்காரம். நீல்கண்டரே! உமக்கு நமஸ்காரம். உலகநாதரே! உமக்கு நமஸ்காரம். சமஸ்த சீவர்களுக்கும் நாதரே! உமக்கு நமஸ் காரம். சர்வரே! பீமரே! கணேசரே! உமக்கு நமஸ்காரம். அநாதி யான ஞான சொரூபியே! சச்சிதானந்த சொரூபியே! கால ரூபியே! விபுவே! கால காலரே! உமகரு நமஸ்காரம். வேதங்களின் தத்து வார்த்த ரூபியே! தத்துவ ஞானப் பிரதரே! கங்கையைச் சிரசிற் றரித்தவரே! நித்தியரே! முக்கண்ணரே! உமக்கு நமஸ்காரம். பிரமத கணநாதரே! மகாகாளரே! தக்ஷயாக நாசகரே! ஆத்மாந்தர் யாமியே! உமக்கு நமஸ்காரம். மிருத்தியுவை வென்றவரே! யா னைத் தோலைப் போர்த்தவரே! சகசிராக்ஷரே! அர்த்த சந்திரனைத் தரித்தவரே! உமக்கு நமஸ்காரம். உருத்திரரே! சம்புவே! உமக்கு

நமஸ்காரம். திக்குகட்குப் பதியாயுள்ளவரே! சுவர்ண கரங்களை யுடையவரே! அன்னங்கட்குப் பதியாயுள்ளவரே! வாளையுடைய வரே! உமக்கு நமஸ்காரம். குப்த சோரர்களுக்குப் பதியே! கிரீசரே! க்ஷேத்திரங்களெல்லா வற்றிற்கும் நாதரே! உமக்கு நமஸ்காரம் என்று பலவாறு துதிக்க; அவரை நோக்கிக் கருணைக்கடலாகிய பரமசிவன் மேக முழக்கம்போற் கம்பீரமான திருவாக்கினால் பிரமனே! உனது தவத்திற்கும் துதிக்கும் மிக மகிழ்ந்தோம் வேண்டிய வரங்களைக் கேளென்று ஆஞ்ஞாபிக்கப், பிரமதேவர் மகிழ்ந்து சிவபெருமானைப் பன்முறை நமஸ்கரித்துக், கருணைக் கடலே! வியாபகரே! எளியேன் சொல்லிய அகங்கார வார்த்தைகளைப் பொறுத்தருளல் வேண்டும். நான் இழந்த சத்திய லோகாதி பத்தியத்தை எனக்குத் தந்தருளல் வேண்டும். நான் இங்கு ஆயிரம் வருடந் தவஞ்செய்தலை நோக்கித் தேவரீர் ஆயிரங்கண்களுடன் என்முன்பு எழுந்தருளினமையால் இன்று முதல் தேவரீர்க்குச் சகசிராக்ஷரென்னும் பெயர் உலகப் பிரசித்த மாதல் வேண்டும். அன்றியும் இந்தத் தலத்தில் யாகஞ்செய்தற் பொருட்டு நான் நிருமித்த யாக குண்டம் என் பெயரால் பிரம குண்டமென்று விளங்கவேண்டும். இங்குத் தேவரீருடைய அநுக்கிரகத்தால் அடியேன் சத்தியலோகாதிபத்தியம் பெறுகின்றேனாதலின் இத்தலம் என்பெயரால் பிரமபுரமென்று வழங்கப்பெற வேண்டுமென்று பிரார்த்திக்கச்; சிவபெருமான் பிரமனே! நீ பிரார்த்தித்த வரங்களை யெல்லாந் தந்தருளினோம். இன்று முதல் சகசிராக்ஷரென்னும் பெயருடன் விளங்குகின்றோம். நீ சத்திய லோகாதி பத்தியத்தை யடைவாய். உன்னாலியற்றப்பட்டுப் பிரமகுண்ட மென்னும் பெயர் பெற்ற தீர்த்தத்தில் எல்லாத் தேவர்களும் எப்பொழுதும் நம்முடைய ஆஞ்ஞையால் சாந்நித்தியஞ் செய்வார்கள். அதில் வைகாசி மாதத்தில் சூரியோதய காலத்தில் ஸ்நானஞ்செய்தவன் தன்னுடைய கோடி குலத்தார்களை உத்தாரணஞ் செய்து கொண்டு உன்னுடைய லோகத்தையடைவான் மகாவியாதியாளனும் அதில் அன்போடு ஸ்நானஞ் செய்தால் நம்முடைய ஆஞ்ஞையால் எல்லாவியாதிகளும் நீங்கப்பெறுவான். என்று வரங்கொடுத்து அந்தர்த்தானமானார். பிரமதேவர் சகசிராக்ஷமகேசுவரரைப் பன்முறை நமஸ்கரித்து மகிழ்ச்சியுடன் சத்தியலோகம்போய்ச் சேர்ந்தார்.

முனிவர்களே! இந்த உத்தம க்ஷேத்திரத்தில் ஒரு பிராமணனைப் பூசித்தவன் கோடி பிராமணர்களைப் பூசித்த பலனை யடைவான்

சிவபெருமானுக்கு வடபக்கத்தில் விளங்கும் நிருமலமான பிரமகுண்டமானது சமுசாரமென்னும் வியாதியை யடைந்தவர்களுக்கு ஸ்நான மாத்திரத்திலேயே உயர்ந்த மருந்தாய் அதனை நீக்கும். இச்சரித்திரம் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் எல்லாப் பாவங்களையும் நீக்கிப் போக மோக்ஷங்களைக் கொடுக்கும்.

பிரமபுர நாமகதனச் சருக்கம் - முற்றிற்று.



# பிரம தீர்த்த மகிமைச் சருக்கம்.

முனிவர்களே! எல்லா வியாதிகளையும் நீக்கத்தக்க பிரம தீர்த்த மகிமையைச் சொல்லுகின்றோம்;—முன்னொரு காலத்தில் துங்கபத்திரை நதிக்கரையில் தேவசருமன் என்று ஒரு பிராமணனிருந்தான். அவன் தேவலர் என்னும் குருவின்பால் வேத சாஸ்திராப்பியாசஞ் செய்தவன். அவன் தன் குருவின் அநுமதிபெற்றுப் பைங்கனென்னும் பிராமணனுடைய புத்திரியாகிய அவயவ இலக்கணம்வாய்ந்த கலாவதி யென்பவளை விவாகஞ் செய்துகொண்டு குருவின் ஆச்ச்ரமத்துக்குச் சமீபத்தில் தனக்கொரு ஆச்சிரமம் அமைத்துத் தன் மனைவியோடு இன்புற்றிருந்தான். இருக்குநாளிலே, தேவசருமன் தனக்குக் குருவாயும் தபோதனராயும் உள்ள தேவலரை வஞ்சித்து அவருடைய திரவியத்தைச் சோரஞ்செய்து அது கொண்டு புசிக்க; அப்பாவத்தால் அவனுக்கு வயிற்றுவலி யுண்டாக, அதனால் நித்திய கருமங்களைச் செய்தற்கும் இயலாதவனானான். அப்பொழுது அவனுடைய மனைவியாகிய கலாவதியானவள் எல்லாரும் இருக்குஞ் சமயத்தில் தன்னுடைய நாயகனை நோக்கி, "நீர் குருத்திரவியாபகாரஞ் செய்து புசித்தமையால் உமக்கு வயிற்றுவலி வந்திருக்கின்றது. அப்பாவச் செயலை ஏன் செய்தீர்" என நிந்தித்தமையால் உடனே அவளுடைய சரீரத்தில் வெண்குட்டம் உண்டாக; இருவரும் வியாதியினாற் பீடிக்கப்பட்டு வருந்திக் கொண்டிருந்தார்கள்.

அதுகண்ட தேவலர் கிருபைகூர்ந்து, இவ்விருவர்க்கும் யாது காரணத்தால் இவ்வியாதி வந்ததென்று ஞானநோக்கால் ஆராய்ந்து, காரணத்தை யுணர்ந்து, செய்ந்நன்றி மறந்த சீடனை நோக்கி, அப்பா! பயப்படாதே. என்னசெய்வோ மென்று சோகமுங் கவலையும்

அடையாதே. உங்கள் வியாதி நீக்கத்தின் பொருட்டு ஒருபாயம் உண்டு. நான் முன்பு தீர்த்தயாத்திரை செய்யும்பொழுது குரு க்ஷேத்திரத்திற்குச் சென்றேன். அச்சமயம் அங்குள்ள முனிவர்கள் தமது சிஷ்யர்களுடனும் அவர்களுக்குச் சிஷ்யர்களுடனும் பிரயாணத்திற்கு ஆயத்தமா யிருந்தார்கள். அதுகண்ட நான் "முனிவர்களே! எங்கே போவதற்கு விரும்புகிறீர்கள்" என்று வினவ; காவேரிக்குத் தென்பக்கத்தில் மூன்று யோசனை தூரத்தில் திருவாரூருக்கு ஆக்கினேய திக்கில் ஒரு தலம் உலகப் பிரசித்தமாய் விளங்குகின்றது. அதற்குக் காளாகருவனமென்றும், கபாலவனமென்றும், கார்முகபுரமென்றும், பிரமபுரமென்றும் பெயர் உண்டு. அங்கே பிரம தீர்த்தம் என்று ஒரு புண்ணியதீர்த்த மிருக்கின்றது. அதில் கங்கை முதலிய தீர்த்தங்களும் சிவாஞ்ஞையால் என்றும் இருக்கின்றன. அதில் சூரியோதய காலத்தில் மூன்று நாள் ஸ்நானஞ் செய்பவன் எல்லா வியாதிகளும் நீங்கிப் பிரமலோகத்தை யடைவான். அங்கு எழுந்தருளியிருக்கும் கபாலவன நாதரை அன்புடன் வணங்குகின்றவனுடைய புண்ணியபலனைச் சொல்லுவதற்கு அப்பரமேசுவரனே வல்லவர் எவர்கள் அந்தத் தலத்தில் பிதிரர்களை நோக்கி அன்போடு சிரார்த்தஞ் செய்கின்றார்களோ, எவர்கள் வைகாசி மாதத்திலும் கார்த்திகை மாதத்திலும் கோதானஞ் செய்கின்றார்களோ, அவர்களுடைய பிதிரர்கள் அப்பொழுதே திருககைலாசத்தை யடைவார்கள். எவன் அந்த லிங்கமூர்த்தியை வில்வபத்திரங்களாலும் மல்லிகை சண்பக முதலிய புஷ்பங்களாலும் அருச்சித்துச் சருக்கரை பால்கலந்த பாயச நிவேதனஞ் செய்து அதைப் பிராமணர்களுக்குக் கொடுக்கின்றானோ அவனுடைய புண்ணிய பலனை அப்பரமேசுவரனே சொல்லத்தக்கவர். எவன் வைகாசி மாதப் பௌர்ணிமையில் அந்த லிங்கமூர்த்திக்குப் பஞ்சாமிர்தாபிஷேகஞ் செய்கின்றானோ, எவன் திங்கட்கிழமை, சஷ்டி, கார்த்திகை, பிரதோஷம், பூச நக்ஷத்திரஞ் சேர்ந்த ஞாயிற்றுக்கிழமை, சங்கிரமணம், சன்ம நக்ஷத்திரமென்னும் இவற்றுள் ஒன்றில் ஸ்ரீ ருத்திரம், உருத்திர சூத்தம், புருஷ சூக்தம், சத்தியோஜாத முதலிய மந்திரங்கள் ஆகிய இவைகளைச் சொல்லி அபிஷேகஞ்செய்து, வஸ்திரம், சந்தனம், புஷ்ப மாலை, தூபம், தீபம், நைவேத்திய முதலியவைகளைக்கொண்டு அன்போடு பூசைசெய்கின்றானோ! அவன் தனது பிதுரர்களையும் உத்தாரணஞ் செய்துகொண்டு சிவ சந்நிதானத்தில் இருப்பான். கன்னிகை, திரவியம், புத்திரன், ஆகிய இப்பொருள்களை அடைய விரும்பினோர் அவ்விலிங்கமூர்த்தியைப் பூசித்தால் விரும்பியபடி பெறுவார்கள். பிரமகத்தி, சுரா

பானம், குருதாரகமனம், சுவர்ண சோரம், கருப்பகத்தியாகிய இவைகளைச் செய்தவனும், பலவகை வியாதிகளால் வருந்துபவனும், செய்ந்நன்றி மறந்தவனும், பிறரை வஞ்சித்தவனும், மற்றும் அநேக பாவங்களைச் செய்த அதமர்களும் அங்குள்ள பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து சகசிராக்ஷ பரமேசுவரனை அன்போடு பூசித்துத் தம்மால் இயன்றளவு பிராமணர்களுக்குத் தானங்கொடுத்தால் பாவங்களெல்லாம் நீங்கிப பரிசுத்தராவார்கள். அப்படிப்பட்ட க்ஷேத்திரத்திற்குப் போக விரும்புகிறோமென்றார்கள். நீங்களும் அங்கோ போய் அங்குள்ள பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால் உங்களுடைய வியாதிகள் நீங்கும். இன்னும் உனக்கு அந்த க்ஷேத்திர வைபவமாகிய ஒரு இரகசியத்தைச் சொல்லுகின்றோம் திருவாரூரில் அஜபா நடனமும் நளபட்டணமென்னும் திருநள்ளாற்றில் உன்மத்த நடனமும் சிவராஜதானியென்னும் நாகபட்டணத்தில் பாராவத நடனமும் கோகளமென்னும் திருக்கோளிலியில் பிரமா நடனமும் முகமௌனமென்னுந் திருவாய்மூரில் கமல நடனமும் கார்முகபுரமென்னுந் திருக்காறுயிலில் குக்குட நடனமும வேதாரணியத்தில் அன்ன நடனமுமாக ஏழுதலங்களிலும் எழுவகை நடனஞ் சொல்லப்பட்டன. நடனஞ் செய்கின்ற அவ்வம்மூர்த்திகளுடைய தரிசன விசேடத்தால் சீவர்களுக்கு இஷ்ட சித்திகள் உண்டாகின்றன தேவசருமனே! குருத்துரோகக் கொடுமையால் உனக்கு வயிற்றுவலி யுண்டாயிற்று. நாயகனை நிந்தித்த பாவத்தால் உன் மனைவிக்கு வெண்குட்ட முண்டாயிற்று. ஆதலால் நீ அங்கு உன் மனைவியோடு போய்ப் பிரம தீர்த்தத்தில் விதிப்படி ஸ்நானஞ் செய்து பூசினிக்காய்த் தானமும் திலதானமுஞ் செய்து, பின்பு ஹரரத்தின ஸ்தோத்திரத்தையும் திரியம்பக மந்திரத்தையும் அகோர மந்திரத்தையும் ஈசுவர சந்நிதானத்தில் செபிக்கக்கடவாய் என்று சொன்னார்.

அதுகேட்ட தேவசருமன் குருவை நமஸ்கரித்து, தயாநிதியாகிய குருவே! அடியேனுக்கு ஹரரத்தின ஸ்தவத்தை உபதேசிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க குரு உபதேசிக்கின்றார். அது வருமாறு "கைலாச நாயகிக்கு நாதராயும், கபாலவனேசுவரராயும், சகசிராக்ஷராயும் உள்ள ஹர! சங்கர உமக்கு நமஸ்காரம். என்னைக் காப்பாற்ற வேண்டும். நீலகண்டராயும் சருவராயும் காளகூட விஷத்தைப் பானஞ் செய்தவராயும் சிரசிற் சடாமுடியைத் தரித்தவராயும் உள்ள உமக்கு நமஸ்காரம். ஹர! வணங்கிய என்னைக் காத்தருள வேண்டும். சருவலோகத்தையும் உற்பத்தி செய்பவராயும், சமுசார துக்கத்தை நீக்குபவராயும் உள்ள உமக்கு நமஸ்காரம். சருவ

சிரேஷ்டராயும் சருவபயங்கரராயும் உள்ள உமக்கு நமஸ்காரம். எல்லா உபத்திரவங்களையும் நீக்குபவராயுள்ள ஹர! பாவத்தைப் போக்கவேண்டும். வாளைத்தரித்தவராயும் வஞ்சிப்பார்க்கு வஞ்சக ராயும் உள்ள உமக்கு நமஸ்காரம். கவசத்தைத் தரித்தவராகிய உமக்கு நமஸ்காரம். எனது பாவத்தை நாசஞ்செய்யவேண்டும் கங்கையைச் சிரசிற் றரித்தவராயும் முண்டிதகேசராயும் உள்ள தேவ ரீர்க்கு நமஸ்காரம். பசுக்களுக்குப் பதியாகிய தேவரீர்க்கு நமஸ்காரம். எனது பாவங்களை விரைவில் நீக்குதல் வேண்டும். காலகாலராயும், சர்வலோக நாதராயும் இடபவாகனரூடராயும் விரூபாக்ஷராயும் உள்ள தேவரீர்க்கு நமஸ்காரம். அடியேன்செய்த பாவத்தை நீக்கியரு ளல் வேண்டும். மிருத்தியுவை வென்றவராயும் சுகத்திற்கு ஸ்தான மாயும் மோக்ஷத்திற்கு ஈசராயும் உள்ள மகாதேவராகிய தேவரீர்க்கு நமஸ்காரம். திரிபுரத்தை நாசஞ்செய்தவராயும், காமனை யெரித்தவ ராயும், அன்பர்களின் அபிஷ்டத்தைக் கொடுப்பவராயும், பார்வதி நாயகராயும், விஷ்ணுவல்லராயும் உள்ள தேவரீர்க்கு நமஸ்காரம். இந்த ஹரரத்தின ஸ்தவத்தை எவன் அன்புடன் பாராயணஞ் செய்வானோ அவன் எல்லா வியாதிகளு நீங்கிச் சிவபத்தியையும் அடைவான்." என்னும் பொருளையுடைய ஹரரத்தின ஸ்தவத்தை உபதேசித்த குருவைத் தேவசருமன் நமஸ்கரித்து விதிப்படி அருச் சித்து விடைபெற்றுக்கொண்டு துங்கபத்திரை நதிக்கரையினின்றும் புறப்பட்டுத் தன் மனைவியுடன் பையப் பையக் காளாகருவனத்தை யடைந்து முகமலர்ச்சியுற மனமகிழ்ந்து அங்குள்ள முனிவர்களிடம் அநுஞ்ஞை பெற்றுச் சூரியோதய காலத்தில் சங்கற்பஞ் செய்து கொண்டு அவளோடு பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சந்தியாதி கருமங்களை முடித்துக் காயத்திரி மந்திரத்தை ஆயிரந்தரஞ் செபித் துப், பஞ்சாமிர்தம், பலவகைப் பழங்கள், தேன், நெய், பனிநீர், சுத்ததீர்த்த முதலிய அபிஷேகத் திரவியங்களைக்கொண்டு, ஸ்ரீ ருத் திரம் உருத்திரசூக்தம் புருஷசூக்தம் பஞ்ச மந்திரங்களாகிய இவை களைச் செபித்துச் சகசிராக்ஷ சிவலிங்கப்பெருமானுக்கு அபிஷேகஞ் செய்து, தூபம், தீபம், நைவேத்தியம், தாம்பூலம், மந்திரபுஷ்ப முத லிய உபசாரங்களாற் பூசித்துக் குருவாக்கின்படி நல்ல வில்வபத்திரங் களால் அருச்சனைசெய்து ஸ்ரீ பஞ்சாக்ஷர செபஞ் செய்துகொண்டு தக்ஷிணையோடு கூஷ்மாண்ட தானமுந் திலதானமுஞ் செய்து அங் குள்ள பிராமணர்களுக்கு நித்தியமும் அன்னதான நடத்தி வைகாசி மாசத்துச் சுக்கிலபக்ஷத் துவாதசி திதியில் வேதாத்தியயனஞ்செய்து முடித்தவனையும் குடும்பஸ்தனையுமுள்ள ஒரு பிராமணனுக்குப் பாயச

தானங்கொடுத்து அந்தப் பௌர்ணிமையில் கோதான முதலிய பல தானங்களையுஞ் செய்தான். இவ்வாறு நடத்திய புண்ணிய விசேடத்தால் அன்றுதினமே அவ்விருவருக்கும் வயிற்றுவலியும் வெண் குட்டமும் நீங்க; அவர்கள் மகிழ்ந்து குருவின் பாதங்களைத் தியானித்துக்கொண்டு ஒருமாதம்வரை அங்கிருந்து அங்குள்ள ஐந்து தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து க்ஷமாவதியம்மையாரையும் சகசிராக்ஷப் பெருமானையும் பூசித்து வணங்கி விடைபெற்று, அங்கு வசிக்கும் பிராமணர்களை நமஸ்கரித்து ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு அங்குநின்றும் புறப்பட்டுக் குருவினிடம் வந்து சேர்ந்தார்கள். அதுமுதல் யாவரும் அந்த க்ஷேத்திரத்தில் மிகுந்த அன்புகொண்டு ஸ்நானம் தானம் மந்திரசெபம் க்ஷமாவதி சமேத சகசிராக்ஷ தரிசனம் ஆகிய இவைகளைத் தினமுஞ்செய்து வந்தார்கள்.

**பிரம தீர்த்த மகிமைச் சருக்கம் - முற்றிற்று.**



# தியாகராஜப் பிரதிட்டைச் சருக்கம்.



முனிவர்களே! படித்தவளவில் எல்லாப் பாவங்களையும் நீக்குவதாயும், கேட்டவளவில் எல்லாநன்மைகளையுங் கொடுப்பதாயும் உள்ள தியாகராஜப் பிரதிட்டை என்னுஞ் சரித்திரத்தைச் சொல்லுகின்றோம்;—முற்காலத்திலே முசுகுந்தன் என்று ஓர் அரசன் இருந்தான் அவன் எல்லா உலகத்தாராலும் புகழத்தக்க சற்குணநிதியா யுள்ளவன். தேவர், அசுரர், பூலோகத்து அரசர், ஆலோசனையிற் றேர்ந்தவர் முதலிய யாவரையும் வெற்றிகொள்ளும் வன்மையிற் சிறந்தவன். சிவபத்தியுள்ளவன். சிவபூஜையில் மிக்கவன். ஆலோசனையில் நுட்பமானவன். பக்தவிசுவாச முடையவன். சோதிட்டோம முதலிய யாகங்களைச் செய்தவன். நித்தியமும் அதிதிபூஜை செய்பவன். அத்துணைச் சிறந்த அரசன் பூமியை அரசாண்டுவருங் காலத்திலே, தேவலோகத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் சருவலோக பயங்கரமான யுத்தம் நடந்தது. அப்பொழுது இந்திரன் தோற்றுப்போய், அசுரர்களை வெல்லும் உபாயத்தை ஆலோசித்து, முசுகுந்தச் சக்கரவர்த்தியை அழைத்து வரும்படி தன் தேர்ப்பாகனாகிய மாதலியை அனுப்ப, உடனே அவ்வரசன் நினைத்த இடத்திற் கொண்டுபோய் விடும் தெய்வத்தன்மை பொருந்திய இரதத்தில் ஏறித் தேவலோகத்திற்குச் செல்ல; இந்திரன் அரசனை யுபசரித்து நடந்த காரியத்தைச்

சொல்ல; அவ்வரசன் அசுரர்களோடு யுத்தஞ் செய்து வென்றான். அதுகண்டு மகிழ்கூர்ந்த இந்திரன் நமக்கு இவ்வமயம் பேருதவி புரிந்த இவ்வரசனுக்கு யாது கைம்மாறு செய்யத்தக்கதென் றாலோசித்து, அரசனே! நீ இப்பொழுது அசுரர்களை வென்று உதவி செய்தமைக்கு மகிழ்ந்தேன். நீ யாது விரும்பினாலும் தருகின்றேன். ஐயமில்லை என்றான். அதுகேட்ட அரசன் மகிழ்ந்து, முதனாளிரவே சொப்பனத்தில் தியாகராஜப் பெருமான் அருளிச்செய்தபடி, இந்திரனே! முற்காலத்தில் உமக்கு விட்டுணுமூர்த்தி கொடுத்த தியாகராஜராகிய சோமாஸ்கந்த மூர்த்தியைத் தரவேண்டும் என்று கேட்க; இந்திரன் நம்முடைய உயிர்க்குயிராகிய பிரபுவை எவ்வாறு கொடுப்பதென்று நடுக்குற்று, மிக வருத்த முடையவனாய், இன்னது செய்வதென்று தெரியாமல், எது கேட்டாலும் தருவதாய் வாக்களித்துவிட்டோமே என்ன செய்வதென் றாலோசித்து ஓர் உபாயத்தைச் சிந்தித்து, விஸ்வகர்மாவை யழைத்துத், தான் பூஜைசெய்துவரும் சோமாஸ்கந்த மூர்த்தியைப்போல மற்றொரு மூர்த்தியை நிருமிக்கச்செய்து, அந்த மூர்த்தியை அரசனிடங் கொடுத்தான். அம்மூர்த்தியை அரசன்வாங்கி ஈசுவராஞ்ஞையால் உண்மை அறிந்து நான் விரும்பின மூர்த்தி இவரல்லர். உம்முடைய பூஜையிலிருக்கும் மூர்த்தியைத் தருகவென்று கேட்க, இந்திரன் பின்னும் ஒரு மூர்த்தியை நிருமித்துக் கொடுக்க, அரசன் அந்த மூர்த்தியையும் முன்போற்கூற, இவ்வாது ஆறுமூர்த்திகளை நிருமித்துக் கொடுத்தும் இவரல்லர். இவரல்லர் எனக்கூறிய அரசனுக்கு முன்பு விஷ்ணுவினால் தனக்குக் கொடுக்கப்பட்ட பூஜாமூர்த்தியைக் கொடுத்தான். உடனே அரசன் மனமகிழ்ந்து வாங்கி ஏழுமூர்த்திகளையும் இரதத்தில் ஏற்றிக்கொண்டு பூமிக்கு வந்து, விநாயகக் கடவுளால் திருவாரூரின் மகிமையை நன்குணர்ந்து, அங்கு இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் வந்து சூழ்ந்துநிற்கச் சுபதினத்தில் ஸ்ரீ வீதிவிடங்கத் தியாகராஜப் பெருமானை ஸ்ரீ வன்மீக நாதருக்குத் தென்பாகத்தில் விதிப்படி ஸ்தாபித்துப் பூசை செய்வித்தான். பின்பு அரசன் ஆதிவிடங்க மூர்த்தியை ஸ்தாபித்தற்குத் தகுந்த தலம் யாதென் றாலோசிக்கும்பொழுது இந்திரனுடைய ஆஞ்ஞையால் தேவதூதன் சென்று தலமகிமையை யுணர்ந்து வந்து கூற, இந்திரன் முதலிய தேவர்களுடன் காளாகருவனத்தை யடைந்து, இந்திரனுடைய ஆஞ்ஞையின்படி விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட விமானம் மண்டபம் கோபுர முதலியவைகளோடு விளங்கும் சகசிராக்ஷ சிவபெருமானுடைய ஆலயத்தில் அந்த மூர்த்திக்குத் தென்பாகத்தில் சுவர்ண சிங்காசனத்தில் ஆதிவிடங்க

ரென்னுஞ் சோமாஸ்கந்த மூர்த்தியைச் சுபமுகூர்த்தத்தில் பிரதிஷ்டைசெய்து; சிவாகமப் பிரகாரம் பூஜை செய்வித்து; அத்தேசத்தை யாளும் சாலிசூக மகாராஜனைக் கொண்டு, முன் பிரமதேவன் சகசிராக்ஷப் பெருமானுக்கு உற்சவம் நடத்தியவாறே துவஜாரோகண முதல் தீர்த்தம் இறுதியாயுள்ள மகோற்சவம் நடப்பித்தான. பின்பு அரசன் சுந்தரவிடங்கமூர்த்தியை நாகபட்டணத்திலும் புவனிவிடங்கமூர்த்தியை வேதாரணியத்திலும் நகவிடங்கமூர்த்தியைத் திருநள்ளாற்றிலும் அவனிவிடங்கமூர்த்தியைத் திருக்கோளிலியிலும் சுவர்ணவிடங்க மூர்த்தியைத் திருவாய்மூரிலும் பிரதிஷ்டை செய்து, சாலிசூகராஜனோடும் தன் மகனாகிய அக்கினிவர்ணனோடும் திருவாரூருக்கு வந்து மூலசோம மகேசுவரராயும் அஜபாநடன மூர்த்தியாயும் உள்ள வீதிவிடங்கத் தியாகராஜப் பெருமானை மூன்று முறை பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்துச் செங்கழுநீர்ப் புஷ்பமாலை சாத்தித் * தன்னாற் செய்யப்பட்ட சகஸ்திர நாமங்களால் வில்வங் கொண்டு அருச்சனை செய்தான்.

அப்பொழுது பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலிய முனிபுங்கவர்கள் இரத்தின சிங்காசனத்தில் வீற்றிருப்பவராயும், செங்கழுநீர்ப் புஷ்பமாலையாற் பொலிந்த கண்டத்தை யுடையவராயும், வீரகட்கங்களினால் மனோகரராயும், தம்மோடு பாதியாசனத்தில் வீற்றிருக்கும் பராசத்தியாரின் கடைக்கண்களுக்குக் கோசரராயும், உட்கார்ந்தபடியே அசபா நடனஞ் செய்பவராயும், அடியார்களுக்குத் தரிசித்தவளவில் தமது ஆனந்தத்தை யளிப்பவராயும், சர்வாகாரரான விஷ்ணுவின் இருதய கமலத்தில் வசிப்பவராயும், எங்கும் நிறைந்தவராயும், சர்வேசுவரராயும், சர்வாதீதராயும், பராபரராயும், பிரபுவாயும், விளங்குகின்ற வீதிவிடங்கத் தியாகராஜப் பெருமானை அன்போடு தரிசித்து, ஆனந்தமடைந்து, முசுகுந்தச் சக்கரவர்த்தியைப் புகழ்ந்தார்கள். பின்பு முசுகுந்தன் முதலிய அரசர்களும் பதஞ்சலி முதலிய முனிபுங்கவர்களும் தியாகராஜப் பெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் இடம்போய்ச் சேர்ந்தார்கள்.

முனிவர்களே! காளாகருவனத்தில் குக்குட நடன தரிசனஞ் செய்பவர்கள் இம்மையின்பங்களையெல்லாம் அநுபவித்துத் தேகாந்தத்திலே மோக்ஷானந்தத்தையும் பெறுவார்கள். ஆதிவிடங்கத் தியாகராஜமூர்த்திக்குச் செவ்வந்திப் புஷ்பமாலை சாத்தினவன் ஒரு புஷ்பத்துக்கு ஆயிரம் வருஷமாகச் சிவலோகத்தி லிருப்பான். செங்

* தன்னாற் செய்யப்பட்ட சகஸ்ர நாமமாவது - முசுகுந்த சகஸ்ர நாமம்.

கழுநீர்ப் புஷ்பமாலை சாத்தினவனும் அவ்வாறே பலனை யடைவான். அயனம், விஷு, சந்திரகிரகணம், சூரியகிரகணம், ஆகிய இப்படிப் பட்ட விசேஷ காலங்களில் ஆதிவிடங்கமூர்த்திக்கு அபிஷேகத் திரவியங்க ளெல்லாங்கொண்டு அபிஷேகஞ் செய்விக்கின்றவன் தனது இருபத்தொரு தலைமுறைப் பிதிரர்களை உத்தாரணம் செய்து கொண்டு சிவலோகத்தை யடைவான். ஆதிவிடங்கத் தியாகராஜப் பெருமானுடைய மகிமையையும் சகஸிராக்ஷப் பெருமானுடைய மகிமையையும் ஒருவாறு சுருக்கிச் சொன்னோம் க்ஷமாவதிதேவியாரையும் சகஸிராக்ஷ மகேசுவரரையும் ஆதிவிடங்கேசரையும் தேவ நிருமித விமானத்தையும் எவன் ஒருதரமாவது தரிசனஞ் செய்வானோ அவனுக்கு அடுத்த பிறவி யில்லை "அதைச் சிருஷ்டித்தது. அதற்குள் பிரவேசித்தது. சத்தாயும சித்தாயும் ஆயிற்று" என்ற சுருதியின் தாற்பரியத்தை இங்கே சிவபெருமான் காண்பிக்கின்றார். தன்னாலே சிருஷ்டிக்கப்பட்ட சரீரத்தில் தனது ரூபமான சுவாதிட்டானத்தில் சருவசீவர்களுக்கும் சுவாசம் நர்த்தனஞ் செய்கின்றதல்லவா. இதுதான் அசபா நர்த்தனம். சோமாஸ்கந்தமூர்த்தி இதையே திருவாரூரிற் காட்டியருளி யாவருக்கும் ஞானத்தைத் தந்தருளுகின்றார் இதையே காலதேசத்துக்கு ஏற்றபடி காளாகருவன முதலிய ஆறு க்ஷேத்திரங்களிலும் காட்டியருளுகின்றார.

**தியாகராஜப் பிரதிட்டைச் சருக்கம் - முற்றிற்று.**



# சிங்காசனவிதிச் சருக்கம்.



முனிவர்களே! சிங்காசனவிதியைச் சொல்லுகின்றோம். இதைக் கேட்டமாத்திரத்திலே ஈசுவரபத்தி யுண்டாகும். முன்னொரு காலத்திலே காத்தற்றொழிற் கிறைவராகிய விஷ்ணுமூர்த்தியானவர் அசுரர்களாலும் இராக்கதர்களாலும் அடிக்கடி உபத்திரவமடைந்து தாம் கவலையற் றிருத்தற்குரிய இடம் யாதென் றாராய்ந்து திருப்பாற்கடலை யடைந்து சேஷ சயனத்தில் இலக்குமியுடன் தங்கி அசுரராக்கத பயத்தோடு சிவபெருமானைத் தியானிக்க; அப்பொழுது பத்தவற்சலராகிய சிவபெருமான் அவர்க்கு முன்னே தோன்றியருள, விஷ்ணுமூர்த்தி சிவபெருமானைத் தரிசித்து வணங்கி மகிழ்ச்சியுடன் தோத்திரஞ் செய்யத் தொடங்கினார்.

தேவதேவராயும், மகேசராயும், பத்தவற்சலராயும், சருவலோக சுகப்பிரதராயும், செங்கழுநீர்ப் பூமாலை தரித்த கழுத்தையுடையவ ராயும், ஆன்மாக்களுக்கு வரும் சகல துன்பங்களையும் நீக்குபவரா யும், பச்சைக் கர்ப்பூரம் குங்குமப்பூ ஆகிய இவற்றின் மணங்கமழ் கின்ற நெற்றியையுடையவராயும், விபூதி பூசப்பட்ட திருமேனியுடை யவராயும், சந்தன முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டவராயும், சிருஷ்டி திதி லயம் என்னும் இவற்றிற்கு அதீதராயும், சச்சிதானந்த சொரூபராயும், வீரசிங்காசனரூடராயும், வீரகட்க முதலிய ஆயுதங் களை யுடையவராயும், எல்லா உபநிடதங்களாலும் தேடப்படும் பாத தாமரைகளை யுடையவராயும், விளங்குகின்ற மகாதேவரே! உலகங் களைக் காக்கும்பொருட்டுத் தேவரீரால் ஆஞ்ஞாபிக்கப்பெற்ற நான், தேவரீரையே பூசித்து மிகுந்த பலத்தை யடைந்த அசுரர்களாற் பீடிக்கப்பட்டு வைகுண்டத்தி லிருத்தற்கும் பயந்து இங்கு வந்து இவ்விடத்திலும் சேஷசயனத்தில் இலக்குமியோடு பயந்தே வசிக் கின்றேன். சருவலோகேசுவரனை தேவரீரைத் தரிசித்துக் கிரு தார்த்தனானேன் என்றார். வெள்ளைச் செவ்வந்திப் புஷ்பத்தாற் சூழப்பட்ட சடையையுடையவராகிய சிவபெருமான் அதுகேட் டருளிப் புன்னகையுடன் அன்பனே! இனி நீ அஞ்சற்க. உன்னை யன்றி எவரும் நமது சொரூபத்தை யறியமாட்டார்கள். நாம் எவ னுக்குத் தரிசனங் கொடுக்கின்றோமோ அவனே இஷ்டசித்திகளெல் லாம் அடைவான். நீ அச்சமின்றிக் காளாகருவன முதலிய ஆறு தலங்களிலுஞ் சென்று நம்மைப் பூசிக்கக்கடவாய். உனக்கு இனி அசுர பயம் உண்டாகாது. எல்லாத் தலங்களுள்ளும் உத்தமமாயும் உனது வடிவாயுமுள்ள திருவாரூரில் உனது இருதய கமலத்தில் வீற்றிருந்து உன் பயத்தை நீக்குகின்றோம். மோக்ஷபலனைத் தரத் தக்க நமது பூசை யாவர்க்கும் கிட்டுவது மிக அருமை. காளாகரு வன முதலிய ஆறுதலங்களிலும் தியாகராஜர் என்று பெயர் வகித்து வீரசிங்காசனேசராய் வீற்றிருக்கின்ற நமது பூசை கிடைப்பது அதி னும் மிக அருமையாகும் என்று அருளிச்செய்தார்.

அதுகேட்ட விஷ்ணு சிவபெருமானை நமஸ்கரித்து, புளகாங் கித வடிவுடையராய் நின்று, உலகங்களுக்கு நாதராயும் அடியார் களின் உபத்திரவத்தை நாசஞ்செய்பவராயும் விளங்குகின்ற தேவாதி தேவரே! உம்மையே கதியாக அடைந்தேன். வீரசிங்காசன லக்ஷ ணத்தைக் கேட்க விரும்புகின்றேன். கருணைக்கடலே! அதனை யருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கச், சிவபெருமான் கூறு கின்றார். விஷ்ணுவே! சதாசிவமூர்த்தியி னிடத்திற் றோன்றும்

சிருஷ்டி முதலியவை பாவிக்க முடியாதன. நம்முடைய ரூபம் சகள மென்றும் நிஷ்கள மென்றும் இருவகைப்படும். அவற்றுள் உலகத்துக்கு அநுக்கிரகஞ் செய்தற்பொருட்டு நாம் சகள வடிவங் கொண்டு வீரசிங்காசனத்தில் வீற்றிருந்து போக மோக்ஷங்களைக் கொடுக்கின்றோம். அவ் வீரசிங்காசன லட்சணத்தைச் சொல்லுகின்றோம். வீரசிங்காசன மென்பது நம்மாலேயே நிருமிக்கப்பட்டது. அது நான்கு பக்கத்திலும் ஒத்த கழுத்தினையுடைய சிங்கங்களாலும், எட்டுத்திக்கிலும் திக்குப்பாலகப் பிரதிமைகளாலும் அலங்கரிக்கப்பெற்று, நடுவில் அலங்காரம்வாய்ந்த நான்கு இடபங்களும் காமதேனுவும் கற்பகவிருக்ஷமும் அமைந்ததாயும், மத்தியிலுள்ள ஸ்ரீ சக்கரமகாயந்திரத்தால் மனோகரமாயும், கிழக்கு முதலிய திக்குக்களில் மலர்ந்த தாமரைப்பூக்கள் விளங்குவதாயும், பிரமன் விட்டுணு முதலிய தேவர்களின் பிரதிமைகள் சூழப்பெற்றதாயும், நவரத்தின மிழைத்த சொர்ணமயமாயும் விதிப்படி நியமிக்கப்படவேண்டும். அவ்வாசனம் சந்தன மரத்தாலாவது தேவதாரு மரத்தாலாவது செய்யத் தக்கது. அவற்றுள் சந்தனம் உத்தமம். தேவதாரு மத்திமம். மற்ற மரங்களாற் செய்யின் அதமபக்ஷமாகும். அன்றியும் சொர்ணத்தாற் செய்வது உத்தமமென்றும் வெள்ளியாற்செய்வது மத்திமமென்றும் தாமிரத்தாற்செய்வது அதமமென்றும் சிவதருமகிரந்தத்திற் சொல்லப்பட்டுள்ளது. அவ்வாசனம் தேவர்களாற் பூசிக்கத் தக்கது. நாம் காளாகருவனத்தில் சுவர்ண சிங்காசனத்தில் வீற்றிருந்து தியாகராஜர் என்னும் பெயருடன் விளங்கி நம்மை வழிபடுவோர்க்கு விரும்பிய பலனைக் கொடுக்கின்றோமாதலின் நீ அங்குப் போய் நம்மைப் பூசிப்பாயென்றருளிச்செய்து அந்தர்த்தானமானார். பின்பு விஷ்ணுமூர்த்தி சிவபெருமான் ஆஞ்ஞையின்படி இலக்குமியோடும் காளாகருவனம் வந்து சிவபெருமானைப் பூசைசெய்து சத்துரு பயமில்லாதவராய் வைகுண்ட லோகத்தில் மகிழ்ச்சியோடிருந்தார். இந்தச் சரித்திரத்தைப் படித்தாலும் கேட்டாலும் சிவபத்தியுண்டாகும்.

**சிங்காசன விதிச் சருக்கம் – முற்றிற்று.**



# அபிஷேகவிதிச் சருக்கம்.



முனிவர்களே! சகசிராக்ஷ சிவலிங்கப் பெருமானுக்கும் ஆதி விடங்கத் தியாகராஜமூர்த்திக்குஞ் செய்யத்தக்க அபிஷேகவிதியைச் சொல்லுகின்றோம். அயனம், விஷு, சந்திர சூரியகிரகணம், உற்சவம் ஆகிய புண்ணியகாலங்களில் விதிப்படி அபிஷேகஞ் செய்தல் வேண்டும். அஃதாவது:— முதலிற் பிரணவ மந்திரத்தோடுகூடி அந்தரியாகஞ்செய்து, பிறகு விக்கினேசுர பூஜையும் சங்கற்பமும் புண்ணியாகவாசனமுஞ் செய்து, பஞ்சகவ்வியஞ் சேர்த்து, ஜலபாத்திரத்தைப் பூசித்து வாஸ்துசாந்தி செய்யவேண்டும். பின்பு விம்ப சுத்திசெய்து மன அடக்க முடையவனாய் கணபதி, குரு, க்ஷேத்திர பாலர், வடுகபைரவர் என்னும் இவர்களைப் பாத்திய அருக்கிய ஆசமனீய தூப தீபங்களுடன் பூசிக்கவேண்டும். இனி அபிஷேகத்திரவிய நிர்ணயத்தைச் சொல்லுகின்றோம். சுகந்ததைலம், திரவியம், பஞ்சகவ்வியம், பால், பஞ்சாமிர்தம் ஆகிய இவற்றை முறையே அபிஷேகஞ்செய்து ஆசாரியன் மாவினாற் கையைச் சுத்திசெய்து கொண்டு அட்ட புஷ்பங்களால் அருச்சித்து முன்போலத் தூப தீபங் காட்டிப் பின்பு கருப்பஞ்சாறு, தயிர், நெய், மஞ்சட்பொடி ஆகிய இவற்றால் முறையே அபிஷேகஞ்செய்து உழுந்தின் மாவினாற் கையைச் சுத்திசெய்துகொண்டு பின்பு சருக்கரை தேன் இவற்றால் முறையே அபிஷேகஞ்செய்து தூப தீபாதிகளாற் பூசித்துப் பின்பு ஸ்நபனகும்ப தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்து தூப தீப முதலியவற்றாற் பூசித்து இளநீர், நாரத்தம்பழச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, என்னும் இவைகளால் அபிஷேகித்தல் வேண்டும். இந்தப் பழரச அபிஷேகத்தால் சிவபெருமான் மகிழ்ச்சியடைவர். பின் நிருமாலிய சோதனஞ் செய்து புளிக்காப்புச் சாத்திப் பின்பு சர்வாங்கங்களிலும் விபூதியால் உத்தூளனஞ் செய்தல்வேண்டும். பின்பு அலங்காரஞ் செய்து தூப தீபங்காட்டிச சுத்தான்ன நிவேதனஞ்செய்து, கஸ்தூரி குங்குமப்பூ பச்சைக்கர்ப்பூரங் கலந்த சந்தனபிஷேகஞ்செய்து, சகசிரதாராஸ்நானம், அயுததாராஸ்நானம், செய்வித்துச் சதசங்காபிஷேகஞ் செய்தல்வேண்டும். பின் வலம்புரி இடம்புரிச் சங்கங்களா லபிஷேகஞ்செய்தல் வேண்டும் இவ் விருவகைச் சங்காபிஷேகமும் ஈசுவரனுக்குமிகப்பிரியத்தைக் கொடுப்பனவாகும். பின்பு அருக்கிய பாத்திரத்திலுள்ள தீர்த்தத்தால் அருக்கியங்கொடுத்துத் தூப தீபங்காட்டி நிவேதனஞ் செய்தல் வேண்டும். இவ்வாறு போகாங்க பூஜையை.

முடித்துப் பின்பு லயாங்கபூஜை செய்தல்வேண்டும். அட்ட புஷ்பங்களாற் பூசித்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையும் அசபா மந்திரத்தையுஞ் செபித்துச் சகசிராக்ஷப் பெருமானிடத்தும் சோமாஸ்கந்தமூர்த்தியினிடத்தும் அடியேன் செய்யுங் குற்றங்களை யெல்லாம் பொறுத்தருளல் வேண்டுமெனப் பிரார்த்தித்தல் வேண்டும். இவ்வாறு பூசித்தால் க்ஷமாவதி மனோகரராகிய சகசிராக்ஷமகேசுவரரும் ஆதிலிங்கமூர்த்தியும் இஷ்டசித்திகளை யெல்லாங் கொடுத்தருளுவார்கள். அவ்விரு மூர்த்திகளும் சகல சீவர்களாலும் செய்யப்பட்ட அபராதங்களை யெல்லாம் கருணையின் மேலீட்டாற் பொறுத்தருளி எல்லா உலகங்களையுங் காத்துவருகின்றார்கள். ஈசுவரனுக்கு இவ்விதமாகிய அபிஷேகத்தைப் பத்தி சிரத்தையுடன் செய்பவன் திருக்கைலாசத்தையடைந்து கொண்டாடப்படுவான். அன்றியும் அதிருத்திரவிதிப்படி ஸ்ரீ ருத்திர மகாமந்திர செபஞ் செய்பவன் சிவானுக்கிரகத்துக்குப் பாத்திரமாவான். அபிஷேகஞ்செய்தற்கு வன்மை யில்லாதவன் அன்போடு ஸ்ரீ பஞ்சாக்ஷர செபஞ்செய்தால் அவ் வபிஷேகபலனை யடைவான். இதைப் படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் இஷ்டசித்திகளெல்லாம் உண்டாகும்.

அபிஷேகவிதிச் சருக்கம் - முற்றிற்று.



# தியாகராஜ ரகசியச் சருக்கம்.



முனிவர்களே! முன்னொரு காலத்திலே திருக்கைலாச மலையில் ஸ்ரீகண்ட பரமேசுவரன் உமாதேவியார்க்குச் சொல்லியருளிய அதி ரகசிய விஷயத்தை உங்களுக்குச் சொல்லுகின்றோம். அப் பெருமான் உமாதேவியாரை நோக்கிச் சொல்லுகின்றார்:— உமையே! ஸ்ரீவித்தியா ரகசியத்தைச் சொல்லுகின்றோம் கேட்பாயாக அது தியாகராஜ ரகசியமென்றுஞ் சொல்லப்படும். ஆறு ஆசனங்களுள் காளாகருவனத்தில் விளங்கும் ஆசனமே முதன்மையானது. அது சிரேஷ்டமாயும் இரகசியமாயும் விளங்குவது. அவ் வாசனத்தில் ஸ்ரீவித்தியாயந்திரம் அமைக்கப் பட்டுள்ளது. அந்த யந்திரத்தில் எல்லா உலகங்களும் அடங்கி யிருக்கின்றன. சத்து சித்து என்னும் இவற்றின் இயைபினால் ஆனந்தம் உண்டாகும். ஸ்ரீ சோடசாக்ஷரி யென்னும் ஸ்ரீவித்தியாபராசத்தியே சித்துரூபம் உடையவர். சதாசிவமூர்த்தியே சத்துரூபமுடையவர். அவ்விருவருடைய சம்பந்தத்

தாலுண்டாகிய ஆனந்தமே கந்தமூர்த்தியாகும். ஆதலாற் சோமாஸ்கந்தமூர்த்தி சச்சிதானந்த சொரூபமாகும். அத்துணை மகிமை பொருந்திய சோமாஸ்கந்த மூர்த்தியின் இரகசியத்தை எக்காலமும் வெளிப்படுத்தலாகாது. அது இரகசியமா யிருக்க வேண்டுமென்பது வேதத்தின் ஆஞ்ஞை. உன்னுடைய அன்பின் மேலீட்டால் அவ்விரகசியத்தையுஞ் சொல்லுகின்றோம். ஸ்ரீ வித்தியா பக்தி யுள்ளவனையும் ஸ்ரீ வித்தியா மந்திரத்தை யறிந்தவனையும் ஸ்ரீவித்தியா உபாசகனையும் சுத்தனையும் இருப்பவனுக்கே இது சொல்லத் தக்கது. மற்றவர்களுக்குச் சொல்லப்படாது. ஸ்ரீ சக்கர யந்திரத்தின் நடுவிலுள்ள விந்துவே சதாசிவ ரூபம். திரிகோணமே ஸ்ரீ பஞ்சதசாக்ஷரியாகிய சத்திரூபம். அவைகளின் சேர்க்கையே ஆனந்தமாகிய கந்தரூபம். பஞ்சாக்ஷர ரூபமே அபராதசகேசுவரர். ஈசுவரியார் சீவர்களின் அபராதத்தைச் சகிப்பதால் க்ஷமாவதி யென்னும் பெயருடன் அங்கு விளங்குகிறார். அவ் வம்மையாரையே ஏகாக்ஷரி யென்றும் புவனேசுவரி யென்றும் உலகமாதாவென்றும் சொல்லுவார்கள். சதாசிவமூர்த்திக்கு ஐந்து திருமுகமும் தேவிக்கு ஒரு திருமுகமும் உண்டு. விந்து திரிகோணங்களின் ஐக்கியரூபமாகிய சத்தி சிவன் என்னும் இருவருடைய ஆனந்தமே ஆறக்ஷர ரூபமாயும் ஆறு திருமுகங்களுடன் கூடினதாயும் விளங்குகின்றது சிவபெருமான் சீவர்களுக்கு இஷ்டங்களை யெல்லாம் அளிப்பதால் காமேசரென்னும் பெயருடன் விளங்குகின்றார். அண்ட பிண்ட வடிவினராகிய பராசத்தியே ஸ்ரீ வித்தியை என்று சொல்லப் படுகிறார். அண்டச முதலிய அநேகயோனி பேதங்களிலும் ஒவ்வொரு ஆதாரத்திலும் அந்தச் சத்தியே விளங்குகின்றார். அவருக்கே காமேசுவரி [illegible]று பெயர். அநாகத மென்னும் பெயருள்ள ஆதாரமே நம்மிருவருக்கும் முக்கியஸ்தானம். சகசிரதள கமலமே அவ்விருவர்களுக்கும் முக்கியஸ்தானம். சிவன் விந்து ரூபமாயும் ஈசுவரி ஹ்ரீங்கார ரூபமாயும் கந்தன் அவர்களின் ஐக்கியரூபமாயும் அந்தச் சகசிரதள கமலத்திலேயே விளங்குகின்றார்கள். இப்பொழுது நாம் கூறிய திருவுருவம் காளாகருவனத்தில் விளங்குகின்றது. பிருதிவிப் பிரஸ்தரரூபமாக உண்டாகிய உத்தமமான ஆசனத்தில் சச்சிதானந்த சொரூபியாகிய இச் சோமாஸ்கந்தமூர்த்தி விளங்குகின்றார் பிருகத்புஷ்பம் என்னும் ஆயிரவிதழ்த் தாமரை நமது வடிவம். குசேசயமென்னும் நூற்றிதழ்த் தாமரை உனது வடிவம். செங்கழுநீர்ப் புஷ்பம் நம்மிருவருடைய வடிவம். வெள்ளைச் செவ்வந்திப் புஷ்பம் நமது ஆனந்தவடிவம். காளாகருவனத்தில் வீற்றிருக்கும்

சோமாஸ்கந்தமூர்த்தி முற்கூறிய புஷ்பங்களாற் பூசிக்கப்படுகின்றார். அவரே பிரமன் விட்டுணு உருத்திரன் மகேசுவரன் என்னும் நான்கு மூர்த்திகளையும் தம்மிடத்தில் ஒடுக்கிக் கொள்ளுகின்ற சதாசிவ மூர்த்தியென்று சொல்லப்படுவார். சுத்தவித்தை யென்னுந் தத்துவம் சதாசிவ தத்துவத்தில் ஏறும்போது சாதாகலையென்று சொல்லப்படும். அதுவே பஞ்சதசாக்ஷரி. அதுவே உயர்ந்தது. அதனின் மிக்கது பிறிதில்லை. அதுவே ஆனந்த ரூபமுடையது. அந்த ரூபமாகிய சோமாஸ்கந்த மூர்த்தியையே நான் எப்பொழுதுந் தியானிக்கின்றேன். சிருஷ்டி முதலிய பஞ்ச கிருத்தியங்களைச் செய்யுங் கருத்தாவாகிய அவரை நான் வணங்குகின்றேன் என்று கூறியருளித் துதிக்கத் தொடங்கினார். "பரமகாரணத்திற்குக் காரணராயும் சூரியன் சந்திரன் அக்கினியென்னு மூன்று கண்களையுடையவராயும் சேஷபிலத்திற் பிரகாசிக்கும் திருமேனி யுடையவராயும் ஆயிரங் கண்களையுடையவராயும் உள்ள சிவபெருமானுக்கு நமஸ்காரம். குமாரனையும் பவானியையும் எப்பொழுதும் இடப் பாகத்தில் வசித்தவராயும் தயைபொருந்திய கடைக்கண்களை யுடையவராயும் மகேசராயும் திவ்ய ரத்தினங்களால் விளங்குகின்ற சிங்காசனத்தில் வீற்றிருப்பவராயும் எப்பொழுதும் பிரசன்னமுள்ளவராயுமிருக்கிற தியாகராஜ மூர்த்தியைத் தியானிக்கின்றேன். பிரமன் விட்டுணு உருத்திரன் என்னு மூன்று மூர்த்திகளையுந் திரோதானஞ் செய்த மகேசுவர மூர்த்தி எந்த மூர்த்தியினிடத்து லயமடைகின்றாரோ அந்தச் சச்சிதானந்த மூர்த்தியாகிய தியாகராஜ மூர்த்தியை எப்பொழுதும் வணங்குகின்றேன். செவ்வந்திப் புஷ்பாபரணத்தினால் விளங்குங் காதுகளை யுடையவராயும் செங்கழுநீர்ப்புஷ்ப ஆரத்தையணிந்த கழுத்தையுடையவராயும் நேரிற் பிரகாசிக்கும் வீரகட்கமுடையவராயும் உள்ள தியாகராஜமூர்த்தியை வணங்குகின்றேன். எந்த ஒரே மூர்த்தி சிவனென்றும் ஈசானனென்றுஞ் சொல்லப்படுகிற சப்தார்த்த பாவப் பிரகாசத்தினால் அறியத்தக்கதோ எது பரப்பிரம ரூபமோ யாதொரு பசுபதிரூபம் தன்னிடத்திலுள்ள சருவஞ்ஞதை முதலிய ஆறு சக்திகளாற் பிரகாசிக்கின்றதோ அந்தத் தியாகராஜ மூர்த்தியை வணங்குகின்றேன். சுபாவத்தில் ஒரே மூர்த்தியாயிருக்கும் எந்தப் பிரபுவானவர் சிருஷ்டி திதி சங்காரம் என்னு மூன்று கிருத்தியத்தையும் செய்தற்குரிய மூன்று திருமேனியையும் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் ஆத்மா என்னும் எட்டுத் திருமேனியையும் வகிக்கின்றாரோ அந்தத் தியாகராஜ மூர்த்தியை வணங்குகின்றேன். "எவரிடத்திலுள்ள பயத்தினால

காற்று வீசுகிறது; சூரியன் ஏகாங்கியாய்ச் சஞ்சரிக்கிறான்; மிருத்தியு ஓடுகிறான்" என்று வேதம் எவரைத் தோத்திரஞ் செய்கிறதோ அம்பிகையைப் பத்தினியா யுடையவராயும் சருவலோக நாதராயுமுள்ள அந்தத் தியாகராஜமூர்த்தியை வணங்குகின்றேன். எவருடைய நேத்திரங்கள் இருளுக்குச் சத்துருவாகிய சூரிய சந்திர அக்கினிகளோ எவருக்குச் சர்ப்பம் ஆபரணமோ விஷம் உணவோ உமை இடப்பாகத்தி லிருக்கிறாரோ திசைகள் வஸ்திரமோ அப்படிப்பட்ட ஆதிபுருடராகியும் முனீந்திரர்களால் வணங்கப்படுகிறவராயுமுள்ள தியாகராஜமூர்த்தியை வணங்குகின்றேன். முனிபுங்கவர் எந்தப் பிரபுவைத் தம்மை ஆசிரயித்தவர்களுக்கு வேண்டுவதைக் கொடுப்பவரென்றும் தேவர்களுக்குள் உயர்ந்தவரென்றும் வணங்கினவர்களுக்குச் சரண்ய ரென்றும் சொல்லுகிறார்களோ அப்படிப்பட்ட பவானிபதியாயும் ஈசானராயும் ஆதியந்த மற்றவராயும் ஞானானந்த ரூபியாயும் உள்ள தியாகராஜமூர்த்தியை வணங்குகின்றேன். இந்தத் தியாகராஜ அஷ்டகத்தை எவனொருவன் காலையிலும் மாலையிலும் பரிசுத்தம் பொருந்திய மனசுடன் பாராயணஞ் செய்வானோ அவனுக்குத் தியாகராஜர் பிரசன்னராவர் ஆதலால அவன் துக்கமற்று ஏகியாய்ப் பிரபுத்துவத்தை யடைவான்" என்று சிவபெருமான் சோமாஸ்கந்த மூர்த்தியைத் துதித்து ஆனந்தமடைய, அது கண்ட உமாதேவியார் மகிழ்ந்து ஆனந்தக கண்ணீர் பெருகத் தோத்திரஞ் செய்வாரானார். "பிரகாசம் பொருந்திய கார்முக புரத்தை வாசஸ்தானமாகக் கொண்டவராயும் சிரோபூடணமாகிய சந்திரனால் விளங்குபவராயும் இந்திரன் முதலிய தேவர்களாற் பூசிக்கப்பட்ட பாதங்களையுடையவராயும் செங்கழுநீர்ப்புஷ்ப ஹாரத்தினால் பிரகாசிக்கிறவராயும் தமது அர்த்தாசனத்தி லிருக்கும ஸ்ரீவித்தையென்னும் பரதெய்வத்தை நோக்கி ஆனந்தக் கடலில் அமிழ்ந்தவராயும் உள்ள தியாகராஜ மூர்த்தியை வணங்குகின்றேன். காளாகருவனத்திலுள்ள சேஷபிலத்தில் விளங்குபவராயும் ஆயிரங் கண்களை யுடையவராயுமுள்ள அபராதசகேசுரரை வணங்குகின்றேன். கைலாசப் பிரஸ்தரத்துக்குச் சொல்லியவிதிப்படி பூசிக்கப்படுதலால் கைலாசநாயகி யென்னும் பெயர்வாய்ந்த க்ஷமாவதி தேவியாரை வணங்குகின்றேன்" என்று துதித்து மயிர்ச் சிலிர்ப்புற்ற வடிவத்துடன் கூடினவராயும் ஆனந்தம நிறைந்த மனத்தை யுடையவராயும் உள்ள உமாதேவியார் தமது நாயகராகிய சிவபெருமானைப் பாராட்டினார். முனிவர்களே! இவ்விரகசியத்தை அநதிகாரிகளுக்குச் சொல்லப்படாது.

## தியாகராஜ ரகசியச் சருக்கம் = முற்றிற்று.

# கபித்தயோகிச் சருக்கம்

முனிவர்களே! வேறு சிந்தனையில்லாமல் புண்ணியஸ்தலங்களை யடைந்து சிவபெருமானை வணங்குபவர் முக்தியடைவார்கள். அதில் ஐயமில்லை. அதற்கொரு கதை யுண்டு. அது சிவாபராதத்தை நீக்குவதாயும் உத்தமமாயும் உள்ளது. கேட்ட மாத்திரத்தில் சிவ கைங்கரியத்தில் மனஞ்செல்லத்தக்கது.

முற் காலத்திலே கபித்தரென்று ஒரு பிராமணர் இருந்தார். அவர் வேத முதலிய நூல்களை நன்கு ஆராய்ந்தவர். வாசபேய முதலிய யாகங்களைச் செய்தவர். சருவ லோகத்துக்கும் அநுக்கிரகஞ் செய்யும் பரமேசுவரனிடத்தில் பத்தி யுள்ளவர். சாருகபத்திய முதலிய மூன்று அக்கினிகளையும் சிவத்தியானத்தோடு வளர்ப்பவர். அந்தரியாக முறைப்படி சிவபூசைசெய்பவர். யோகத்திற் றேர்ந்தவர். எங்கும் சமதிருஷ்டி யுள்ளவர். அவர் எங்கும் யாத்திரை செய்துகொண்டு வரும்பொழுது காளாகருவன மகிமையைத்தெரிந்து அங்குவந்து அப்பொழுது நடைபெற்ற வைசாக உற்சவ தரிசனஞ் செய்து சகசிராக்ஷ மகேசுரருக்கு லக்ஷதீபம் இடவேண்டுமென்று நினைத்து நெய்வாங்கக் கடைத்தெருவிற் சென்று அங்கு நெய் விற்றுக்கொண்டிருந்த விருஷபேந்திர னென்னும் பௌத்தனை நோக்கி நெய் தா என்று கேட்க; அவன் உமக்கு நெய் எதற்காக என்று கேட்டான். அவர் சகசிராக்ஷ மகேசுவரருக்கு லக்ஷதீபம் இடுதற் பொருட்டு நெய் வேண்டும் என்றார். அதுகேட்ட பௌத்தன் சகசிராக்ஷ ரென்பதுயார்? அவருக்கு லக்ஷதீப மிடுவதாற் பயன்யாதென்று வினவ, யோகியானவர் சொல்லத் தொடங்கினர்.

"சகசிராக்ஷ ரென்பவர் சுயம்பிரகாசமூர்த்தி. அவர் தேவாதி தேவர். சதாசிவனென்று சொல்லப்படுபவர். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் ஆத்மா என்னும் எட்டுத்திருமேனி யுடையவர். இன்ன தன்மையரென்று சொல்ல முடியாதவர். எங்கும் நிறைந்தவர். எல்லாவற்றிற்குங் காரணரா யுள்ளவர். அவரிடத்துப் பயத்தினால் வாயு வீசுகிறது. சூரியன் உதிக்கிறான் என்றும் அக்கினி இந்திரன் மிருத்தியு முதலானவர்கள் அவருக்குப் பயந்து சஞ்சரிக்கிறார்க ளென்றும் வேதங் கூறுகின்றது. அவரே சிருட்டி திதி சங்காரம் என்னு முத்தொழிலையுஞ் செய்பவர். அழிவில்லாதவர். ஆதியும் அந்தமும் அற்றவர். சச்சிதானந்த வடிவ

முள்ளவர். ஞானரூபர். நிஷ்களர். சகளர். பக்தவற்சலர். தம்மை வழிபடும் அடியார்களுக்கு மகிழ்ந்து அவர் நினைத்த வரங்களைக் கொடுப்பவர். அவர் அன்பர்களுக்கு அநுக்கிரகஞ் செய்தற்பொருட்டே இந்தத் தலத்தில் சகஸ்ராக்ஷ லிங்கரூபமாய் விளங்குகின்றார். அழிவற்றதாயும் அபாயமில்லாததாயும் உள்ள அவருடைய சத்தியே பஞ்சதசி யென்றும் புவனேசுவரி யென்றும் இங்கு விளங்குகின்றார். அந்தச் சத்தி கைலாசப்பிரஸ்தர ரூபமாதலின் கைலாச நாயகி யென்றும் சீவர்களின் குற்றத்தைப் பொறுத்தருளுவதால் க்ஷமாவதி யென்றும் காரணப் பெயர் பெற்றிருக்கின்றார் என்றார்.

அதுகேட்ட பௌத்தன் கூறுகின்றான்:— பஞ்சீகரணஞ் செய்யப்பட்ட பிருதிவி முதலிய மகாபூதங்களின் கூட்டமே இவ்வுலகம். பஞ்சீகரணஞ் செய்யப்படாத பூதமே சூட்சுமப் பிரபஞ்சம். அன்னமயம் பிராணமயம் மனோமயம் என்பவற்றைக் கடந்து விஞ்ஞானம் பிரகாசிக்கின்றதன்றோ. அந்த விஞ்ஞானத்தி லிருந்தே பூதங்களெல்லாம் உற்பத்தியாகி அதனாலேயே நிலைத்து நின்று அதனிடத்திலேயே ஒடுங்குகின்றன என்று வேதங் கூறுகின்றது. அந்த விஞ்ஞானமே ஆன்மா என்று வேதத்தின் உண்மை யுணர்ந்தவர் கூறுகின்றார்கள். நான் என்னும் விருத்தியே விஞ்ஞானமென்பது வேதத்தின் அபிப்பிராயம். அகம் (நான்) எனனும் விருத்தி உண்டாகிய பினபே இதம் (இது) என்னும் விருத்தி யுண்டாகும். ஆதலால் இதம் என்னும் விருத்திக்கு அகம் என்னும் விருத்தி காரணமாகும். ஆதலின் விஞ்ஞானமே எல்லாவற்றுக்குங் காரணம். அதுவே ஆன்மா. அவ்வுண்மையை அறிந்தவர் புத்ததேவர். அப்படியிருக்க, இவ்வுலகம் ஈசுவரனால் உண்டாயிற்றென்று நீர் சொல்லுவது சுருதிக்கும் யுத்திக்கும் விரோதமாகும். அன்றியும் நீர் கூறுங் கடவுள் பிருதிவி அப்பு தேயு முதலிய எட்டு வடிவங்களை யுடையவரென்கிறீர். அப்புவும் தேயுவும் ஒருவர்க்கே வடிவமாயிருத்தலின் அவை ஒன்றுடன் ஒன்று மாறுபட நியாயமில்லை. ஆதலால் ஜலத்தைக்கொண்டு தீபமேற்றும். அவ்வாறு விளக்கெரித்தால் உங்கள் சகஸ்ராக்ஷ லிங்கத்தை எல்லாவற்றுக்குங் காரணமென்று நம்புவேன் என்றான்.

அதுகேட்ட யோகியானவர் "தன்ஞ தன்ஞ" என்று சொல்லி சிவத் துரோகியாகிய இவனுடன் இனிப் பேசலாகாதென்று கருதி முன் அவனுடன் வார்த்தை சொல்லிய குற்றநீக்கத்தின் பொருட்டுச் சிவபெருமானைச் சிந்தித்து, அவன் கூறியதற்கு வருந்தி, சிவபெருமானுடைய சந்நிதானத்துக்கு வந்து அவரை நமஸ்கரித்து

எம்பெருமானே! தேவாதி தேவனே! ஈசனே! சகசிராக்ஷதயாநிதியே! வேதத்துக்குப் புறம்பாயுள்ள பௌத்தமதஸ்தனுடைய வார்த்தையால் வருந்துகின்றேன். எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் எங்கும் நிறைந்தவராயும் எல்லாவற்றையுங் காப்பவராயும் அவற்றைத் தன்னிடத்தில் ஒடுக்குபவராயும் உள்ள தேவரீரை இல்லையென்று சொல்லுகின்றார்களே பாவிகள். அந்தத் துஷ்டன் ஜலத்தைக் கொண்டு தீபம் ஏற்றுமென்று சொன்னானே. நான் என்ன செய்வேன். என்னைக் காத்தருளும் காத்தருளும் என்று அழுதுகொண்டு அஞ்சலி செய்து சந்நிதியில் நின்றார்.

அப்பொழுது பத்தவற்சலராகிய சிவபெருமான் அவருடைய பிரார்த்தனைக் கிரங்கி, "கபித்தயோகியே! நீ பயப்படாதே. இன்று சாயங்காலத்தில் இங்குள்ள எல்லாரையுங் கூட்டிவந்து பிரமதீர்த்த நீரினால் தகளிகளை நிரப்பி அவற்றில் திரியிட்டுத் தீபமேற்றுக" என்று அசரீரியாற் கூறியருள; அது கேட்ட யோகியானவர் கவலை நீங்கி மனமகிழ்ந்து அன்று சாயங்காலம் எல்லாரையும் அழைக்க; ஜலதீபம் ஏற்றும் அதிசயத்தைப் பார்த்தற் பொருட்டுச் சண்டாளர் பரியந்தம் யாவரும் வந்து கூட, அவர் சண்டாளர்களை விரட்ட நினைத்தார். அப்பொழுது சிவாஞ்ஞையால் அச் சண்டாளர்களெல்லாம் கரியகண்டமும் நான்கு கைகளும் உடையவர்களாய்த் தோன்றினார்கள். அதுகண்ட அவர் ஆச்சரியமடைந்து இச் சண்டாளர்களும் சிவபெருமானிடத்தில் அன்போடு தரிசிக்க வந்தார்களாதலின் சர்வாந்தர்யாமியாயுள்ள சிவபெருமான் இவ்வாறு இவர்களுக்குக் கிருபை செய்து சாரூப்பியங் கொடுத்தருளினாரென்றெண்ணி அங்கு வந்த சனங்களை யழைத்துப் பிரமதீர்த்த ஜலத்தினால் தகளிகளை நிரப்பச் செய்து திரியிட்டுத் தீபமேற்றினார். அவைகள் பெருங்காற்றிலுங் கெடாது பிரகாசித்தன. அது நோக்கி யாவரும் விம்மிதமுற்றுச் சகசிராக்ஷமகேசுவரரைத் தோத்திரம் பண்ணினார்கள். கபித்த யோகியாரைப் பாராட்டினார்கள். தேவர்களெல்லாம் ஆகாயத்திற் கற்பகப்பூமழை பொழிந்தார்கள். பௌத்தர்களெல்லாம் பயந்து வேறு தீவுகளுக்கு ஓடினார்கள். விடியற்காலம் வரை தீபங்களெல்லாம் எரிந்து கொண்டிருந்தன. அதைப் பார்த்துக் கபித்த யோகியார் மனமகிழ்ந்து சிவபெருமானிடத் தன்புமிகுந்து தோத்திரஞ் செய்வாரானார்.

"எவருடைய ஆஞ்ஞையால் ஒன்பது வாசலுள்ள பட்டணத்துள் வாயு சஞ்சரிக்கிறதோ? அப்படிப்பட்ட பார்வதி நாயகராகிய

சகசிராக்ஷமகாதேவரை நமஸ்கரிக்கின்றேன். எவருடைய ஆஞ்ஞையால் அக்கினிதேவன் எல்லாருடைய சரீரத்துள்ளு மிருக்கிருனே? அப்படிப்பட்ட கைலாசநாயகி நாதராகிய மகேசுவரரை நமஸ்கரிக்கின்றேன். எவருடைய ஆஞ்ஞையால் சமுத்திர மத்தியில் வடவாமுகாக்கினி சொலிக்கிறதோ அப்படிப்பட்ட அபராத சமேசுவரரென்னும் சகசிராக்ஷ மகேசுவரரை நமஸ்கரிக்கின்றேன். எவருடைய ஆஞ்ஞையால் கன்மங்களின் பலன் கர்த்தாவை அநுசரிக்கின்றதோ அப்படிப்பட்ட சேஷபிலத்தில் முளைத்தெழுந்த மகாதேவரை நமஸ்கரிக்கின்றேன். ஆதாரமில்லாத இந்த வுலகம் ஆதாரமுள்ளதுபோல எவரால் அசையாமலிருக்கின்றதோ அப்படிப்பட்ட க்ஷமாவதி மனோகரராகிய மகாதேவரை நமஸ்கரிக்கின்றேன். மணி மந்திரம் ஔஷதம் என்னு மூன்றிலும் எவருடைய ஆஞ்ஞையால் சத்தி விளங்குகின்றதோ அப்படிப்பட்ட அபராத சமேசுவரரென்னும் மகாதேவரை நமஸ்கரிக்கின்றேன். ஒன்றுக்கொன்று மாறுபட்ட இயல்பினையுடைய பூதங்கள் எவருடைய ஆஞ்ஞையால் சேர்ந்திருக்கின்றனவோ அப்படிப்பட்ட எல்லாந் தன்வடிவாகவுள்ள சசிராக்ஷமகாதேவரை நமஸ்கரிக்கின்றேன். எவருடைய முடியையும் அடியையும் பிரம விட்டுணுக்கள் அறியமுடியவில்லையோ அப்படிப்பட்ட கார்முகபுரேசராகிய மகேசுவரரை நமஸ்கரிக்கின்றேன்" என்று தோத்திரஞ் செய்யச், சிவபெருமான் அதற்கு மகிழ்ந்து, "யோகியே! இந்தவனம் உன்பெயரால் விளங்குக. நாம் உன் பெயரால் விளங்கும் இவ்வனத்துக்கு ஈசரென்னும் பெயரோடு விளங்குகின்றோம். உனக்குத் தேகாந்தத்திலே சாயுச்சியபதவி தந்தருளுகின்றோம் என்று வரங்கொடுத்து அந்தர்த்தானமானார். இந்த வைபவத்தைப் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் சிவபெருமான் கிருபை செய்தருளுவர்.

கபித்தயோகிச் சருக்கம் முற்றிற்று.

# அக்கினி சருமச் சருக்கம்.

முனிவர்களே! சிவபத்தியினலே சீவர்களுக்கு மோக்ஷங் கிடைக்கும். உயிர்க்கு அழிவுவரினும் சிவத்துரோகிகளைப் பார்ப்பதில்லையென்று எவன் வைராக்கியத்துடன் இருக்கின்றுனே அவன் முத்தியடைவான் என்பதற்கு ஐயமில்லை. அதற்கு அக்கினி சருமச்

சரித்திரம் என ஒன்று சொல்லுகின்றோம். மூவுலகங்களிலும் புகழ் நிறைந்ததாயும் பூவுலகத்துக்கு அலங்காரமாயும் காளாகருவனமென ஒரு சிவக்ஷேத்திரம் உள்ளது. அங்கு அபாரத சகேசுவரர் எழுந்தருளியிருக்கின்றார். அவர் குக்குடநர்த்தனம் மயூரநர்த்தனம் அன்ன நர்த்தனம் மண்டூகநர்த்தனம் பறுமநர்த்தன முதலிய நர்த்தனங்களை அன்பர்களுக்கு அநுக்கிரகித்தற் பொருட்டுச் செய்தருளுகின்றார். அந்தத் தலத்தில் அக்கினிசருமர் என்று ஒரு பிராமணர் இருந்தார். அவர் சிவபத்த சிகாமணியாயுள்ளவர். பிரயோசனங் கருதிச் சிவ பெருமானை வணங்குகின்றவர்களையும் சிவத்துரோகிகளென்றே கருது பவர். சிவத்துரோகிகள் யாவராயிருந்தாலும் இதனால் வெட்டுவே னென்று துணிந்து எப்பொழுதும் ஒரு வாளைக்கையிற் கொண்டு அதனால் எங்கே கண்டாலும் அவர்களைச் சிறிதும் அச்சமின்றி வெட்டிவிடுவா ராதலின் அப்பிராமணரைக் கண்டால்அவர்க ளெல் லாம் அஞ்சுவார்கள். அவர் சிவபெருமானிடத்துப் பதிந்த மனசுடன் சகசிராக்ஷ மகேசுவரருடைய சிவாலயத்தில் திருப்பணி செய்து கொண்டிருக்கும் நாளிலே ஒரு நாள் இரவு கொசுகு கடித்தலால் நித்திரையின்றிக் கோயில்வாயிலிற் படுத்திருந்தார். அப்பொழுது சிவபெருமான் நீல கண்டமும் பளிங்குபோன்ற திருமேனியும் கங் கையுஞ் சந்திரனுந் தரித்த சடையும் உடையவராய்த் திருவடிகள் பூமியிற் பொருந்த நடந்து வந்தருளினர். உடனே அக்கினிசருமர் அன்புமிகுந்து பரபரப்புடன் எழுந்து ஹா ஹா என்று கதறி அழுது அஞ்சலிசெய்து நாத்தழுதழுப்ப, சருவலோகேசனே! இவ் விராத்திரியில் தேவரீர் இடபவாகனமில்லாமல் திருவடிகளால் நடந்து வருவது தக்கதன்று. மார்க்கமோ எனின் முட்களும் கற்களும் நிரம்பி மிக மேடுபள்ளமா யிருக்கிறதென்று கூறச், சிவபெருமான் "அன்பனே! நாம் அடியார்கள் விரும்பிய வரத்தைக் கொடுப்போம். சிலர் இகலோக சுகத்தில் ஆசையுற்று நம்மைத் தியானிக்கிறார்கள். அவர்களிருக்குமிடம் போய் அவர்களின் விருப்பத்தை முடித்தற் பொருட்டே வந்தருளினேம்" என்று கூறி மறைந்தருளினர். அது கேட்ட அக்கினி சருமர் அவ்வாறு தியானஞ் செய்கின்ற சிவபத்தர் களிடத்துஅதிக கோபங்கொண்டு இவ்வாலயத்தில் அனவரத சாந் நித்தியராய் எழுந்தருளி யிருக்கின்ற சகசிராக்ஷ சிவலிங்கப் பெரு மானை இங்கே வந்து பிரார்த்திப்பவர்களே சிறந்தவர்கள், இதுவன்றி வேறு எங்கேயாவது இருந்து பிரார்த்திப்பவர்களெல்லாம் சிவத் துரோகிகள். எவ்வாறெனின், அவர்கள் இருக்கு மிடத்திருந்து பிரார்த்திப்ப, அவர்களுக்கு வரங்கொடுத்தற் பொருட்டு ஈசுவரன்

கால்நடையாய்ச் செல்லுகின்றார். அவரைக் காலால் நடந்துவரச் செய்கின்றமையின் அவர்கள் சிவாபராதிகளே, அவர்களைக் கண்டால் உடனே வெட்டிவிடுவேனென்று உண்மையுணராத பத்தியுடன் காலங்கழித்து வந்தார். அவரைப் பார்க்கு மனிதர்களெல்லாம் கொலை செய்பவரென்று பயந்தார்கள்.

முனிவர்களே! அக்கினிசருமர் சிவபெருமான் எங்கும் நிறைந்தவரென்று தெரிந்துகொள்ளாமல் சிவாலயத்திலேயே இருப்பவரென்று நினைத்து உண்மையுணராத அன்பினராய்ச் சிவத்தியானத்துடன் சிவாலயத்திற் றிருப்பணி செய்துகொண்டு சிவாபராதிகளைக் கொல்வேனென்று வெளிப்படையாய்க் கூறி வந்தார். அவ்வார்த்தை கேட்ட சிவனடியார்களெல்லாம் அஞ்சிச் சிவபெருமானைப் பிரார்த்திக்கச், சிவபெருமான் பத்தர்களுக்கு உபத்திரவஞ் செய்யும் அவ்வக்கினிசருமரிடத்திற் கோபங்கொண்டு பார்த்தருள, அப்பார்வை அவர் சரீரத்தில் மிகுந்த சுரநோயை உண்டுபண்ண, அதனாற் றுன்பமுற்ற அக்கினிசருமர் தமக்குச் சுரநோய் நீங்குதற் பொருட்டுச் சகசிராக்ஷமகேசுவரரை அன்போடு பிரார்த்தித்தார். அப்பொழுது க்ஷமாவதிதேவியாரும் அவர்பாற் கருணை கூர்ந்து அவருக்கு அநுக்கிரகித்தற்பொருட்டு வேண்டிக்கொள்ளச், சிவபெருமான் அன்பனே! நீ பன்னிரண்டு சிவனடியார்களை அன்போடு பூசித்து வந்தால் அவர்கள் உன் சரீரத்தைக் கையாற் பரிசிக்கும் பொழுது உனக்கு வியாதி நீங்கும். அவர்களை அவமதிக்கின் வியாதி நீங்கமாட்டாது என்று அசரீரியாற் கூறியருளினர். அதுகேட்ட அக்கினிசருமர் சிவனடியார்கள் வரவை எதிர்பார்த்திருக்க, மறுநாள் சிவபெருமானுடைய ஆஞ்ஞையின்படி சிவனடியார்கள் அங்கு வந்தார்கள். அவர்களைக் கண்டு அக்கினிசருமருக்கு அவர் மனைவியார் தெரிவிக்க, அவர் அவர்களின் பெயரைக் கேட்டவுடன் மிகக்கோபங் கொண்டு, உதடு துடிக்க, இவர்களோ சிவபத்தர்கள். இவர்களை எனக்கு முன்பே தெரியும். இவர்கள் ஈசுவரனுக்கு உபத்திரவஞ் செய்கிற சிவத்துரோகிகளன்றோ. இவர்கள் இங்கு வரவேண்டாம். இந்தத் துரோகிகளுடைய பாதத்தை நான் தொட்டுப் பூசிக்கமாட்டேன். இவர்கள் போகக் கடவர்கள். போகாவிடில் இந்த வாளினல் இவர்களை வெட்டுவேன். போகச் சொல் என்றார். அது கேட்ட அவர்மனைவி தன் கணவனுக்கு எவ்விதமாவது வியாதி நீங்க வேண்டுமென்ற எண்ணத்துடன் அவரை ஒரு வஸ்திரத்தினல் மூடிவிட்டு வெளியே வந்து சிவனடியார்களுக்கு அருக்கிய பாத்தியங் கொடுத்து விதிப்படி

பூசித்துப், பெரியோர்களே! நீங்கள் சிவசொரூபிகளன்றோ. நீங்கள் உள்ளே எழுந்தருளி என் கணவருக்கு விபூதி கொடுத்து அவர் நோயை நீக்கியருளவேண்டு மென்று பிரார்த்திக்க, அது கேட்ட சிவ னடியார்கள் உள்ளே சென்று முன் சிவபெருமானாற் கொடுக்கப் பட்ட விபூதியை அவர் ஆஞ்ஞையின்படி அக்கினிசருமரின் உடம் பிற் போட்டார்கள். அப்பொழுது அவர் எழுந்து அடியார்களை நோக்கி மிகக் கோபங்கொண்டு வாளால் அவர்களைக் கொல்லுவதற் குப் பிரயத்தனப்பட்டார். உடனே சிவபெருமான் இடபாரூடராய் க்ஷமாவதி தேவியாரோடு தோன்றியருளி அவருடைய அன்பின் மிகுதியை நோக்கி வியந்து, அன்பனே! ஆராயாமல் ஒன்றையுஞ் செய்யாதே. உன் அன்பின் பெருக்கத்திற்கு நாம் மகிழ்ந்தோம். நம்முடைய அடியார்கள் விரும்பியவற்றை அவர்களுக்குக் கொடுப் போம். அவர்கள் நம்மைச் சருவ வியாபகராகத் தியானித்து உபாசிக் கிறார்கள். நீயோ இவ்வாலயத்தில்மாத்திரம் இருப்பதாகத்தியானித்து உபாசிக்கிறாய். அவர்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுப்போம். உனக் கும் மோக்ஷத்தைக் கொடுப்போம். நம்முடைய சந்நிதானத்தில் லக்ஷம் நெய்விளக்கிட்டவனுக்கு உள்ள பலனை உனக்கும் இவ்வடி யார்களுக்கும் கொடுக்கிறோம். நீ நம்பொருட்டு மனத்தில் வருந்த வேண்டாமென் றருளிச் செய்து அக்கினிசருமரையும் அவர் மனைவி யையும் அங்கு வந்த சிவனடியார்களையும் இடபவாகனத்தில் ஏற் றிக்கொண்டு அந்தர்த்தான மானார். அவர்களெல்லாம் சிவசாயுச் சியம் பெற்றார்கள். இதை ஞானத்துடனாவது ஞானமின்றியாவது படித்தவர்களுங் கேட்டவர்களும் இஷ்ட சித்திகளை யெல்லாம் பெறு வார்கள்.

அக்கினிசருமச் சருக்கம் முற்றிற்று.



## சோமாநுக்கிரகச் சருக்கம்.

முனிவர்களே! எல்லாப் பாவங்களையும் நீக்குவதாயும் எல்லா வியாதிகளையுந் தொலைப்பதாயு முள்ள சோமாநுக்கிரகமென்னுங் கதையைச் சொல்லுகின்றோம். முந்தின கற்பத்தில் அத்திரிமுனிவ ருடைய கண்ணிற் றோன்றினவனும், மிகுந்த அறிவுள்ளவனும், இலக்குமிக்குச் சகோதரனும், ஸ்ரீமானும், அழகுக்கு இருப்பிட மாயும் சோடசகலைகள் நிறைந்தவனும், அமுதமய சரீரமுடையவ

ளுயும் உள்ள சந்திரன் ஆசாரியனுற் புண்ணிய பாவங்களை யுணர்ந் திருந்தும் யௌவன மதத்தினுல் சிவபத்தி யற்றுக் காமம் அதிகரித்துக் குருபத்தினி சங்கமத்தில் ஆசை மிகுந்து சிவபூசையும் மறந்து தாரை என்னும் அவளுடன் இன்பம் அநுபவித்திருந்தான். அம் மகர பாதகத்தினுல் அவனுக்கு க்ஷயரோகம் உண்டாக; அதனுல் அவன் வருந்தி, நான் என்ன செய்வேன். எங்கே போவேன். எவ்வாறு இவ்வியாதி நீங்கும் என்னுங் கவலையுடன் அத்திரி முதலிய முனிவரர்கள் இருக்குமிடத்துக்குப் போய், அவர்களை வணங்கி யெழுந்து நின்று, தனக்கு வியாதி நீங்கும் நெறியாதென்று பிரார்த்தித்தான். அதுகேட்ட முனிவர்கள் அவன் பிரார்த்தனைக் கிரங்கி ஒருவரோடொருவர் உசாவி அத்திரி முனிவரைச் சொல்லும்படி வேண்டினுர்கள். அவர் ஞான நோக்கால் சந்திரனுடைய பாவத்தை யறிந்து சகசிராக்ஷமகேசுவரனைத் தியானித்துச் சந்திரனை நோக்கிக், குழந்தாய்! நீ சிவபூசையை மறந்து யௌவன மதத்தினுல் காம மயக்கமுற்றுக் குருபத்தினியாகிய தாரையுடன் புணர்ந்தாயாகலின் உனக்கு க்ஷயரோகம் உண்டாயிற்று. சிவாபராதமே சீவர்களின் துக்கங்களுக்கு ஆதிகாரணம். அது தீர்ந்தால் வியாதியுந் தீரும். அதற்குத் தகுந்த முயற்சியொன்றைச் சொல்லுகின்றேம் "பூமியிலே காளாகருவனமென்று புராதன சிவஸ்தலம் ஒன்றுண்டு. அங்கே அபராதசகேசரென்னும் புராதனலிங்கமூர்த்தி எழுந்தருளி யிருக்கின்றுர். நீ அங்கே போய் அச் சிவலிங்கப் பெருமானுக்குச் சதருத்திர விதிப்படி அபிஷேகஞ் செய்து பூசிக்கக் கடவாய் உனக்கு வியாதி நீங்கும்" என்றுர்.

அதுகேட்ட சந்திரன் மிகுந்த வேகத்துடன் பிதாவாகிய அத்திரி முனிவரை நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டு காளாகருவனம்போய்ப் பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அபராத சகேசுவரரை நமஸ்கரித்து விதிப்படி அபிஷேகஞ் செய்து பூசித்து அபராதங்களை நீக்குவதாகிய அஷ்டோத்தரசத நாமங்களால் அருச்சனை பண்ணிச் சந்நிதானத்தில் நின்று, பிரபுவே! எளியேன் அறியாமையினுல் தேவரீர்க்கு அநேக குற்றங்களைச் செய்தேன். தேவரீர் என்னை இவனும் ஒரு அடியவனென நினைத்து அவற்றை யெல்லாம் பொறுத்தருள வேண்டும் என்று பிரார்த்திக்கச், சிவபெருமான் கிருபை கூர்ந்து சந்திரனே! நீ அன்போடு நம்மைப் பூசித்தமையால் உனது குற்றங்களைப் பொறுத்தருளினேம். நீ பிதிர் தேவதைகளுக்குத் திருத்தி செய்பவனுகக் கடவாய். அவர்கள் உன் மண்டலத்திலேயே வசிக்குக. உனது கலைகளின் குறைவுகாலம் கிருஷ்ணபக்ஷ மென்று

பெயர் பெறும். அப்பொழுது பிதிர்களுக்குத் திருத்தி செய்பவனுவாய். அப்பக்ஷத்தில் கடைசி நாளாகிய அமாவாஸ்ய அவர்களுக்கு விசேஷ திருத்தியைக் கொடுக்கக் கடவது. பின்பு பௌர்ணிமைவரை உனக்கு விருத்தியுண்டாகுக. அப்போது பதினறு கலைகளும் நிறைந்தவனுய்த் தேவர்களுக்குத் திருத்தி செய்வாய். நீ பராசத்தியிடத்திற் பத்தியுடன் திருவாரூருக்குப் போய் அங்கே உன் பாவம் நீங்குதற் பொருட்டு உன் பேரால் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசிப்பா யென்று ஆஞ்ஞாபித்தார்.

உடனே சந்திரன் மகிழ்ச்சியுற்று அபராதசஹேசுவரரை மீட்டும் நமஸ்கரித்து அன்போடு துதித்துத் திருவாரூருக்குப்போய் வன்மீகநாதரையும் தியாகராஜ மூர்த்தியையும் கமலாம்பிகையையும் வணங்கிச் சிவாகமவிதிப்படி சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து சோம மகேசுவரர் என்று பெயரிட்டுச் சோமமகேசுவரியென அம்பிகையையும் பிரதிஷ்டைசெய்து ஆவணிமாசம் திங்கட்கிழமையில் வெண்சந்தனமும் வெண்மலருங்கொண்டு பூசித்துச் சுத்தான்ன நிவேதனம்பண்ணி அபராத நிவாரகங்களாகிய அநேக தோத்திரங்களால் துதிக்கச் சோம மகேசுவரர் அவனுக்கு எதிரேதோன்றி, நமஸ்கரித்த அவனை நோக்கிச் சந்திரனே! நாம் அபராத சஹேசரென்னும் பெயருடன் காளாகருவனத்திலும் வன்மீக நாதரென்னும் பெயருடன் இந்தத்தலத்திலும் வீற்றிருக்கின்றோம் உனது தோத்திரங்களால் தோன்றியருளினேம். நீ விரும்பிய வரத்தைத் தருகின்றோம். நீ நம்பாற் செய்த அன்பின் விசேடத்தால் உனக்குள்ள வியாதிகளெல்லாம் நீங்கிப் பதினறு கலைகளும் நிறைந்து ஒஷதித் தலைவனென்னும் பெயர் பெறுவாய். அன்றியும் உலகத்திற் பிராமாணியம் உன் அதீனமாக இருக்குக. நீ பிராமணர்களுக்கு அரசனுக இருக்கக்கடவாய். நீ லளிதா பரமேசுவரியை விதிப்படி பூசைசெய்வாய். அவள் உன் மண்டலத்தில் மனமகிழ்ந்து வசிப்பாள். லளிதா பரமேசுவரியை உன் மண்டலத்தி லிருப்பவளாகத் தியானிப்பவனுக்கு எல்லாச் சித்திகளும் உண்டாகுமென்றருளிச்செய்து மறைந்தருளினர். சந்திரன் உடனே வியாதிநீங்கிச் சிவபெருமானை மீட்டும் வணங்கி லளிதா தேவியைத் தியானஞ்செய்து அதனல் இப்பொழுதும் எல்லாச்சீவர்களுக்கும் இன்பங்கொடுப்பவனுக ஆகாயத்தில் விளங்குகிறன். இக்கதையைக் கேட்டவர்களும் படித்தவர்களும் இஷ்டசித்திகளையெல்லாம் அடைவார்கள்.

**சோமாநுக்கிரகச் சருக்கம் முற்றிற்று**



# இந்திராபிடேகச் சருக்கம்.

சௌனகாதி முனிவர்கள் வினவுகின்றார்கள். சகல சாத்திரங் களையும் அறிந்த புத்திமானாகிய சூதமுனிவரே! காளாகருவனத்தில் வீற்றிருக்கும் சகசிராக்ஷ மகேசருடைய உற்சவ முதலியவற்றின் விதிகளையும் ஆதிவிடங்க மூர்த்தியினுடைய உற்சவ முதலியவற்றின் விதிகளையும் கேட்டோம். இனி நித்திய நைமித்திகங்களாகிய அபி டேக விதியைக் கேட்க விரும்புகின்றோம். அதனையுஞ் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கச் சூதமுனிவர் மேக முழக்கம்போற் கம்பீரமான வாக்கினால் நன்று சொல்லத் தொடங்கினார்.

முனிவர்களே! முன்னொருகாலத்தில் தேவேந்திரன் அசுரர்க ளாற் றுன்பமடைந்து அவர்களை வெல்ல விரும்பிச் சுவேதத்துவீபம் போய் விஷ்ணுமூர்த்தியை வணங்கித் துதித்துத் தான்வந்த காரியத் தைக்கூறிப் பிரார்த்திக்க, உடனே அவர் பிரசன்னராகி இந்திரனோடு வந்து அசுரர்களுடன் யுத்தஞ்செய்து வென்று இந்திரனுக்கு வெற்றி யைக்கொடுத்து மறைந்தருளினார். அப்பொழுது இந்திரன் மன மகிழ்ந்து தன் மனைவியாகிய இந்திராணியுடன் திருப்பாற்கடலை யடைந்து விஷ்ணுவை வணங்கி, தேவரே! சருவலோக நாதரே! அன்பர்களின் விருப்பத்தைக் கொடுப்பவரே! சகல சீவர்களின் இரு தய தாமரையில் வசிப்பவரே! சச்சிதானந்த சொரூபியே! அடியேன் எப்பொழுதும் அசுரர்களாற் பீடிக்கப்பட்டுத் துன்ப மநுபவித்து வருகிறேன். இனியேனும் அத்துன்பம் வாராதபடி தேவரீர் அனுக் கிரகஞ் செய்யவேண்டும். கருடனை வாகனமாகக் கொண்ட பிரபு வே! உமக்கு நமஸ்காரம் என்று பிரார்த்திக்க; விஷ்ணுமூர்த்தி உத் தான ஏகாதசியாகிய அன்று தினம் சேஷசயத்தினின்றும் எழுந்து, இந்திரனே! அஞ்சவேண்டாம். நீ அசுரரால் நேரும் துன்பத்தி னின்று நீங்கிக் கவலையின்றி இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டு சுகமாயிருக்கத் தகுந்த உபாயத்தைச் சொல்லுகின்றோம். பூலோ கத்தில் காளாகருவனமென்று ஒரு உத்தமதலம் இருக்கின்றது. அங்கே அபராத சகேசுவரர் சாந்நித்தியஞ் செய்தருளுகின்றார். அன்றி ஆதிவிடங்கரென்னும் பெயருடன் சோமாஸ்கந்த மூர்த்தியும் விளங்குகின்றார். சிவாபராதமே சீவர்களின் துன்பத்துக்குக் கார ணம். அதுவும் அபராத சகேசப் பெருமானுடைய வழிபாட்டால் ஒழிந்துவிடும். நீ சீக்கிரம் அங்கேபோய் அபராத சகேசருக்கும்

ஆதிவிடங்கேசருக்கும் விதிப்படி அபிடேகம் பூசைமுதலியவை களைச் செய்து சிவாபராதம் நீங்கவேண்டுமென்று பிரார்த்தித்தால் அவர் மகிழ்ந்து உனக்கு அநுக்கிரகஞ் செய்தருளுவர் என்றுகூறி அந்தர்த்தானமானார்.

அதுகேட்ட இந்திரன் தன்மனைவியோடு அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, எல்லாப்பாவங்களையு நீக்கும் காளாகருவனத்தையடைந்து, வெள்ளாற்றில் ஸ்நானஞ்செய்து, சிவாலயத்தையடைந்து, துவாரபாலகரையும் திருநந்திதேவரையும் பூசித்து அநுமதிபெற்று உள்ளேசென்று அபராதசகேசருக்கும் ஆதிவிடங்கேசருக்கும் நிருமாலியத்தைக்களைந்து, கவசத்திற் சொல்லியவிதிப்படி தியானஞ் செய்து, சிவபூஜாத்திரவியங்களைச் சேர்த்துவைத்துக் கொண்டு, வெள்ளாற்றினின்று வாத்தியமுழங்க வெள்ளையானையின்மேல் அபிஷேகசலங் கொண்டுவந்து பன்னிரண்டு கும்பங்களும் பதினொருசங்கங்களும் வைத்துச் சாமானியார்க்கிய கலசம் தாபித்துப், பின் விசேடார்க்கியகலசந் தாபித்து, எலுமிச்சம்பழம் பதினாயிரம், வாழைப்பழம் பன்னீராயிரம், பாற்குடம் எட்டு, தயிர்க்குடம் எழு, இளநீர்க்குடம் ஆறு, தேன்குடம் நான்கு, நெய்க்குடம் மூன்று, சருக்கரைபாரம் ஐந்து. நல்லெண்ணெய்க்குடம் இரண்டு, பலவகை ரசமுள்ள பழங்கள், பஞ்சாமிர்தமுதலிய திரவியங்கள், பச்சைக்கர்ப்பூரமுங் குங்குமப்பூவுங்கலந்த சந்தனம் என்னும் இவைகளைக்கொண்டு விதிப்படி அபிஷேகஞ் செய்து ஏகாதசருத்திர செபத்துடன் கும்பங்களிலும் சங்கங்களிலும் உள்ள தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்து, ஈரத்தைத்துவட்டி அபராதசகேசருக்கு வஸ்திரஞ்சாத்திப், பூமாலைகளால் அலங்கரித்து, ஆதிவிடங்கேசருக்கும் சதுரவடிவாயுள்ள பூவஸ்திரம் நான்கும் அர்த்தசந்திரவடிவாயுள்ள சலவஸ்திரம் ஐந்தும் முக்கோணவடிவாயுள்ள அக்கினிவஸ்திரம் ஆறும் அறுகோணவடிவாயுள்ள வாயுவஸ்திரம் ஐந்தும் வட்டவடிவாயுள்ள ஆகாயவஸ்திரம் மூன்றும் ஆக இருபத்துமூன்று வஸ்திரங்களையுஞ் சிவாகமத்திற் கூறியபடி சாத்திச், செங்கழுநீர்ப்பூமாலை, வெள்ளைச செவ்வந்திப்பூமாலை, வாசனையுள்ளபலவகைப்பூமாலை; வில்வபத்திர மாலை என்னும் இவைகளால் அலங்கரித்து அம்மூர்த்திகள் இருவரையும் பூசித்துத் தூபதீபங்காட்டிச் சருக்கரையன்னம் சுத்தான்

னம் அபூபமுதலியவற்றை நிவேதித்து, மகாதீபாராதனஞ்செய்து கர்ப்பூரதீபங்காட்டிப் புஷ்பாஞ்சலிசெய்து, மூன்றுதரம் பிரதக்ஷிணம் வந்து ஐந்துதரம் நமஸ்கரித்து, அடியேன்செய்த அபராதங்களைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துத் திருவருள் பெற்றுக்கொண்டு தேவலோகம்போய் அசுரபயமின்றி இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண் டிருந்தான்.

இந்திராபிடேகச்சருக்கம் - முற்றிற்று.



## விடங்ககபாலவன ரகசியச் சருக்கம்.

முனிவர்களே! இன்னொரு இரகசியத்தைச் சொல்லுகின்றோம். ஆதிவிடங்கேசருக்கு வஸ்திரஞ் சாத்தும் பொழுது கண்களைமூடிக் கொண்டே சாத்தல் வேண்டும். அவருடைய திருமுகத்தைத்தவிர மற்ற அவயவங்களை ஞானக்கண்ணாலேயே தரிசிக்க வேண்டும். ஊனக்கண்ணாற் பார்க்கலாகாது. மோகத்தினால் எவனாவது பார்த்தால் அவன் கொடுந்துன்பங்களை யநுபவிப்பான். சோமவாரந்தோறும் முன்னுள்ள வஸ்திரங்களைந்து வேறு வஸ்திரஞ் சாத்தல் வேண்டும். கர்ப்பூராலேபனம் நித்தியமுஞ் செயதல்வேண்டும். ஸ்நானம் வஸ்திரஞ்சாத்துதல் என்னுமிவைகளைக் கண்மூடிக்கொண்டே செய்தல் வேண்டும். அன்றியும் அச்சமயம் மகேசுவரனைப் பத்தியோடு தியானஞ்செய்துகொண்டு பெருமூச்சுவிடாமலும் தும்மல் இருமல் இல்லாமலும் இருத்தல்வேண்டும். எவனாவது துர்ப்புத்தியினால் விடங்கேசரின் அவயவங்களைப் புறக்கண்ணாற் பார்த்தால் அவன் சந்தானமற்றுப்போவதுமன்றி அவனுடைய பிதிர்களும் அதோகதியடைவார்கள்.

பத்மாசுரன் அவ்விடங்கேசருடைய அவயவங்களைப் பார்த்தமையால் தன் வமிசத்தாருடன் நரகமடைந்தான். நளச்சக்கரவர்த்தி தன் ஆசாரியர் தடுத்தும் கேளாமல் அவருடைய அவயவங்களைப் பார்த்தமையால் இராச்சியமிழந்து தமயந்தியைப் பிரிந்து துன்பமடைந்து அப்பெருமான் திருவருளாலேயே இராச்சியம் பெற்றான். இராவணன் சிவபத்தனாயிருந்தும் மதுபானத்தால் மதங்கொண்டு அபிஷேககாலத்தில் அவருடைய அவயவங்களைப் பார்த்தமையால் புத்திரபௌத்திரர்களுடன் ஸ்ரீராமபிரானால் நாசமடைந்தான். சந்திர

வமிசத்திற் பிறந்து காமேசிக்குப் பிராணநாயகனாகிய பத்மராஜன் யௌவனமதத்தாற் கர்வமடைந்து அவருடைய அவயவங்களைப் பார்த்தமையால் தன்னுடைய இராச்சியத்தில் வறுமையுண்டாகி மண்மாரிபெய்ய, மிகுந்ததுன்பமடைந்து விசுவாமித்திரமுனிவரால் தனது சிவாபராதத்தைத் தெரிந்துகொண்டு காளாகருவனம் வந்து ஆதிவிடங்கத்தியாகேசருக்கு அபிஷேகம் அருச்சனைமுதலியவற்றைச்செய்து அவருடைய கிருபையால் மீட்டும் இராச்சியசுகம் பெற்றான். ஆதலால் எவ்வாற்றாலும் தியாகராஜப்பெருமானுடைய திருமுகம் ஒன்றுமே நித்தியமுந் தரிசிக்கத் தகுந்தது. ஒருசமயத்தில் மாத்திரம் திருவடியைத் தரிசிக்கலாம். இவ்விரகசியத்தை உங்கள் பொருட்டுச் சொன்னோம்.

முன் இக்காளாகருவனத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தி தியாகராஜப்பெருமானைப் பிரதிஷ்டைபண்ணி அன்போடு பூசித்துத் தன் மகனாகிய அக்கினிவருணனால் வைகாசியுற்சவஞ் செய்வித்து அச்சிவ புண்ணியத்தாற் சாயுச்சியபதவியைப்பெற்றான். அப்பெருமானைச் சாயங்காலத்தில் தரிசனஞ் செய்தால் எல்லாப பாவங்களும் நீங்கும். அவருக்கு உஷக்காலத்தில் அன்போடு பசுவின்பால் நிவேதனஞ் செய்தால் இஷ்டசித்திகளெல்லாம் உண்டாகும். பின்பு அவரைப் பிராதக்காலத்திலும் மத்தியானகாலத்திலும் சாயங்காலத்திலும் விசேஷமாகப் பூசிக்கவேண்டும். பின்பு புனர்ப்பூஜை செய்யவேண்டும் பின்பு அர்த்தசாமத்திற் பூசிக்கவேண்டும். இவ்வாறு ஆறுகாலபூசை செய்யவேண்டும். அவ்வாறுகாலத்திலும் அன்போடு அப்பெருமானைத் தரிசிக்கின்றவன் இவ்வுலகத்திற் பத்தினி புத்திர பௌத்திர சம்பத்துக்களுடன் உயர்ந்தபோகங்களையனுபவித்துத் தேகாந்தத்திலே சிவலோகத்தையடைவான்.

இன்னொரு இரகசியமுஞ் சொல்லுகின்றோம். இந்தக்ஷேத்திரத்திற்குக் கபாலவனமென்று பிரசித்தியிருக்கிறதன்றோ. அதற்கு இன்னொரு காரணமுண்டு. சிரத்தையுடன் கேளுங்கள். முன் கூறியபடி சிவபெருமான் பிரமதேவருடைய ஒருதலையைக்கிள்ளி அக்கபாலத்தைக் கையில்தரிக்க அப்பொழுது பிரமதேவர் பயந்து தன்னையடைந்தவர்களுடைய அபராதங்களையெல்லாம் நாசஞ்செய்கின்ற இந்தத்தலத்துக்கு வந்து அபராதசகேசுவரரை நமஸ்கரித்து, "சந்திரனைத் தரித்தவரே! தயாநிதியே! பத்தவற்சலரே! விசுவேசரே! அபராதசகேசுவரரே! அபராதஞ்செய்தவனாகிய அடியேனைக் காத்தருளல்வேண்டும். எனது அபராதத்தால் என்னுடைய ஒருதலை

யைக் கிள்ளியருளினீர். மற்ற நான்கு தலைகளையேனும் இனிக் கிள்ளியருளாமல் அடியேனைக்காத்தருளல்வேண்டுமென்று பிரார்த்திக்கச், சிவபெருமான் கிருபைகூர்ந்து, பிரமனே! நீ இந்த க்ஷேத்திரத்தில் தலவிருக்ஷத்தின் அடியிலிருந்து தவஞ்செய்வாயென்று ஆஞ்ஞாபித்தருளினார். அதுகேட்ட பிரமதேவர் மனமகிழ்ந்து, தலவிருக்ஷமாகிய பலாமரத்தினடியில் சிவத்தியானஞ் செய்துகொண்டு நூறுவருடம்வரை அருந்தவஞ்செய்யச், சிவபெருமான் அவர் தவத்திற்கிரங்கித் தோன்றியருளிப் பிரமனே! நாம் உனதுதலையைக் கிள்ளிக் கபாலத்தைத் தரித்தபொழுது அதினின்றும் பெருகின இரத்தத்தினால் இந்தப் பலாமரம் விருத்தியடைந்தது. அன்றி உன்னுடைய நான்குதலைகளையுங் காத்துக்கொள்ளும் பொருட்டு இந்த மரத்தினடியிலிருந்து நீதவஞ்செய்தமையால் உனது தலைகள் காக்கப்பட்டன. உனதுதலைகளைக் காத்த இவ்விருக்ஷத்துக்கு இதுமுதல் கபாலவிருக்ஷமென்று பெயர்விளங்குக. (கபாலம்-தலையைக் காப்பது) இன்னும் லளிதா பரமேசுவரியின் பரிபூரணகிருபையே இவ்விருக்ஷரூபமாய் விளங்குகின்றது. அவள் காதிவித்தையென்னு மந்திரத்தினாலேயே எல்லா உலகங்களையுங் காத்துவருகின்றாள். இவ்விருக்ஷம் ஸ்ரீவித்தியாரூபமாகலானும் இதற்குக் கபாலவிருக்ஷமென்று பெயர். (கபாலம்—காதிவித்தையினாற் பரிபாலிப்பது) இன்னும் கம் என்று பிரமரூபத்துக்குப் பெயராதலின் உபாசகர்களுக்குப் பிரமரூபத்தைக் கொடுத்துக் காத்தலானும் இதற்குக் கபாலவிருக்ஷமென்றுபெயர். இந்தவிருக்ஷத்தினடியிலிருந்து தவஞ்செய்பவனுக்கு அவனுடைய இந்திரியாதிகளால் உண்டாகும் எல்லாப்பாவங்களும் உடனே அழிந்துவிடும். இதன் இலையில் அன்னம் புசித்தவன் பரிசுத்தான்னம் புசித்தவனாவான். இதன் சாகைகளாற் செய்த பாத்திரத்தை ஸ்நான பான முதலியவற்றின்பொருட்டு உபயோகித்தவன் யோகதத்துவங்களையறிந்த ஞானியாவான். நீ செய்த தவத்திற்கு நாம் மனமகிழ்ந்தோம். நீ அச்சமின்றிச் சத்தியலோகஞ் செல்லக்கடவாயென்று அநுக்கிரகஞ்செய்து அந்தர்த்தானமானார். பிரமதேவர் மனமகிழ்ந்து சத்தியலோகம்போய்ச் சேர்ந்தார். முனிவர்களே! அதுமுதல் இந்த க்ஷேத்திரத்திற்குப் பனசாரணியமென்று உலகமெங்கும் பெயர்விளங்குகிறது. இதைச் சிரத்தையோடு படிப்பவன் எல்லாப்பாவங்களு நீங்கிச் சிவபத்தியை அடைவான்.

**விடங்க கபாலவன ரகசியச் சருக்கம்- முற்றிற்று.**



# பிரமராக்கத சன்ம நாசச் சருக்கம்.

முனிவர்களே! காளாகருவனேசருடைய மகிமையைக் கேட்ட மாத்திரத்தில் பிரமராக்கதப் பேய்களுக்கு மோக்ஷங்கிடைத்தமை யைச் சொல்லுகின்றோம். தருமாரணியத்தில் வேத வேதாந்தங்களை யறிந்தவராய்ச் சிவசருமர் என்று ஒரு பிராமணர் இருந்தார். அவர் சிவத்தியானமுள்ளவர். சிவபத்தர்களுள் உத்தமர். எப்பொழுதும் சிவபூசைசெய்வதிலும் சிவசரித்திரங்களைச் சொல்வதிலும் மிகவிருப்ப முள்ளவர். அவர்பாற் சிவசரித்திரங்கேட்டற்கு விரும்பி இரண்டு பிராமணர்கள் வந்தார்கள். அவ்விருவருக்கும் சிவசர்மர் சிவகதை சொல்லிவந்தார். பின் அம்மூவரும் மிகுந்த பத்தியுடன் சிவக்ஷேத்திரயாத்திரை செய்யவிரும்பி ஒவ்வொரு க்ஷேத்திரங்களிலும் சிவ தரிசனஞ் செய்துகொண்டு வருங்காலத்தில் காளாகருவனத்துக்கு வந்து அங்கு ஓர் ஆலமரத்தையும் அதனருகில் ஒரு தாமரைத் தடாகத்தையுங்கண்டு வழிவந்த சிரமத்தோடு பசியுள்ளவர்களாய் அந்தத் தடாகத்தில் ஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு அம்மரத்தடியிற் சமைக்கத் தொடங்கினார்கள். அதில் மூன்று பிரமராக்ஷதர் இருந்தார்கள். அவர்கள் முற்பிறவியில் பஞ்சமகாபாதகங்களைச் செய்தவர்களாயும் பிறரைவஞ்சித்தவர்களாயும், பிறரைத் தூஷித்தவர்களாயும், தாங்கள் அறிந்த கல்வியைப் பொறாமையினாற் பிறருக்குச் சொல்லாதவர்களாயும் தங் காரியமே பெரிதாய் நினைத்தவர்களாயும் உள்ளவர்கள். அப்பாவச்செயல்களால் அடுத்தபிறவியில் இப்பிரமராக்கத வடிவத்தையடைந்த அவர்கள் சமையல்செய்து கொண்டிருக்கும் பிராமணர்களிடத்தில் சந்நியாசவேடம்பூண்டு வந்தார்கள். சந்நியாசிகளின் வருகையை யறிந்த அப்பிராமணர்கள் அவர்களை நமஸ்கரித்துச், சுவாமிகளே! திருவமுது செய்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்து உடன்பாடு பெற்று அவர்களுக்கு அன்னங் கறி முதலியவற்றை மகிழ்ச்சியோடு முதலிற் படைத்தார்கள். அவர்களும் அவ்வுணவின் சுவையைப் புகழ்ந்துகொண்டே புசித்து ஆசமனஞ்செய்து கைகழுவிவிட்டு ஆலமரத்தின் அடியை யடைந்து அப்பிராமணர்களைக் கொல்லுதற்குச் சமயம் பார்த்திருந்தார்கள். அவர்கள் சந்நியாசிகளை வணங்கிக் கொண்டு மிஞ்சிய அன்னத்தைப் புசித்துவிட்டு அச்சந்நியாசிகளுக்குச் சமீபத்தில்வந்து அவர்களுடைய அநுமதிபெற்று உட்கார்ந்தார்கள். பின்பு சிவசர்மர் காளாகருவனத்தில் வீற்றிருக்கும் சகசிராக்ஷமகேசுவரரை மனத்

தில்தியானித்து அந்தத்தல மகிமையைச் சொல்லத்தொடங்கினர். "காளாகருவனேசராயும், பார்வதி காந்தராயும் அபராதசகேசரென்னும் பெயருடையவராயும் உள்ள சகசிராக்ஷ மகேசுவரரை நமஸ்கரிக்கிறேன். கரும்புவில், புஷ்பபாணம், பாசம், அங்குசம் என்னும் இவைகளைத்தரித்தவராயும் கைலாசநாயகியென்னும் பெயருடையவராயும் உள்ள க்ஷமாவதி யம்மையாரை நமஸ்கரிக்கிறேன். சமுசாரமென்னுஞ் சமுத்திரத்தில் முழுகின மனசையுடைய மனிதருககு க்ஷமாவதிதேவியாரின் தியானமே கரையேறுவதற்குபாயம்" என்னும் பொருளமைந்த புராண சுலோகத்தைக் கூறக், கேட்டுக்கொண்டிருந்த சந்நியாசிகளாகிய பிரமராக்கதர்கள் க்ஷமாவதி யென்னுஞ் சத்தமாத்திரத்தாற் பயந்து, சந்நியாச வேடத்தைவிட்டுப், பெருத்த காலும் பெருத்தகையும் ஊசிபோற்சிறுத்த கழுத்தும் உடையராய்ப், பசி தாகத்தால் வருந்தி, தம்மைப் பார்ப்பவர்களெல்லாம் உரோமஞ்சிலிர்த்துப் பயப்படத்தக்க தங்கள் விசுவரூபத்தையடைந்து அம்மரத்தில் ஒளித்துக்கொண்டார்கள். அதைப் பார்த்த பிராமணர்கள் மிகவும் அஞ்சித், தம்மைத் தியானிப்போர்க்கு எல்லாப் பயங்களையும் நீக்கியருளுஞ் சகசிராக்ஷமகேசுவரரையும் கைலாசநாயகியாரையுந் தியானஞ்செய்துகொண்டு சகசிராக்ஷமகேசுவரசரித்திரத்தைப் படனஞ்செய்யத்தொடங்கி, ஆத்தியான் மிகமுதலிய தாபத்திரையங்களால் தபிக்கப்பட்டவர்களாயும் சமுசார சமுத்திரத்தில் முழுகினவர்களாயும் மகாபாதகங்களைச் செய்தவர்களாயும் உள்ள மனிதர்களுக்குச் சருவசித்தியையுந்தருஞ் சகசிராக்ஷமகாதேவத்தியானமே தாரணத்திற்குபாயம். காளாகருவனத்தில் வீற்றிருக்கும் மகாராஞ்ஞியாகிய க்ஷமாவதி தேவியாரை ஒருதரமாவது எவன் பத்தியுடன் நமஸ்கரிக்கின்றானோ அவன் முத்தியடைவான்" என்னும் பொருளமைந்த புராணசுலோகங்களைப் படித்தார்கள். அதுகேட்ட பிரமராக்கதர்மூவரும் காளாகருவனக்ஷேத்திர மகிமையைச் சிரவணஞ்செய்த புண்ணியவிசேடத்தால் அவ்வடிவம் நீங்கித் திவ்வியவடிவம்பெற்று அம் மரத்தினின்றுங் கீழே இறங்கிச் சிறந்த ஞானத்தாற் பாவமற்றவர்களாகிய சிவசர்மர்முதலிய பிராமணர்களை வணங்கினார்கள். அவர்களை நோக்கிச் சிவசர்மர் முதலிய பிராமணர்கள் மிகுந்த ஆச்சரியமடைந்து, "நீங்கள் யார்? உங்களுக்கு என்ன காரணத்தால் முன் இராக்கதவடிவம் வந்தது? இப்பொழுது என்ன புண்ணியத்தால் இந்தத் திவ்விய வடிவங் கிடைத்தது?" என்று கேட்க; அவர்கள் சிவபெருமானைத் தியானித்து அஞ்சலிசெய்துகொண்டு, பிராமணசிரேஷ்டர்களே! நாங்கள் முற்பிறப்பில் வேத

வேதாந்தங்களை யறிந்த பிராமணர்கள். சிநேகருக்கு இரகசியமாய்ப் பிரியமில்லாத காரியத்தைச் செய்தோம். பிறர் செல்வமுதலிய வற்றைக் கண்டு பொறாமை யடைந்தோம். வஞ்சனையுடையோம், பிறர்க்குத் துன்பஞ்செய்தோம். வித்துவான் என்னும் பெயர் நமக்கேயிருக்கவேண்டும். அதனால் நாமே மிகுந்த திரவியங்களைச் சம்பாதிக்கவேண்டுமென்றெண்ணி நாங்கள் கற்ற கல்வியைப் பிறருக்குச் சொல்லமாட்டோம். இவ்வாறு நாங்கள் செய்த பாவங்கள் அளவில்லையாதலின் பிரமராக்கதரூப மடைந்தோம். சிறிது புண்ணியத்தால் இந்தத தலத்தை யடைந்தோம். இராக்கதத் தன்மையால் உங்களைக் கொல்ல நினைத்த சமயத்தில் உங்கள் முகத்திலிருந்து தோன்றிய சிவசரிதமாகிய அமிர்தத்தைப் பருகினேமாதலின் இராக்கதவடிவம் நீங்கித் திவ்வியவடிவம் பெற்றோம். உங்கள் தரிசனத்தினலேயே பாவங்களிலிருந்து விடுபட்டோம். மனிதர்கள் சாதுசங்க தரிசனத்தினாலும் சேர்க்கையினாலும் பாவநீங்கி மேலுலகத்தை யடைவார்கள். ஞானம் பெறுவார்கள் ஆதலின் சாதுசங்கமே மோக்ஷத்திற்குக் காரணம். சாதுசங்கத்தினால் பாவநீங்கி நல்லகதி கிடைக்குமென்பதற்கு நாங்களே திருஷ்டாந்தம். காளாகருவன க்ஷேத்திர சரித்திர சிரவண புண்ணியத்தினல் நாங்கள்விமானத்திலேறிச் சுவர்க்கத்துக்குச் செல்லுகிறோம்" என்றுகூறி அவர்களை வணங்கிக்கொண்டு, தம்பொருட்டு வந்த தேவவிமானத்திலேறிச் சுவர்க்கலோகம் போய்ச் சேர்ந்தார்கள். இவ்வாச்சரியத்தைப் பார்த்த சிவசர்மர் முதலிய பிராமணர்கள் , பரமானந்தமடைந்து சகசிராக்ஷ மகேசுவரரையும் க்ஷமாவதி தேவியாரையும் மிகத்துதித்தார்கள்.

பிரம ராக்கத சன்ம நாசச் சருக்கம் - முற்றிற்று.



# வித்தியாதர மோக்ஷச் சருக்கம்.

முனிவர்களே! க்ஷமாவதி தேவியாரைத் தியானஞ் செய்தால் பெரும்பாவங்களைச் செய்தவனும் மோக்ஷத்தை யடைவான் என்பதிற் சந்தேகமில்லை. அதற்கொரு புராதன சரித்திரஞ் சொல்லுகின்றோம். காளாகருவன க்ஷேத்திரத்தில் வித்தியாதரனென்று ஒரு பிராமணன் இருந்தான். அவன் மகாராஞ்ஞியாயும், நாதப் பிரம சொரூபிணியாயும்; ஏழு சுரங்களென்கிற ஏழு தாதுக்களுடனும்

காந்தார ஷட்ஜக் கிராமமென்கிற பரஜீவபாவத்துடனும் கூடினவரா யும்; பதினைந்தக்ஷரரூபிணியாயும், தூல சூக்கும காரணமென்னும் மூன்று கூடங்களையும் வடிவமாக உடையவராயும் சர்வதத்துவரூப முள்ளவராயும் நாதமத்தியிலிருப்பவராயும் உள்ள ஸ்ரீ சோடசி லளி தாபரமேசுவரி யென்னும் க்ஷமாவதி தேவியாரை நித்தியமும் சங்கி தத்தால் திருத்திசெய்து அவருடைய திருவடித்தாமரைகளில் பத்தி செய்து கொண்டிருந்தான். அவனுடைய மனைவியாகிய ஏமமாலை யென்பவளும் தன் நாயகனோடு தினமும் க்ஷமாவதி தேவியாரை வழிபட்டுவந்தாள். அவ்விருவரும் வேறு விருப்பமில்லாமல் மோ க்ஷம் ஒன்றையே விரும்பி, "காமேசுரருக்குச் சுகத்தைச் செய்பவ ராயும் ஹ்ரீங்கார மந்திரப்பொருளாயும் மோக்ஷத்தைக் கொடுப்பவ ராயும் உள்ள கைலாசநாயகியே! உமக்கு நமஸ்காரமென்று தோத்தி ரஞ் செய்ததைக் கேட்டு அம்மையார் திருவுள்ளமகிழ்ந்து தமது பிராணநாயகராகிய சகசிராக்ஷ மகேசுவரரை நோக்கி மந்தகாச முகத் துடன், "சுவாமீ! எனது பாதங்களில் பத்தியுள்ளவர்களுக்குச் சர் வாபீஷ்டத்தையுங் கொடுக்கின்ற தேவரீர் இவ்விருவருக்கும் மோ க்ஷத்தைக் கொடுத்தருளல் வேண்டும். உமக்கு நமஸ்காரமென்று பிரார்த்திக்கச், சிவபெருமான் ஒரு சந்நியாச வேடம்பூண்டு காஷாய வஸ்திரந்தரித்துக் கமண்டலத்தைக் கையிற்கொண்டு தீர்த்தசங்கரர் என்னும் பெயருடன் அவர்களுக்கு முன்னே தோன்றியருளினார். அதுகண்ட தம்பதிகள் அவரை அன்போடு நமஸ்கரிக்க, அவர் வித்தியாதரனே! நீ முற்பிறப்பில் கௌசிககுலத்தில் வித்தியாதர னென்னும் பெயர்பெற்று எல்லாவித்தையிலும் பண்டிதனாய், பிராம ணோத்தமனாயிருந்தாய். உன்மனைவியாகிய இவளும் அப்பொழுது சுகன்னியையென்னும் பெயர்பெற்று உன்னிடத்தில் மிகுந்த அன்பு கொண்டு பதிவிரதாசிகாமணியாயிருந்தாள். அப்பொழுது நீ சில காலம் உன்மனைவியுடன் அக்கினி கோத்திர முதலிய தருமங்களைச் செய்துகொண்டு சுகமாக வசித்தாய். அக்காலத்தில் வேதத்திற்குப் புறம்பாயுள்ள சிலபாஷண்டர்களுடன் சிநேகித்து வாதம் பேசிக் கொண்டு வந்தமையால் அவர்கள் போதனைக்குட்பட்டு அக்கினி கோத்திரமுதலிய கருமங்களைவிட்டுப் பிரத்தியக்ஷமாகிய உலகவின் பத்தையே நித்தியவின்பமெனக் கருதி உன்மனைவியை விட்டு வேசி யரைப் புணர்ந்தமையின் உனக்கு அநேகதனமிருந்தும் சிலகாலத் துள் அவ்வளவும் நாசமாயின. நீ தரித்திரனாய் விட்டமையால் சுற்றத் தாரெல்லாம் உன்னைக்கைவிட்டதுமன்றி வேததூஷகன் என்றும் நிந் திக்க; வேறுகதியில்லாமல் மனைவியிடம் வந்துசேர்ந்தாய். சிலநாட்க

ளுள் அவளும் பசியால் வருந்தி இறந்தாள். நீயும் அவள் பிரிவாற்றுமையின் மிகவருந்தி இரவும் பகலும் அழுது முற்பிறப்பிற் செய்த புண்ணியவிசேடத்தால் காமேசி! நான் என்ன செய்வேன். தாயே! கைலாசநாயகியே! க்ஷமாவதி! மங்களசொரூபமுள்ளவரே! சகசிராக்ஷருடைய மனசுக்கு ரம்மியமானவரே! எல்லாக்குற்றங்களையும் பொறுக்கின்றவரே! ஹ்ரீங்கார மந்திர சொரூபிணியே! ஹ்ரீங்கார மந்திரத்தைச் செபிக்கிறவர்களிடத்திற் பிரியமுள்ளவரே!, காளாகருவனத் தலைவியே! பஞ்சதசாக்ஷர சொரூபிணியே! க்ஷமாவதிதேவியே! அடியேனைக் காத்தருளவேண்டுமென்று இராகதாளங்களுடன் பாடினுய். அச்சமயம் உனக்கு மரணம் நேர்ந்தது. யமதூதர்கள் மிகுந்த கோர ரூபத்துடன் உன்னைப் பிடிக்க வந்தார்கள். சிவகணங்களும் உன்னைத் தேவவிமானத்திலேற்றி யழைத்துப் போக வந்தார்கள். உன் பொருட்டு இருதிறத்தார்க்கும் யுத்தமுண்டாயிற்று. அப்பொழுது சிவகணங்கள் யமதூதர்களை யடித்துத் துரத்திவிட்டு உன்னை விமானத்திலேற்றிக் கொண்டு சிவலோகம் போனூர்கள். யமதூதர்கள் யமனிடத்தில் வந்து. மகாராஜாவே! மகா பாவியான வித்தியாதரனென்னும் பெயருள்ள பிராமணனை உமது ஆஞ்ஞையின்படி நாங்கள் கொண்டுவரச் சென்றோம். சிவகணங்களும் அங்கு வந்தார்கள். அவர்கள் எங்களை யடித்துத் துரத்திவிட்டு அவனை விமானத்திலேற்றிக்கொண்டு சிவலோகம் போய்ச் சேர்ந்தார்கள். நாங்கள் என்ன செய்வோம். எங்களுக்கு நீரே கதி யென்று வணங்கினூர்கள். அது கேட்ட யமராஜன் மிகப்பயந்து சித்திரகுத்தனை யழைத்து அவனுல் விஷயத்தைத் தெரிந்துகொண்டு, தனது கிங்கரர்களை நோக்கி, தூதர்களே! பூமியிற் பிரமஹத்திமுதலிய பாவங்களைச் செய்தவர்களும் தேகாந்தத்திலே பராசத்தியின் திருநாமத்தையாவது சிவபெருமான் திருநாமத்தையாவது ஒருதரம் உச்சரித்தால் அப்பொழுதே அவர்களுடைய பாவமெல்லாம் நசித்துவிடும் அவர்கள் நமதுலகத்தை யடையமாட்டார்கள். அந்தநாமங்கள் பாவமென்கிற காட்டுக்கு அக்கினியாகும். ஆதலால் அவர்களுடைய திருநாமஞ்சொல்பவர்களைத் தவிர மற்றவர்களை நமதுலகத்திற்குக் கொண்டுவாருங்களென்று சொல்லத் தூதர்கள் நல்லதென்று நமஸ்கரித்துச் சென்றூர்கள். லளிதாதேவியைத் தோத்திரஞ் செய்யும்பொழுதும் உனக்குப் போகத்தில் இச்சை நீங்காமையின் நீ திருக்கைலாசத்தை யடைந்தும் அங்கே சிவபெருமான் உன்னைநோக்கி, நீ போகத்தில் இச்சை நீங்காமல் ஈசுவரியைத் துதித்தமையால் மீளவும் பிராமண குலத்திற் பிறக்

சுக்கடவாயென்று ஆஞ்ஞாபிக்க இந்தக்ஷேத்திரத்திற் பிறந்தாய். அன்றியும் ஈசுவரன் உனக்கு அக்காலத்தில் "நீ பூமியிற் பிறந்தாலும் பூர்வஜன்மாவசானத்திற் செய்த லளிதாதேவி பத்தியுடன் சில காலம் விஷயசுகங்களை யநுபவித்துத் தேகாந்தத்தில் நமதுலகத்தை யடைவாயென்று ஆஞ்ஞாபித்தவாறு பராசத்தியைப் பத்தியுடன் பூசித்தாய். உன் மனைவியும் மகாபதிவிரதையாகையால் இப்பிறப்பிலும் உனக்கு மனைவியாக வந்தாள். நீங்களிருவரும் மோக்ஷவிருப்பமுற்றுப் பத்தியுடன் பரமேசுவரியைத் தோத்திரஞ் செய்தீர்களாதலின் அதற்கு மகிழ்ந்து, கைலாசநாயகி உங்களுக்கு மோக்ஷங்கொடுத்தருளும்படி நம்மைப் பிரார்த்திக்க, நாம் சந்நியாசவேடத்துடன் வந்தோம் என்று அருளிச்செய்து அவ்வேடத்தை மறைத்து இடபாரூடராய்த் தோன்றித் தரிசனங்கொடுத்தருளினார். அவ்விருவரும் அப்பெருமானைத் தரிசித்து மனமகிழ்ந்து வணங்கித் தோத்திரஞ் செய்தார்கள். அவர்களைச் சிவபெருமான் இடபத்திலேற்றிககொண்டு மகாலிங்கத்தில் அந்தர்த்தானமானார். இவ்வாறு அவ்விருவரும் சிவசாயுச்சிய பதவியை அடைந்தார்கள்.

வித்தியாதரமோட்சச் சருக்கம் - முற்றிற்று.



# சிவசருமோபாக்கியானச் சருக்கம்.



முனிவர்களே! தன்னைப் படித்தவர்கள் கேட்டவர்களுடைய பாவங்களை நீக்கத்தக்க காளாகருவனைசருடைய மற்றொரு சரித்திரஞ் சொல்லுகின்றோம். முன்னாளில் காளாகரு வனத்தில் சிவசர்மா என்று ஒரு பிராமணர் இருந்தார். அவருக்குப் பாலியதசையிலேயே தாயும் தகப்பனும் இறந்தார்கள். அவர் முற்பிறவியிற் செய்த புண்ணியத்தால் வீதிகோத்திரமுனிவரை யடைந்தார். அம்முனிவர் கிருபைகூர்ந்து அவருக்கு உபநயன முதலிய சடங்குகளைச் செய்து வேதபாண்டித்திய முடையவராகச் செய்தார். அவரும் பிரமசரிய விரதம் பூண்டு சிவபூஜாதுரந்தரராய்ச் சுக்கிலபக்ஷத்தில் சுவேதநதியிலும் கிருஷ்ணபக்ஷத்திற் சந்திரநதியிலும் விதிப்படி ஸ்நானஞ் செய்து நதிமத்தியிலுள்ள மணற்குன்றில் வேதிகையமைத்துப் பூஜோபகரணங்களைக் கொண்டு மணலினால் இலிங்கம்பண்ணி அன்போடு பிரதிஷ்டை செய்து மந்திரபூர்வமாகத் துவாரபூஜாதிகளைச செய்து சாமானிய விசேட அர்க்கியஸ்தாபனஞ் செய்து

க்ஷமாவதி தேவியாருடனும் பரிவாரமூர்த்திகளுடனும் சகசிராக்ஷப் பெருமானை நித்தியமும் பூசித்துவந்தார். இவ்வாறு பூசைசெய்யும் அவருடைய மனோரதத்தை நிறைவேற்ற வேண்டுமென்று அப் பெருமான் நினைத்தருளினார். அப்பொழுது வைகாசிமாதோற்சவம் வந்தது. உற்சவதரிசனத்தின் பொருட்டு அநேக தேசங்களிலிருந்து பலரும் வந்து கூடினார்கள். அச்சமயம் அவர் உஷக் காலத்தில் எழுந்து முன்போலச் சுவேதநதியில் ஸ்நானஞ் செய்து வரச் சென்றார். சிவபெருமானும் மன்மதனைக் காட்டிலும் அழகு வாய்ந்த வடிவங்கொண்டு இடபவாகனத்தில் ஏறி அவரது பத்திவலையில் அகப்பட்டு அவருக்குத் தெரியாமல் அவர்பின் சென்றார். உற்சவ சேவைக்கு வந்திருந்த பிரமன் விட்டுணு முதலிய தேவர்களெல்லாம் அப் பெருமானைப் பின்றொடர்ந்து சென்றார்கள். சிவபெருமா னுடைய திருமேனியின் ஒளியால் அவர்கள் சுவர்ணம்போற் பிர காசித்தார்கள். சிவசர்மா இவ்விஷயந் தெரியாமல் வழக்கம்போல் நதியிற் சங்கற்பத்துடன் ஸ்நானஞ் செய்து நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு சைகதலிங்க பூஜைசெய்து கண்களைமூடி இரு தயகமலத்தில் சிவபெருமானைத் தியானஞ் செய்தார். அப்பொழுது பத்திக்கு வசப்பட்டவராயும் கிருபாநிதியாயும் உள்ள சிவபெருமான் இடபாரூடராய் அவருக்கு முன் வந்து நின்றார். உடனே அவர் இருதயகமலத்திற் சிவபெருமானைக் காணாமல் கண்ணைத்திறந்து இட பாரூடராயும் பிரமன் முதலிய தேவர்களாற் சூழப்பட்டவராயும் க்ஷமாவதிசமேதராயும் எழுந்தருளிநிற்குங் கருணைக்கடலாகிய அப் பெருமானைத் தரிசித்து மகிழ்ந்து வணங்கித் தோத்திரஞ் செய்து நிற்கச், சிவபெருமான மகிழ்ந்து சிவசர்மனே! நீ முற்பிறப்பில் காஞ்சிபுரத்திற் பிராமணகுலத்திற் பிறந்து வேதமுதலிய சாஸ்திரங் களை யுணர்ந்து மன்மதனைக் காட்டிலும் அழகு மிகுந்தவனா யிருந் தாய். அக்காலத்தில் ஒரு பிராமணப் பெண் உன்னுடைய அழ கால் மயங்கி ஆசைப்படவும் நீ உடன்படவில்லையாதலின் அவள் உன்னை நோக்கி, "நீர் பிராமணராயும் சாஸ்திரவிற்பன்னராயும் திவ் விய ரூபமும் தேககாந்தியும் உடையவராயும் யௌவனதசை யடைந் தவராயும் இருக்கின்றீர். நானும் யுவதியாயும் அழகுள்ளவளாயும் காமத்தாற் பீடிக்கப்பட்டவளாயும் உம்முடன் போகத்தில் இச்சை யுடையவளாயு மிருக்கின்றேன். உண்ணுதற்கு ஆயத்தமா யிருக் கிற அன்னத்தையும் பக்குவப்பட்ட பழத்தையும் பெண்களின் பிர தம யௌவனத்தையும் விலக்கலாகாதென்று சாத்திரமறிந்தவர்கள்

சொல்லுவார்கள். அங்ஙனமாகவும் உம்முடைய அழகிற்குத் தகுந்தவளாயும் காமபீடிதையாயுமுள்ள எனக்கு மறுதலை செய்தீராதலின் நீர் அடுத்த பிறப்பில் பத்தினியில்லாமல் இருக்கக்கடவீர் என்று சபித்தாள். உடனே நீ பயந்து, பெண்ணே! அந்நியப் பெண்களின் சங்கமம் மகாபாவமென்று கருதி உன்னை அதட்டி விலக்கினேன். இதுவரை பாவவழியிற் செல்லாத நான் உனது சாபத்திற்கு எவ்வாறு கட்டுப்படுவேன். நீ தந்த சாபத்தை நீக்குவாய் என்றாய். உடனே அவள் கிருபை கூர்ந்து, பிராமணசிரேட்டரே! உம்முடைய தருமசிந்தையைப் பரிசோதித்தேன். நான் தந்த சாபம் உமக்கு அநுகூலமாய் இருக்கக்கடவது. நீர் அடுத்த பிறப்பில் காளாகருவனத்தில் பிராமணகுலத்திற் பிறந்து வீதிகோத்திரமுனிவரை யடைந்து, அவரால் உபநயன முதலிய சடங்குகளைப் பெற்று, வேதமுதலிய சாஸ்திரங்களைப் பயின்று பிரமசரிய விரதம்பூண்டு, சகசிராக்ஷ மகேசுவரரை அன்போடு வழிபட்டு அவரநுக்கிரகத்தால் பிரமாதி தேவர்களுக்குங் கிட்டாத சாயுச்சியபதவி யடைவீரென்று சொல்லிவிட்டுத் தனது கிருகத்திற்குச் சென்றாள். அந்தச் சாபம் உன் சிவசாயுச்சியத்திற்குக் காரணமாயிற்று. அதனை நீயும் அங்கீகரித்தாய். அவள் என்பால் மிக்க அன்புள்ளவள். சத்தியவாக்குடையவள். உன்னைப் பரீக்ஷித்தற் பொருட்டே காமம் உற்றவள்போல வார்த்தை காட்டினாள். பின் உன் சித்தசுத்தியைத் தெரிந்துகொண்டு உனக்கு அநுக்கிரகம் பண்ணினாள். நம்முடைய பத்தர்களின் வாக்கை நாம் ஒரு காலமும் வியர்த்தமாகச் செய்யமாட்டோமாதலால் நீ இங்கே பிறந்து நம்மிடத்தில் உனக்குப் பத்தியுண்டாயிற்று. நாம் உனக்கு முன்னே தோன்றியருளினோம். நீ விரும்பிய வரத்தைத் தருகின்றோமென்றருளிச் செய்தார்.

உடனே சிவசர்மா சிவபெருமானைவணங்கி அஞ்சலி செய்து நின்று, பிரமன் விட்டுணுமுதலிய தேவர்களுக்குங் காண்டற்கரிய தேவரீர் கிருபைகூர்ந்து எளியேன் முன் தோன்றியருளவும், வேறு வரம் வேண்டுமோ சிவசாயுச்சியத்தையே தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பொழுது உற்சவதரிசனத்தின் பொருட்டு வந்திருந்தவர்களெல்லாம் சுவேதநதிக்கரையில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்றமையைக் கேள்வியுற்று அங்குவந்து, பிரமன் விட்டுணுமுதலிய தேவர்கள் சூழ, உமாதேவியாருடன் இடபாரூடராய் எழுந்தருளியிருக்குஞ் சகசிராக்ஷ மகேசுவரரையும் எதிரே நிற்கும் சிவசர்மரையும் நோக்கி வியந்து அன்போடு நமஸ்கரித்துத் துதித்

தார்கள். உடனே சிவபெருமான் யாவருங்காணச் சிவசர்மரை இடபவாகனத்திலேற்றிக் கொண்டு அந்தர்த்தானமானார். பிரமன் முதலிய தேவர்களும் சிவபெருமானை வணங்கித் துதித்து விடைபெற்றுக் கொண்டு தங்கள் தங்களுலகம்போய்ச் சேர்ந்தார்கள். இவ்வாச்சரியத்தைப் பார்த்த யாவரும் மனமகிழ்ந்து அன்று முதல் சகசிராக்ஷ மகேசுவரரிடத்தில் மிக்க அன்பு செய்து வந்தார்கள். உற்சவத்திற்கு வந்தவர்களெல்லாம் சுவேதநதியில் ஸ்நானஞ்செய்து சிவபெருமானை வழிபட்டார்கள் இந்தப் புண்ணிய சரித்திரத்தைப் படித்தவர்களுக்கும் கேட்டவர்களுக்கும் சகசிராக்ஷ மகேசுவரரிடத்தில் சிறந்த பத்தியுண்டாகும்.

சிவசர்மோபாக்கியானச் சருக்கம் - முற்றிற்று.



# அபராத சகேசாஷ்டோத்தர சதநாமச் சருக்கம்.



முனிவர்களே! எல்லாப்பாவங்களையும் நீக்குவதாயும் சிவாபராதங்களை ஒழிப்பதாயும் உள்ள சகசிராக்ஷமூர்த்தியின் அஷ்டோத்தர சதநாமங்களை உலகோபகாரமாக உங்களுக்குச் சொல்லுகின்றோம் அந்த நாமங்கள் துக்கங்களையெல்லாம் நீக்கும். அவற்றிற்கு அபராதசகேசாஷ்டோத்தரசத நாமமென்று பெயர். அதற்கு வேதவியாசர் இருடி. அநுட்டுப்புச் சந்தசு. சகசிராக்ஷப்பெருமான் அதிதேவதை. பிரணவம் பஞ்சாக்ஷரமென்னும் ஆறக்ஷரங்களாலும் கரநியாசம் இருதய முதலிய நியாசஞ்செய்து, பின்பு கற்பகவிருக்ஷத்தினடியில் பதுமாசனத்தில் வீற்றிருப்பவராயும், வரம் அபயம் மான் மழுஎன்னும் இவற்றைத் தரித்த நான்கு திருக்கரங்களையுடையவராயும்,இருபக்கத்திலும் வீற்றிருக்கும் விநாயகர் சுப்பிரமணியர்என்னும் இருவரால் மனோக்ஞராயும், கோடிசூரியப் பிரகாசமுள்ளவராயும், கோடிசந்திரர் உதித்தாற்போன்று சீதளமுள்ளவராயும், சர்வாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவராயும், சமஸ்தலோகங்களாலும் நமஸ்கரிப்படுகிறவராயும் உள்ள சகசிராக்ஷமூர்த்தியை க்ஷமாவதி தேவியாருடன் தியானஞ்செய்து ஸ்ரீ சிவாயநமஃ என்பது முதல் கைலாசநாயிகாநாத சகசிராக்ஷ மகேசாய நமஃ என்பது பரியந்தமுள்ள நூற்றெட்டு நாமங்களையுஞ் செபிக்கவேண்டும். அது வியா

திகளையும் வறுமைகளையும் பாவங்களையும் நீக்கிவிடும். இஷ்டங்களை யெல்லாங் கொடுக்கும். சகசிராக்ஷமகேசுவரர் தம்மை அந்த நாமங்களால் அருச்சிப்பவர்களுக்கு விசேஷ அநுக்கிரகஞ் செய்வார்.

அபராதசகேசாஷ்டோத்தரசத நாமச் சருக்கம் முற்றிற்று.



## சந்திராங்கதச் சருக்கம்.

முனிவர்களே! வந்தியாதோஷ நிவிர்த்தி செய்வதாயும் பத்தியையும் விஞ்ஞானத்தையுங் கொடுப்பதாயும் உள்ள சந்திராங்கத சரித்திரத்தைச் சொல்லுகின்றோம். காஸ்மீரதேசத்திலே சந்திராங்கதனென்று ஓர் அரசனிருந்தான். அவன் மனைவி பெயர் ஏமாங்கதை. அவ்வரசன் தன்கீழ்வாழுங் குடிகளையெல்லாம் தன்குழந்தைபோற் பரிபாலித்து வந்தான். அவன் புத்திரனில்லாமல் மிகவருந்தி இராச்சியபாரத்தை மந்திரிகளிடத்தில் ஒப்புவித்துவிட்டுத் தன் மனைவியுடன் தபோவனஞ்சென்று அகஸ்திய முனிவருக்குச் சகோதரராகிய சுதரிசன முனிவரைத் தரிசித்து நமஸ்கரித்து நின்று, சிவராஜயோகத்தால் சருவபாவங்களையும் நீக்கித் திவ்விய ஞானசம்பன்னராகிய முனிவர்பெருமானே! நாங்கள் ஆத்தியான்மிகமுதலிய தாபத்திரயங்களுடையவர்களாய்ப் புத்திரனில்லாமல் மிகவருந்துகின்றோம். எங்களுக்கு வமிசவிருத்தியின்பொருட்டுப் புத்திரப்பேற்றை அநுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

அதுகேட்ட சுதரிசனமுனிவர் கிருபைகூர்ந்து அவர்களுக்குப் புத்திரனில்லாத காரணத்தை ஆராய்ந்து, அரசனே! நீ முற்பிறப்பில் சிவதருமத்துக்கு இடையூறு செய்தமையின் இப்பொழுது உனக்குப் புத்திரப்பேறு கிடைக்கவில்லை. அத்தோஷ நீக்கத்தின்பொருட்டு ஒன்று சொல்கின்றோம். சோழதேசத்தில் திருவாரூருக்கு ஆக்கினேய திசையில் சுவேதநதிக்கும் சந்திரநதிக்கும் மத்தியில் காளாகருவனமென்று புராதன புண்ணிய சிவஸ்தலமொன்றுளது. அது சிவாபராதங்களையெல்லாம் நீக்கத்தக்கது. நீங்கள் அங்கேபோய் அங்குள்ள தீர்த்தங்களில் விதிப்படி ஸ்நானஞ்செய்து க்ஷமாவதிதேவியாரையும் சகசிராக்ஷமூர்த்தியையும் வணங்கிப் புத்திரதோஷநிவிர்த்திக்காகச் சதருத்திரவிதிப்படி அபிஷேகஞ்செய்தால் அப்பெருமான் திருவுள

பிரங்கி உங்கள் விருப்பத்தை நிறைவேற்றியருளுவார். இது நிச்சயம் என்றார்.

-னே அரசனும்மனைவியும் முனிவரை அஞ்சலிசெய்து வணங்கிவிடைபெற்றுக்கொண்டு பிரயாணித்து ஆங்காங்குவிசாரித்துமிகுந்த பிரயாசத்துடன் காளாகருவனத்துக்கு வந்து பரமானந்தமடைந்து அங்குள்ள அங்கிரசு பிருகு முதலிய முனிவர்களைக் கண்டு நமஸ்கரித்து அவரருள்பெற்று, ஐந்துதீர்த்தங்களிலும் சங்கற்பஞ்செய்து ஸ்நானம் பண்ணி நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு அம்முனிவர்களுடன் சிவாலயத்துக்குப் போய், முன் துவாரபாலகர்களை வணங்கித் திருநந்தி தேவரை யடைந்து வணங்கிச் சிவத்தியானபராயணரே! மகாபாக்கியம் பெற்றவரே! நந்திகேசரே! சிவதரிசனஞ் செய்தற்பொருட்டு அநுமதி கொடுக்கவேண்டு மென்று பிரார்த்தித்து அவரிடத்து அநுமதி பெற்று உள்ளே சென்று சகஸ்ராக்ஷமூர்த்தியையும் க்ஷமாவதி தேவியாரையும் தரிசித்து மூன்று தரம் பிரதக்ஷிணம் பண்ணி ஐந்துதரம் நமஸ்கரித்துப் புத்திர விருப்பத்துடன் பிரார்த்தித்து நின்றார்கள். பின்பு அங்குள்ள முனிவர்கள் அரசனை நோக்கிப் புத்திரதோஷ பரிகாரஞ் செய்யக்கடவா யென்று அவ்விதிகளைக் கூற, அரசன் வைகாசிமாசத்துப் பஞ்சமிதிதியில் காசிபர் முதலிய பதினைந்து முனிவர்களைப் பிரார்த்தித்துச் சிவபெருமானுக்கு அபிஷேகஞ் செய்ய ஏகாதசருத்திர செபத்தின் பொருட்டுப் பதினொருவரையும் மிருதசஞ்சீவினி மந்திர செபத்தின் பொருட்டு ஒருவரையும் வந்தியாதோஷ நிவாரணமந்திர செபத்தின் பொருட்டு ஒருவரையும் அமிர்தவருஷிணி மந்திர செபத்தின் பொருட்டு ஒருவரையும் ஆசாரிய நிமித்தமாக ஒருவரையும் வரிக்க; மந்திரதத்துவங்களை யறிந்த அவர்களும் ஜெபம் ஓமம் அருச்சனை முதலியவற்றைச் செவ்வே நடத்திச் சிவபெருமானுக்குச் சதருத்திர விதிப்படி அபிஷேகஞ் செய்வித்தார்கள். அரசனும் தன் மனைவியுடன் மகிழ்ந்து கோமுகியின் வழியாய் வருகிற சிவாபிஷேகதீர்த்தத்தை அன்பாற் சிரசிற்றெளித்துக்கொண்டு பிரதக்ஷிண நமஸ்காரம் பண்ணிப், பஞ்சாக்ஷரமகா மந்திரத்தைச் செபித்துத் தன் விருப்பத்தைப் பிரார்த்தித்துக்கொண்டு சண்பகம் அலரி செங்கழு நீர் முதலிய புஷ்பங்களாற் சிவபெருமானை அஷ்டோத்தர சதநாமார்ச்சனை செய்து அபூபம் பாயசம் பிட்டு அன்னம் இவைகளை நிவேதித்து நீராஞ்சனஞ் செய்து அப்படியே க்ஷமாவதி தேவியார்க்கும் அபிஷேகமுதலிய வற்றைச் செய்து புஷ்பங்களால் அருச்சனை பண்

ணிச், சருக்கரை யன்னம் நிவேதித்து விருப்பத்தைப் பிரார்த்தித்துக்கொண்டு தன் மனைவியுடன் ஈசுவர நிவேதன அன்னத்தைப் புசித்துக் காசிபர்முதலிய முனிவர்களுக்குப் பொன் பசு முதலியவற்றைக் கொடுத்து அவர்களை வணங்கி வமிச விருத்தியின் பொருட்டு அவர்களாசீர்வாதம் பெற்ருன். பின் அரசன் மனைவி ஈசுவரகிருபையாற் கருப்பவதியானுள். அம்மனைவியைப்பார்த்த அரசன் மனமகிழ்ந்து, க்ஷமாவதி தேவியாரையும் சகசிராக்ஷப் பெருமானையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு மனைவியோடு தன் பட்டணம் போய்ச் சேர்ந்தான். பட்டணத்திலுள்ள யாவரும் அரசன் மனைவி கருப்பமடைந்ததைக் கேள்வியுற்று மகிழ்ச்சியடைந்தார்கள். பின் அரசன் மனைவி பத்தாவது மாசத்தில் சுபலக்கினத்தில் பூரணசந்திரன் போல் முகத்தையுடைய புத்திரனைப் பெற்றெடுத்தாள். அரசனுக்குப் புத்திரப்பேற்றை யளித்தமையால் அது முதல் காளாகருவனத்துக்குப் புத்திரப்பிரத க்ஷேத்திர மென்று பெயர் விளங்கிற்று. இந்தச் சரித்திரத்தைப் படித்தவர்களுக்கும் கேட்டவர்களுக்கும் இஷ்டசித்திகளெல்லாம் உண்டாகும்.

**சந்திராங்கதச் சருக்கம் = முற்றிற்று.**



## மாகந்தச் சருக்கம்.

முனிவர்களே! எல்லாப் பாவங்களையும் வறுமையையும் நீக்குவதாயுள்ள மாகந்த சரித்திரத்தைச் சொல்லுகின்ருேம் கோசல தேசத்தில் மாகந்தன் என்று ஒரு பிராமணன் இருந்தான். அவன் பூர்வ கன்மபலத்தினுல் மிகத்தரித்திரனு யிருந்தான். அவன் உலகத்திற் செல்வமுடையவர்கள் உலோபிகளாயும் பெரியோர்களை இகழ்பவர்களாயும் செருக்குற்றவர்களாயும் அறிவில்லாதவர்களாயும் தான தருமஞ் செய்யாதவர்களாயும் இருப்பது நோக்கி, ஐயோ! இவ்வுலகத்திற் சீவர்களின் கன்மநிலைமை விசித்திரமா யிருக்கின்றது. கடவுள் முற்றறிவு உடையவரா யிருந்தும் உலோபிகளுக்கே திரவியத்தைக் கொடுக்கின்ருர். கொடையில் விருப்பமுள்ளவர்களுக்குச் செல்வத்தைக் கொடுக்கின்ருரில்லை. வறியவனுயுள்ள எனக்குத் தான தருமஞ் செய்யவேண்டுமென்று எண்ணமிருக்கிறது. என்ன செய்வேன். கடவுள் கிருபையால் எனக்குத் திரவியங் கிடைத்தால் வறியவர்களுக்கும் இரப்பவர்களுக்கும் வேண்டிய திரவியங் கொடுப்

பேனென்று நினைத்துக் கொண்டிருக்கும் பொழுது, கோபமில்லாதவ ராயும் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ் செய்தவராயும் உள்ள காலவமுனிவர் வர, அவரைக்கண்டு வணங்கி அஞ்சலி செய்து நின்று உம்முடைய தரிசனவிசேடத்தால் தன்னியனானேன். ஈசுவரனே இப்பொழுது உம்மை வரச் செய்தாரென்று நினைக்கின்றேன். நீங்கள் திரிகாலங் களையுந் தெரிந்தவர்கள். சராசரப்பொருள்களின் நிலைமையெல்லாம் அறிவீர்கள். எந்தக் கன்மத்தால் எனக்கு இக்கொடிய வறுமை வந்தது. யாது செய்தால் இது நீங்கும். தயை கூர்ந்து சொல்ல வேண்டுமென்று பிரார்த்தித்தான்.

அதுகேட்ட முனிவர் ஆராய்ந்து, மாகந்தனே! நீ முற்பிறப்பில் கடவுள் வழிபாடும் தானமும் சிரத்தை யில்லாமற் செய்தாய். அன்றியும் நவராத்திரிமகா புண்ணிய காலத்திலும் பஞ்சபருவங்களிலும் நீ சிவபூசை செய்யவில்லை. அத்தோஷத்தால் இப்பொழுது வறுமை யுற்றிருக்கின்றாய். அது நீங்குதற்கு உபாயஞ் சொல்லுகின்றோம். உலகத்தில் சிவாபராதத்தினாலேயே வறுமை யடைகின்றார்கள். ஆகாயத்திற் சென்றாலும் பாதாளத்திற் சென்றாலும் உலகமுழுதுஞ் சுற்றினாலும் ஈசுவரியை உபாசியாமற் சிவாபராதம் நீங்காது. அது நீங்காமல் தரித்திரம் நீங்காது. ஆதலின் உன் தரித்திரம் நீங்குதற் பொருட்டுத் திருவாரூருக்குப் போய் அங்கு வீற்றிருக்கும் மேருப் பிரஸ்தரரூபிணியாகிய லலிதாபரமேசுவரியை விதிப்படி பூசிப்பாய் அன்றியும் இன்னொரு இரகசியஞ் சொல்லுகின்றோம். அந்தப் பரமேசுவரியே காளாகருவன க்ஷேத்திரத்தில் க்ஷமாவதி யென்னும் பெயருடன் வீற்றிருக்கின்றார். அங்கே அவர் கைலாசப் பிரஸ்தர ரூபிணியாய் இருக்கின்றமையின் கைலாசநாயகி யென்று பெயர் பெறுவர். அவ்வம்மையாரை வழிபட்டால் பல துன்பங்களைச் செய்யும் உன் வறுமை நீங்கிவிடும் என்று சொல்லி அவனிடத்தில் தயை கூர்ந்து காதிவித்தை ஹாதிவித்தை சாதிவித்தை யென்னும் இவைகளை உபதேசித்து இந்த மந்திர செபத்தினாலேயே ஈசுவரியார் அநுக்கிரகஞ் செய்வார். பணக்காரனாகவோ சக்ரவர்த்தியாகவோ எப்படி யிருக்கவேண்டுமென்று விரும்புகிறாயோ அப்படியெல்லா மாகுவாய்

அன்றியும் இன்னொரு இரகசியஞ் சொல்லுகின்றோம். எவர்கள் லளிதா தேவியை உபாசிக்கின்றார்களோ அவர்களே ஞானமுள்ளவர்கள். அவர்களுக்கே தக்க மியல்புக்கேற்பத் தானங் கொடுத்தல் வேண்டுமென்று சொல்லிக் கீரைவிதையைக் கொடுத்து, மாகந்தனே! இதை விதைத்துப் பயிர் செய்து அந்தக் கிரையை லளிதோபாசகர்களுக்குக்கொடு. தனக்கிருக்கும் பொருளை லளிதோபாசகர்களுக்கே உபயோகித்தல் வேண்டும். எவன் லளிதோபாசகர்களுக்குத் தன் இயல்புக்கேற்ப, அன்னமாவது பணமாவது, தீர்த்தமாவது, தாம்பூலமாவது, சாகங்களாவது கொடுக்கின்றானோ அவன் சக்ரவர்த்தியாகிச் சர்வ லோகங்களாலுங் கொண்டாடப் படுகின்றான். லளிதாதேவியின் பெருமையை ஆசாரியமுகமாய் அன்போடு கேட்பவன் அவ்வம்மையாருடைய திருவடியை யடைகின்றான் சந்தேகமில்லை, நீ காளாகருவனம் போய்த் தேவியைப் பூசிக்கக் கடவாய் என்று கூறிச் சென்றார்.

பின்பு மாகந்தன் மனமகிழ்ந்து ஸ்ரீபஞ்சதசாக்ஷரியம்மையாரின் மந்திரத்தைச் செபித்துக் கொண்டு காளாகருவனத்துக்கு வரும் பொழுது மார்க்கத்திலுள்ள திருவாரூரை யடைந்து அங்கே மேருப் பிரஸ்தர ரூபிணியாய் வீற்றிருக்கும் உமாதேவியாரை வழிபட்டுக் காளாகருவனம்போய் அங்குள்ள ஐந்து தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்து அபராத சகேசுவரரையும் க்ஷமாவதி தேவியாரையும் நமஸ்கரித்துப் பஞ்சதசாக்ஷரி மந்திரத்தைச் செபித்துப் பின்பு காலவமுனிவர் கொடுத்த கீரைவிதையைப் பயிர் செய்து அதனை ஈசுவரியின் பத்தர்களுக்குக் கொடுத்தான். இவ்வாறு தன் வறுமை நீங்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ஈசுவரியை உபாசித்து வந்த மாகந்தன் சிலகாலஞ்சென்று இறந்து அவ்வுபாசனையின் புண்ணியத்தால் அங்கதேசத்தில் பெருந்திரவியமுள்ள பிராமணனாய்ப் பிறந்து தான தருமங்களிற் சிரத்தையுடன் ஈசுவரிபத்தி யுடையவனா யிருந்தான். இருக்குநாளில் முற்பிறப்பில் தனக்கு மந்திரோபதேசஞ் செய்த காலவமுனிவரைக் கண்டான். உடனே பூர்வஞான முண்டாகப் பெற்று "இவர்கொடுத்த கீரை விதையைப் பயிரிட்டு அதைத் தேவியின் பத்தர்களுக்குக் கொடுத்ததனாலன்றோ இப்பொழுது திரவிய

முள்ளவனாகப் பிறந்தோம்" என்றெண்ணி அவரை அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து எழுந்து கீரை கொண்டுவந்து கொடுத்தான். அதுகண்ட காலவமுனிவர் இவன் முற்பிறப்பில் நம்பால் உபதேசம் பெற்ற மாகந்தன் என்றெண்ணி வியந்து, நீ முற்பிறப்பில் மிக வறுமையுற்றிருந்தாயாதலின் கீரையைத் தானஞ் செய்யச் சொன்னோம். இப்பொழுது நீ பெருந் திரவியமுள்ளவனா யிருப்பதால் வித்தியாவான்களுக்குத் தனதிகளைத் தானஞ் செய்வாய். பலத்தில் விருப்பமுள்ளவர்கள் தங்கள் திரவியத்துக்கேற்பத் தானஞ் செய்ய வேண்டும். திரவியமுள்ளவனுக்குச் சுவர்ண தானத்தினால் எந்தப் பலன் கிடைக்குமோ அந்தப் பலன் தரித்திரனுக்குக் கீரைத் தானத்தினாற் கிடைக்குமாதலால் நீ தேவியின் பக்தர்களுக்குச் சுவர்ண முதலியவற்றைத் தானஞ் செய்தல் வேண்டும் என்று உபதேசித்துச் சென்றார். அவனும் அவ்வாறே செய்துகொண்டு புத்திர பௌத்திரர்களுடன் இகலோக சுகத்தை யநுபவித்து ஈசுவரியின் தியானத்திற் சிரேஷ்டனாயிருந்து இறந்து, பின் சக்ரவர்த்தியாய்ப் பிறந்து பூர்வவாசனையினாற் காளாகருவனத்துக்கு வந்து லளிதா தேவியை உபாசித்துச் சர்வாபீஷ்டங்களையுங் கொடுக்கும் அஷ்டோத்தரசதநாமங்களால் கைலாச நாயகி பாதரைத் திவ்விய புஷ்பங்கொண்டு அருச்சித்து அன்போடு வணங்கிப் பிரார்த்தித்துத் திருவருளால் உண்மை ஞானம் பெற்றுத் தேகாந்தத்தில் லளிதாசாயுச்சியம் பெற்றான். இதைப் படித்தவர்களும் கேட்டவர்களும் இஷ்டசித்திகளையும் லளிதாபதத்தையும் பெறுவார்கள்.

மாகந்தச் சருக்கம் - முற்றிற்று.



# க்ஷமாவதி அஷ்டோத்தர சதநாமச் சருக்கம்.

சௌனகர் முதலிய முனிவர்கள் சூதமுனிவரை நோக்கி, "முனிவர்பெருமானே! ஸ்ரீ பஞ்சதசாக்ஷரியின் அஷ்டோத்தர சத நாமங்கள் சர்வாபீஷ்டங்களையுங் கொடுக்குமென்றீர். அவற்றைக் கேட்க விரும்புகின்றோமென்று கூறச், சூதமுனிவர் சொல்லுகின்றார். முனிவர்களே! அதிரகசியமாயும் இஷ்டசித்திகளைக் கொடுப்பதாயும் லலிதாதேவியின் பிரீதியைத் தருவதாயும் உள்ள அஷ்டோத்தரசத நாமங்களைச் சொல்லுகின்றோம். அவ்வஷ்டோத்தர சதநாமமென்னும் மகாமந்திரத்திற்கு நாராயணனே இருடி. அநுஷ்டுப்புச் சந்தசு. க்ஷமாவதியார் அதிதேவதை. கூடத்திரயத்தாலும் நியாசாதிகள் செய்துகொண்டு, பாசம் அங்குசம் கரும்புவில் புஷ்பபாணம் என்னும் இவற்றைத் தரித்த நான்கு திருக்கரங்களும் குங்குமம்போற் சிவந்த சரீரமும் உடைய தேவியை எப்பொழுதும் வணங்குகின்றேன் என்று தியானஞ் செய்து பின் அஷ்டோத்தரசத நாமங்களைச் செபிக்கவேண்டும். "கைலாசநாயிகாயை' என்று தொடங்கிச் சர்வ மங்களரூபிணே நமஃ என்பதுவரை யுள்ளவைகளே க்ஷமாவதி அஷ்டோத்தர சதநாமமாகும் அது மகாபாதக முதலிய பாவங்களையெல்லாம் நீக்கிவிடும். வைகாசிமாசப் பௌர்ணிமையிலாவது வெள்ளிக்கிழமையிலாவது சன்மநக்ஷத்திரத்திலாவது மல்லிகை முதலிய புஷ்பங்களைக்கொண்டு ஈசுவரிக்கு அருச்சனை செய்து, பாயசம் அன்னம் அபூபம் பழங்கள் என்னும் இவைகளால் நிவேதனஞ் செய்பவன் இஷ்டசித்திகளெல்லாம் அடைவான்.

**க்ஷமாவதி அஷ்டோத்தர சதநாமச் சருக்கம்-முற்றிற்று.**



* இச்சருக்கத்திற் கூறிய வடமொழி அஷ்டோத்தர சத நாமம் இப் புராணத் திறுதியிற் சேர்க்கப்பெற்றுள்ளது.

# நவபாலோபாக்கியானச் சருக்கம்.



சூதமுனிவர் இன்னும் யாது கேட்க விரும்புகின்றீர்களென்று வினவச் சௌனகாதி முனிவர்கள், முனிவரரே! எல்லாப் பாவங்களையும் நீக்குகின்ற சகசிராக்ஷமூர்த்தியினுடைய சரித்திரங்களை உங்கள்பால் இதுவரை கேட்டும் மனம் அமையவில்லையாதலின் பதி பசுபாசஞானத்தைக் கொடுப்பனவாயும் மோக்ஷ விமோசனம பண்ணுவனவாயும் உள்ள அவருடைய சரித்திரங்களை இன்னமுங் கேட்க விரும்புகின்றோம் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்கச், சூதமுனிவர் சொல்லத் தொடங்கினார். முனிவர்களே! சகசிராக்ஷ மூர்த்தியின் சரித்திரம் மிகவும் ஆச்சரியமாகும் காளாகருவன க்ஷேத்திரத்துக்குக் கீழ்த்திசையில் கோமுகதீசுவரபுரமென்று ஒரு அக்கிரகாரம் உண்டு அதற்கு உருத்திரயஞ்ஞபுரமெனறு பெயர். அவ்வூரில் சுந்தரதீக்ஷிதரென்று ஒரு பிராமணர் இருந்தார். அவர் க்ஷமாவதி தேவியாரின் திருவடிகளில் மிகுந்த பத்தியுள்ளவர். நவார்ணமென்னுஞ் சண்டிகாமந்திரத்தைச் செபிப்பவர் அவருக்கு ஒன்பது பெண்மக்கள் உண்டு. அவர்களுக்கு முறையே பாலை, சந்திரவதனை, பதுமை, கௌரி, சரசுவதி, சந்திரகாந்தி, கோமதி, காமாக்ஷி, லளிதை, என்று பெயர். அவர்கள் ஒன்பதுபேரும் ஒன்பது துர்க்கைகளுக்கு ஒப்பாகவும் ஒருவரோடொருவர் அன்புள்ளவர்களாகவும் க்ஷமாவதி தேவியாரிடத்தில் பத்தியுள்ளவர்களாகவும் விளங்கித் தங்கள் செய்கையாற் பிதாமாதாக்களுக்கு மிகமகிழ்ச்சியளித்து வரும் நாளிலே ஒருநாள் காளாகருவனத்தில் சகசிராக்ஷமூர்த்திக்கு நடக்கும் உற்சவத்தைத் தரிசிக்க விரும்பிப் பிதாவினிடத்தில் அநுமதி பெற்றுக் கொண்டு காளாகருவனத்துக்கு வந்து அங்கே உற்சவசேவையின் பொருட்டுப் பல தேசங்களிலிருந்து வந்திருக்கும் சன நெருக்கத்தால் க்ஷமாவதி தேவியாரையும் சகசிராக்ஷமூர்த்தியையும் ஆலயத்தின் உள்ளே போய்த் தரிசிக்கப் பயந்து இவ்வளவு சன நெருக்கத்தில் ஈசுவரதரிசனம் எவ்வாறு நமக்குக் கிடைக்குமென்று ஆலோசித்துக் கொண்டிருக்கும்பொழுது, அவர்களுள் மூத்தவளாகிய பாலை

யென்பவள் இப்பொழுது சனநெருக்கமா யிருத்தலால் என்னால் உள்ளே போய்த் தரிசனஞ் செய்யமுடியாது. நான் இங்கேயே இருந்து தீவிர தவஞ்செய்து யோக திருஷ்டியால் ஈசுவரனைத் தரிசிப்பேன் என்றாள். அது கேட்ட மற்ற எட்டுப்பேர்களும் மூத்தவளாகிய நீயே ஆலயத்தினுள்ளே போவதற்குப் பயந்தால் நாங்கள் எப்படிச் செல்வோம். நாங்களும் உன்னைப்போல் தவஞ்செய்து யோக திருஷ்டியினால் ஈசுவரனைத் தரிசிப்போ மென்றார்கள். இவ்வாறு சொல்லி அந்தக் கன்னிகைகள் யாவரும் வெள்ளாற்றங் கரையில் ஏகாந்தஸ்தானத்தில் தனித்தனி யிருந்து கண்களைமூடி ஆகாரமில்லாமல் ஒவ்வொருவரும் நமக்கே முதலில் தரிசனங் கிடைக்கவேண்டுமென்னுங் கருத்துடன் சகஸிராக்ஷமூர்த்தியையும் க்ஷமாவதியம்மையாரையும் தியானித்தார்கள். அதனையறிந்த சிவபெருமான் அம்மையாரை நோக்கி, உமையே! வெள்ளாற்றங்கரையில் ஒன்பது கன்னிகைகள் ஒவ்வொருவரும் தனக்கே ஈசுவர தரிசனம் முதலில் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் தவஞ் செய்கின்றார்கள். அவர்களுக்கு ஒரே காலத்தில் தரிசனங் கொடுத்தற்பொருட்டு ஒன்பது வடிவங்கொள்ளப் போகின்றோம் நீயும் ஒன்பது வடிவங் கொள்வாய் என்றருளிச் செய்து பின்பு திருநந்திதேவரையும் ஒன்பது வடிவங் கொண்டுவரும்படி ஆஞ்ஞாபித்துத் தாம் ஒன்பது வடிவத்துடன் இடபவாகனத்தில் ஏறிக்கொண்டு அக் கன்னிகைகளுக்கு முன் தோன்றியருளினார். உடனே அவர்கள் கோடிசூரியப்பிரகாசமுள்ளவராயும் கோடிசந்திரர்போன்ற சீதளமுள்ளவராயும் இடப்பாகத்தில் உமாதேவியையுடையவராயும் இடபாரூடராயும் தோன்றியருளிய சிவபெருமானைத் தரிசித்து மகிழ்ந்து பத்தியோடு பஞ்சாங்க நமஸ்காரஞ் செய்து துதித்து நின்றார்கள். பின்பு பத்திக்கு வசியராயும் தயாநிதியாயும் உள்ள அப்பெருமான் அவர்களை நோக்கிக் கன்னிகைகளே! உங்கள் தவத்திற்கு மகிழ்ந்தோம். உங்கள் பிதா நவார்ண மென்னுஞ் சண்டிகா மந்திரத்தைப் பத்தியுடன் செபித்தமையால் நீங்கள் ஒன்பது கன்னிகைகள் பிறந்தீர்கள். அம்மந்திரப் பிரபாவத்தினாற் பிறந்தவர்களாகையால் உங்களுக்கு க்ஷமாவதியிடத்திலும் நம்மிடத்திலும் பத்தியுண்டாயிற்று. உங்கள் பத்தியின்மேலீட்

டால் உங்களுக்கு அநுக்கிரகஞ் செய்ய நாம் ஒன்பது வடிவங் கொண்டு வந்தோம். நீங்கள் இந்திரன் பிரமன் விட்டுணு முதலிய தேவர்களுக்குங் கிடைக்காத நமது தரிசனம் பெற்றீர்கள். நீங்கள் நினைத்தவரத்தைத் தருகின்றோம் நீங்கள் நவபாலைகளென்னும் பெயருடன் தேவவடிவம் பெற்று நிக்கிரகாநுக்கிரக சத்தி வாய்ந்தவர்களாகக் கடவீர்கள் என்றருளிச் செய்து அந்தர்த்தானமானார். அக்கன்னிகைகளும் சிவபெருமான் வரங்கொடுத்தபடி தேவரூபம் பெற்று நிக்கிரகாநுக்கிரகஞ் செய்யச் சத்தியுடையவர்களாய் நவபாலைகளாய் விளங்கினார்கள் இதனைக் கேள்வியுற்ற சுந்தரதீக்ஷிதர் வெள்ளாற்றங் கரைக்கு வந்து பார்த்துத் தன்னை கிருதார்த்தனாக நினைத்து மகிழ்ந்து சிவபெருமானைத் துதித்தார். இதைக்கேட்டவர்களும் படித்தவர்களும் பாவங்களெல்லாம் நீங்கப் பெறுவார்கள் தீர்க்காயுளை அடைவார்கள்.

நவபாலோபாக்கியானச் சருக்கம் - முற்றிற்று.



# மனோரமைச் சருக்கம்.



முனிவர்களே! எல்லாப் பாவங்களையும் நீக்குவதாயும் சிவபத்தியைத் தருவதாயும் உள்ள சகஸ்ராக்ஷமூர்த்தியின் மற்றொரு சரித்திரத்தைச் சொல்லுகின்றோம். தேவலோகத்தில் எல்லா அவயவங்களிலும் நிரம்பிய அழகையுடையவளாய்ப் பத்மாவதி யென்று ஓர் தேவகன்னிகை யிருந்தாள். அவள் நித்தியம் திருக்கைலாசத்துக்குப் போய்ச் சிவபெருமானை வழிபட்டுக் கீதவாத்திய நடனங்களால் மகிழ்வித்து வருநாளிலே ஒருநாள் கோடிமன்மதர் போன்ற அழகுள்ளவனையும் திவ்விய அலங்காரமுடையவனையும் உள்ள ஒரு கந்தருவராஜகுமாரனைக் கண்டு அவன்பால் மோகித்துக் காமவிகாரமடைந்து தன்னைத்தழுவும்படி அவனை வேண்டினாள். அவனும்

அவளுடைய அழகால் மயங்கி ஆலிங்கனஞ் செய்து அவளு டன் தனது கிருகம் போய்ச் சேர்ந்தான். பத்மாவதியும் காமம் அதிகரித்து மூன்றுநாள் இரவும் பகலும் அவனுடன் கூடி இன்ப மநுபவித்து, ஈசுவர கைங்கரியத்தில் என்ன சுகமிருக்கிறது. இதுவே பரமசுகமென்றெண்ணினுள். இவ்வாறு எண்ணிச் சிவகைங்கரியஞ் செய்யாமையினுல் அவள் சிவாபராதத்துக்குப் பாத்திரமானுள். நான்காம் நாள் அக் கந்தருவகுமாரன் பெண்ணே! சிவகைங்கரி யத்தை மறந்துவிட்டாயே. சிவாபராதம் வருமே. சீக்கிரம்போய்ச் சிவகைங்கரியஞ் செய்து பின்பு வா என்றுன்.

அதுகேட்ட பத்மாவதி மெதுவாய்த் திருக்கைலாசத்துக்கு வர அவளைத் திருநந்திதேவர் பார்த்துக் கோபங்கொண்டு நீ சிவகைங் கரியத்தை மறந்து சிற்றின்பத்தில் அமிழ்ந்தி மூன்று நாள் இருந் தமையால் பூமியில் உருத்திரகணிகையர் குலத்தில் பிறக்கக் கடவா யென்று சபித்தார். உடனே பத்மாவதி மிகப்பயந்து திருநந்தி தேவரை வணங்கி நடுங்கி நின்று, கருணைக்கடலே! நந்திகேசரே! அடியேனுக்கு அஞ்ஞானத்தால் வந்த சிவாபராதத்தை நீக்கிக் கிருபை கூர்ந்து அடியேனைக் காத்தருளல் வேண்டும். நான் துக்க மயமான மானுட ஜென்மத்தை எவ்வாறு எடுப்பேன். அதினும் ஈசுவர சேவையிற் பிரியமுள்ள நான் நிந்திக்கப்படுகின்ற கணிகையாக எப்படிப் பிறப்பேன். தேவரீர்க்குக் கோடி நமஸ்காரம். என்னைச் சிவபெருமானுடைய திருவடிவழிபாட்டிலேயே அன்புள்ளவளாயிருக் கும்படி செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கத், திருநந்திதேவர் அவ ளுடைய பிரார்த்தனைக்கிரங்கிப், பெண்ணே! நமது சாபம் வீண் போகாது. ஆயினும் உனக்கு அநுக்கிரகஞ் செய்கின்றோம். பூமி யிலே திருவாரூருக்குத் தென்கிழ்த்திசையில் எல்லாப் பாவங்களையும் நீக்குவதாயும், மனோகரமாயும், காளாகருவனமென்று பெயருடைய தாயும் ஒருதலம் இருக்கிறது. அங்கே தாசியாய்ப் பிறந்து அக்குல தருமத்தின் வழுவாது சிவபத்தியிற் சிறந்து சிவபெருமானை வழி பட்டு வருவாய். அப்பெருமான் உன் பத்திக்கு வசப்பட்டு உன் னைச் சேர்ந்து சிவசாயுச்சியங் கொடுத்தருளுவார் என்று அருளிச் செய்தார்.

அவ்வாறே பத்மாவதி எல்லாத்தலங்களினும் உத்தமோத்தமமான காளாகரு வனத்தலத்தில் பிங்களை யென்னுந் தாசிக்குப் புத்திரியாய்ப் பிறந்தாள். அவளும் அழகிற் சிறந்த தன்புத்திரிக்கு மனோரமை யென்று பெயரிட்டு மகிழ்ச்சியோடு வளர்த்துவர அப்பெண் சுக்கில பக்ஷத்துச் சந்திரன்போல நாடோறும் விருத்தியடைந்தாள். அப்பொழுது பிங்களையானவள் தன் புத்திரியின் சாதகபலனைக் கேட்கவிரும்பி ஓர் சோதிடனிடம் சாதகத்தைக் காண்பிக்க, அவன் இந்தச் சாதகத்திற்குரிய பெண் பிரசித்தியுள்ளவளாய், எல்லாச சாஸ்திரங்களையும் அறிந்து, குலதருமத்தின் வழுவாமல், சிவபத்தியிற் சிறந்து, உண்மைஞானம் பெற்று, முடிவிற் சிவசாயுச்சியம் அடைவாள் என்றான். அதுகேட்ட பிங்களை மனமகிழ்ந்து அவனுக்கு மிகுந்த திரவியங் கொடுத்தனுப்பினாள் மனோரமை எல்லா வித்தைகளையும் அவ்வவ்வாசிரியர்பாற் கற்றுத் தேர்ச்சி பெற்று யௌவனதசை யடைந்தாள். பின்பு திருநந்திதேவரே பரத சாஸ்திர ஆசிரியவடிவங்கொண் டெழுந்தருளி வந்து அவளுக்கு நடனவித்தையை அப்பியாசஞ் செய்வித்தார். பின் பிங்களை மனோரமையைச் சகசிராக்ஷமூர்த்திக்குக் கைங்கரிய தாசியாகச் செய்ய, அவளும் காலந்தோறும் ஈசுவர கைங்கரியத்தை மனமகிழ்ச்சியோடு செய்து வந்தாள்.

சருவதருமங்களையும் அறிந்தவளாயும் விசேடமாகக் குலதருமத்தைத் தெரிந்தவளாயும், மிக்க அழகுள்ளவளாயும் யுவதியாயும் நடனகீதவாத்தியங்களில நிரம்பத் தேர்ந்தவளாயும் உள்ள அந்த மனோரமையைப் பார்த்தவர்களெல்லாம் மன்மத பாணத்திற்கு வசப்பட்டார்கள். அவள்குலதருமத்தை அறிந்தவளாதலால் சூரியன் உதித்து ஆறுநாழிகைக்குமேல் பன்னிரண்டுநாழிகைக்குள் தன்னைத் தேடி வருபவனை அன்றைக்கு நாயகனாகக்கொண்டு அன்றைக்குப் போதிய திரவியத்தை அவன்பாற்பெற்று, அவன் வசப்பட்டுப் போகங்களை அனுபவிப்பாள் ஒருவனை நாயகனாக வரித்தபிறகு மற்றொருவன் ஆயிரம் பொன் கொடுத்தாலும் அவனை விரும்பமாட்டாள் இவ்வாறு சிலநாட்செல்ல ஒருநாள் சிவபெருமான் அவளுடைய உண்மைத்தன்மையை உலகத்தார்க்கு வெளிப்படுத்தக் கருதி வைகாசி மாதத்து நவமிதினத்தில் பகற் சங்கவகாலத்தில் எண்பது வயதுள்ள பிராமணவடிவங்கொண்டு விபூதி உருத்திராக்ஷங்களைத் தரித்துக் கோலூன்றிக் கொண்டு முதுமையால் ஒன்றோடொன்று பின்னுங் கால்களை யுடையவராய்த் தோழிமார்களுடன் கீதம்பாடிக்கொண்

டிருக்கும் அவள் வீட்டுக்கு வந்தார். அவரைக் கண்ட மனோரமை யானவள் ஆச்சரியமடைந்து எழுந்து சிரத்தையோடு எதிர்கொண்டு சென்று பாதங்களில நமஸ்கரித்து அஞ்சலிசெய்து தாழ்மையுடன் நின்று, பிராமணோத்தமரே! உம்முடைய பாதாரவிந்த வழிபாட்டால் நான் புண்ணியசாலியானேன். இவ்வாசனத்தில் இருங்கள். யாது கருதி இங்கு வந்தருளினீர். நான் வாராங்கலை. என்னால் உமக்குச் செய்யத்தக்க பணியாது? என்று அன்போடு கேட்கச்; சிவபெருமானாகிய கிழவர் புன்னகை செய்து, மனோரமையே! நீ சாஸ்திரங்களில் தேர்ந்தவளென்றும், காமசாஸ்திரத்தில் விசேடப்பயிற்சி யுடையவள் என்றும் கேள்விப்பட்டேன். சாஸ்திரங்களை யறிந்தவளாயும் அழகிற் சிறந்தவளாயும் யௌவனதசை யுடையவளாயும் உள்ள உன்னைப் பார்த்த எந்தப் புருஷன்றான் உன்னைவிட்டுப் போவான். உன் அழகாலும் யௌவனத்தாலும் நீ என் மனத்தைக் கவர்கின்றாய். உன்னைச் சேர்ந்து உனது அதராமிர்தபானஞ் செய்து சுகிக்க விருப்பமுற்று வந்தேன் என்றார். மனோரமை அதுகேட்டு எல்லாத் தருமங்களையும் அறிந்த பிராமணோத்தமரே! வாலிபத்திற் போகங்களை யனுபவித்த உம்மைப்போன்ற வயோதிகர்களுக்குச் சிவபெருமானே கதியாகும். உமக்கு எண்பது வயசுக்குமேல் இருக்குமே, தலை நடுங்கிவிட்டதே. சம்போகம் என்பது யௌவனதசையுடையவர்களின் காரியமன்றோ. உமக்குத் தக்கதன்றே. அன்றியும் இது அற்பசுகமேயாகும். இதைவிட்டுச் சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித்து நித்தியசுகத்தை யடையுமென்றாள். அது கேட்ட கிழவர் பெண்ணே! நீ அறிந்த சாஸ்திர நிச்சயத்தை நானும் அறிவேன். சிவபெருமான் ஒருவரே எங்கும் நிறைந்தவரென்றும் எல்லாவற்றிற்கும் சாக்ஷியா யுள்ளவரென்றும் அவரன்றி ஒன்றும் இல்லையென்றும் எனக்குத் தெரியும். நான் சிவன் என்று எவன் தியானிக்கிறானோ அவன் சிவனாகிறான். நானும் நீயும் காணப்படுகின்ற மற்றப் பதார்த்தங்களும் ஆகிய எல்லாம் சிவரூபமாகும். எந்தப் பரமேசுவரன் சருவபூதங்களிலும் அந்தர்யாமியாய் இருக்கின்றாரோ அவரே நான் என்று எப்பொழுதும் தியானஞ் செய்கிறேன். இது நிற்க. பலவார்த்தைகளாற் பயனில்லை. நான் உன்னைச் சேரவேண்டுமென்று ஆசைகொண்டு உன் தருமத்தை அநுசரித்து இச் சங்கவ காலத்தில் வந்தேன், நீ இன்றைக்கு என்னைத் தள்ளிவிட்டு வேறொருவனை வரித்தாயானால் உன்குல தருமம் கெடும் என்றார். உடனே மனோரமை தருமசிந்தையுடன் அதற்கிணங்கி அன்றைக்கு

வேண்டிய திரவியங்கேட்க அவர் தங்கமாற்றமைந்த தமது உருத்தி ராக்கத்தைக் காண்பித்துப், பெண்ணே! இது அதிக விலையுயர்ந் தது. இதை அணிந்து கொள்ளக் கடவா யென்று தமது கழுத்தி லுள்ள உருத்திராக்க மாலையைக் கொடுக்க, அதனைத் தன் இரு கைகளாலும் வாங்கித் தன் கழுத்தில் அணிந்துகொண்டு அவரை நமஸ்கரித்துச் சுவாமீ! இன்றுதினம் தேவரீர் எனக்கு நாயகனாக இருக்கவேண்டு மென்று வரித்து, இன்று பகல்கழித்து இரவு இங்கு வரவேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

அதுகேட்ட சிவபெருமானாகிய கிழவரும் மனமகிழ்ச்சியோடு சென்று இராத்திரியில் வர, மனோரமையானவள் அவரை விருப் புடன் அழைத்து அந்தப்புரத்திற் புட்பசயனத்தில் உட்காரச் செய்து வணக்கத்துடன் உபசரித்தாள். சிவபெருமான் அவள் மன வுண்மையை வெளிப்படுத்துதற் பொருட்டு வியாதியினாற் பீடிக்கப்பட்டவர்போல் இருமிக்கொண்டு உயிர் நீங்கினவர் போற் படுத்திருந்தார். மனோரமை அவரை மரணமடைந்தாரென்று நிச் சயித்து மிகத் துக்கமுற்று, நாத! நாத! என்று கதறி மார்பிலடித் துக்கொண்டு ஆ! அபராதசகேசுவரரே! ஆ!! கைலாசநாயகியே! நான் என்ன செய்வேன். எங்கே போவேன், இனி என் பிராணனிருந்து என்ன பிரயோசனம். இவ்வாறு தைதவ்விய துக்கமடைந்த என்னை யார் காப்பவர் என்று புலம்பி, விடிந்தவுடன் தனது பந்துக்களோடு அப்பிரேதத்தை மயானத்திற்குக் கொண்டு போய்ச் சிதியில் ஏற்றிப் பத்தியுடன் அநுமரணங் குறித்துத் தானும் ஒக்கப் படுத் தாள். சிவபெருமான் அவளுடைய மிகுந்தபத்தியையும் பதிவிரதா தருமத்தையும் நோக்கி மகிழ்ந்து, வந்தவர்கள் யாவரும் பார்த்திருக் கக், கைலாசநாயகியாருடன் இடபவாகனத்தி லெழுந்தருளி வந்து அவளை இடபத்திலேற்றிக்கொண்டு சென்று சகசிராக்ஷமகாலிங்கத் தில் மறைந்தருளினார். இவ்வாச்சரியத்தைப் பார்த்த பட்டணத்துச் சனங்களெல்லாம் மனமகிழ்ந்து, மனோரமையைப் பாக்கியவதி யென்று புகழ்ந்து, சகசிராக்ஷப் பெருமானிடத்தில் மிக்க அன்பு செய்துவந்தார்கள். இந்தச் சரித்திரம் மிகவும் இரகசியமாயுள்ளது. இதைப் படித்தவர்களும் கேட்டவர்களும் சர்வாபீஷ்டங்களையும் அடைவார்கள்.

## மனோரமைச் சருக்கம் - முற்றிற்று.

# பலசுருதிச் சருக்கம்.

முனிவர்களே! உத்தமமாயும் சருவசித்திகளையுந் தரத்தக்கதாயும் இரகசியமாயும் உள்ள காளாகருவன மகிமையை எல்லா வுலகங்களி லும் உள்ளவர்கள் உயதற்பொருட்டு உங்களுக்குச் சொன்னேம். கைலாசநாயகியின் கதை சிவாபராதங்களை நீக்கும். சகசிராக்ஷ மகேசுவாசரித்திரம் சிவபத்தியைக கொடுக்கும். இச்சரித்திரங்களை எவன் சாவதானமாய்ச் சிரத்தையுடன் கேட்பானே அவனுக்குச சருவசித்திகளும் உண்டாகும். அடுத்த பிறவி கிடையாது. கைலாச நாயகியின் கதையைப் படிப்பவனுங் கேட்பவனும் எல்லாப் பாவங களும் நீங்கிச் சிவலோகத்தை யடைவார்கள். கன்னிகையை விரும்புகிறவன் கன்னிகையையும் வெற்றியை விரும்புகிறவன் வெற் றியையும் இராச்சியத்தை விரும்புகிறவன் இராச்சியத்தையும் வேறு காமியங்களை விரும்புகிறவன் அவ்வக் காமியங்களையும் மோக்ஷத்தை விரும்புகிறவன் மோக்ஷத்தையும் க்ஷமாவதி தேவியார் கிருபையால் உடனே பெறுவான். அரசனுயுள்ளவன் க்ஷமாவதியாரின் சரித்திரத் தைக் கேட்டுப் பின்பு யுத்தத்துக்குச் சென்றால் சத்துருககளை யெல் லாம்வெனறு சக்கரவர்த்தியாவான். சகசிராக்ஷரின் மகிமையைச் சிரத் தையுடன் கேட்பவன் பாவங்களினறும் நீங்கிப் புத்திரபௌத்திரர்க ளுடன் மகிழ்ச்சியா யிருப்பான். கைலாச நாயகியின் சரித்திரத்தை வியாதி யுள்ளவர்களைக் குறித்துப் படித்தால் அவர்களுக்கு வாத பித்த சிலேட்டுமங்களா லுண்டாகிய வியாதிகள் யாவும் நீங்கிவிடும். இதைப் படிப்பவனுககுங் கேட்பவனுக்கும் அகாலமரணமில்லை. சர்ப்பங்களாற் பயமில்லை. அவன் சரீரத்தில் விஷம் ஏறாது. அவன் மூடனுகவும் ஊமையாகவும் இருக்கமாட்டான். அவனுக்கு வேறு தீங்குகள் உண்டாகமாட்டா. உற்பாதம், ஆபிசாரம் என்னும் இவைகளாற் பயங்கிடையாது அன்றியும் கஙகை முதலிய தீர்த் தங்களெல்லாவற்றினுங் கோடி ஸ்நானஞ் செய்த பலன் கிடைககும். சருவபாதகங்களும் அணுகமாட்டா. பஞ்சபருவங்களிலும் ஜன்ம நக்ஷத்திரத்திலும் எவர்கள் இந்த மகிமையைப் புண்ணிய க்ஷேத் திரத்திலிருந்து படிக்கிறுர்களோ அவர்களுக்கு மனேபீஷ்டங்களை யெல்லாம் ஈசுவரன் கொடுப்பார். எவன் இத்தல மகிமையைப் புத் தகமாக எழுதிப் பிராமணனுக்குக் கொடுக்கிறுனே அவனுடைய அநேக ஜன்மபாவங்கள் நசித்துவிடும். அவனே அபராத சகேச

ருடைய கிருபைக்குப் பாத்திரம். சகசிராக்ஷமகேசருடைய வைகாசி யுற்சவ காலத்திலும் தேவியின் உற்சவகாலத்திலும் இந்த மகிமையை அவசியம் படிக்கவேண்டும். சேஷதீர்த்த முதலிய தீர்த்தங்களில் எவன் ஸ்நானஞ் செய்கிருனே அவனுக்குச் சிவாபராத முதலிய தோஷங்கள் நீங்கிவிடும். காளாகருவனக்ஷேத்திரத்தில் சகசிராக்ஷ பரமேசுவரர் பராசத்தியுடன் அநேக லீலைகளைச் செய்து தனது பத்தர்களுக்கு அநுக்கிரகஞ் செய்வதற்காக லிங்கரூபமாய் விளங்குகின்ருர். உலகத்திற் சிலவிடத்தில் தலமகிமையும் சிலஇடத்தில் தீர்த்த மகிமையும் சில இடத்தில் மூர்த்தி மகிமையும் இருக்கும். இங்கு மூன்று மகிமையும் பொருந்தி யிருப்பதால் இந்தத் தலமே எல்லாத் தலங்களினும் உயர்ந்ததாகும். இதற்குச் சமானம் பூமியில் வேறு கிடையாது. இந்தக் காளாகருவன மகிமையைப் படிப்பவர்களும் படிப்பிக்கின்றவர்களும் கேட்கின்றவர்களும் கேட்பிக்கின்றவர்களும் இம்மையில் வேண்டிய சுகங்களை யநுபவித்து மறுமையிற் சிவபெருமானுடைய திருவடி நிழலையடைவார்கள். எவன் சகசிராக்ஷ மகிமையை யெழுதிப், புத்தகத்தில் ஈசுவரனைப் பத்தியுடன் பூசித்து, அதனைச் சொல்லுகிற ஆசாரியனையும் பூசித்துத் தாழ்ந்த ஆசனத்திலிருந்து முயற்சியுடன் மௌனமாய்க் கேட்கின்ருனே அவனுக்குச் சருவசித்திகளையும் ஈசுவரன் கொடுப்பார். உலகத்தில் சகசிராக்ஷ மகேசுவரருடைய மகிமையைப் படித்தலும் கேட்டலும் இக போகம் சுவர்க்கம் மோக்ஷம் இவைகளுக்குக் காரணம். இதிற் சந்தேகமில்லை. பூமியில் எந்த இடத்தில் இந்த மகிமைபடனம் நடக்குமோ அந்த இடத்தில் சகசிராக்ஷபரமேசுவரர் சாந்நித்தியஞ் செய்கிருர். எவன் இம் மகிமையை வேறுவார்த்தை பேசாமற் சிரத்தையுடன் கேட்பானே அவனுடைய பாவங்கள் நெருப்பினுற் பஞ்சுப் பொதி போல்நாசமாய்விடும். மிருதிகளின் தாற்பரியங்களை விளக்கும் இந்தப் புராணத்தை நிந்திப்பவர்கள் ரௌரவ முதலிய நரகங்களை யடைவார்கள். இப்புராண படனத்திற்கு இடையூறு செய்கிற அதமர்கள் போகமத்திய காலத்தில் துன்பம் அநுபவித்து நசித்துப் போவார்கள். இந்தமகிமையைப் படிக்கிற ஆசாரியனை வியாசமுனிவராகக் கருதி வஸ்திர ஆபரணங்களாற் பூசித்து யானையின்மேலேற்றி

வாத்திய முழங்க வீதியை வலம் வருவித்து வஸ்திரம் பொன் முதலியவைகளைக்கொடுத்து அவனிடத்தில் அநுக்கிரகம் பெறவேண்டும். இவ்வாறு சிரத்தையுடன் சிரவணஞ் செய்பவன் இவ்வுலகிற் சகல போகங்களையும் அநுபவித்து மறுமையிற் சிவசாயுச்சிய பதவியைப் பெறுவான். காளாகருவனத்தை வணங்குகின்றேன். கைலாசநாயகியை வணங்குகின்றேன் சகசிராக்ஷமகேசுவரரை வணங்குகின்றேன். ஆதிவிடங்கேசரை வணங்குகின்றேன் என்று சூதமுனிவர் நைமிசாரணியத்திலுள்ள சௌனகர் முதலிய முனிவர்களுக்குச் சொல்லியருளினர்.

பலசுருதிச் சருக்கம் - முற்றிற்று.

திருக்காருயிற் புராணம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



ஓம் இச்சாசக்தி ஜ்ஞானசக்தி க்ரியாசக்தி ஸமன்விதாய நமஃ

ஓம் [illegible] நமஃ

ஓம் [illegible] நமஃ

ஓம் [illegible] நமஃ

ஸ்ரீஸ்வாம்யஷ்டோத்தரசதம் ஸம்பூர்ணம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பிகா அஷ்டோத்தர சத நாமாவளி.

---

ஓம் கைலாஸநாயிகாயை நம:

ஓம் தேவ்யை நம:

ஓம் காருண்யவிக்ரஹாயை நம:

ஓம் த்ரிவிஷ்டபைகவிஜ்ஞானதக்ஷஶ்ரவணாம்புஜாயை நம:

ஓம் சதுர்தஶாயதஸம்பஜ்ஞாயை நம:

ஓம் ஸச்சிதானந்தவிக்ரஹாயை நம:

ஓம் பைரவபத்நீஸமாராத்யாயை நம:

ஓம் ஶ்ரீசக்ரஸ்தவாஸாக்ஷ்யை நம:

ஓம் ஜ்ஞாநாந்தத்வபீடபரிநீதாம்ப்ரஸமார
ஹாயை நம:

ஓம் ஶ்ரீமத்ஸ்தநீஸ்யஸைகதாவநிவாஸிந்யை நம:

ஓம் விந்த்யவாஸிந்யை நம:

ஓம் பராநந்தாயை நம:

ஓம் காமாக்ஷீபரதேவ்யை நம:

ஓம் கார்ணேஶாதிஸம்ஸ்துதஸுமஹாவிமானவாஸிந்யை நம:

ஓம் கடாக்ஷஸ்ருஷ்டிகாரணாயை நம:

ஓம் ஸர்வலோகநாயிகாயை நம:

ஓம் க்ஷீராப்திஸம்ஸ்துதாயை நம:

ஓம் க்ஷயவ்ருத்திவிவர்ஜிதாயை நம:

ஓம் ஶ்ரீசந்த்ரநந்தினீலோகஸாம்ராஜ்யதாயின்யை நம:

𑌓𑌂 𑌸𑍍𑌵𑌾𑌗𑌤𑌾𑌨𑌨𑍍𑌦𑌨𑌾𑌥𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌨𑌾𑌯𑌿𑌕𑌾𑌯𑍈

𑌓𑌂 𑌜𑌗𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌜𑌨𑌨𑍍𑌯𑍈

𑌓𑌂 𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌪𑌹𑌾𑌯𑍈

𑌓𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌯𑍈

𑌓𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌹𑌾𑌰𑌕𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑍈

𑌇𑌤𑌿 𑌅𑌮𑍍𑌬𑌿𑌕𑌾 𑌅𑌷𑍍𑌟𑍋𑌤𑍍𑌤𑌰𑌶𑌤𑌂 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍.

